# ARIVUNUL THIRATTU

**selection of choice educative tamil poetry)**

(ANNOTATED)

**Part II.**

---

BY

A. KARMEGA KONAR.

LECTURER IN TAMIL, AMERICAN COLLEGE, MADURA.

**Second Edition.**

MADURA:

E. M. GOPALAKRISHNA KONE,

---

*Rights Reserve* 1926. *(Price As. 10.*

## நூலாசிரியர் குறிப்பு.

---

இந்நூல் 27—11—25ல் அச்சிட்டு இவ்வருடத்தில் வெளிப்படுத்தப்பட்டது. தமிழ்நாடு இதனை விருப்புடன் ஏற்றுக்கொண்டமையின், இரண்டாம் பதிப்பும் இவ்வருடத்திலேயே வெளிவருகின்றது. இப்பதிப்பில் சில அச்சுப் பிழைகள் திருத்தப்பட்டனவன்றி பாட்டுக்களேனும் அங்கங்களேனும் மாறவில்லை. இந்நூலைப் பாடமாக வைத்தாதரித்த கலாசாலை ஆசிரியர்கட்கு எனது மனப்பூர்வமான வந்தனத்தைச் செலுத்துகின்றேன்.

அமெரிக்கன் காலேஜ்,<br>
மதுரை.<br>
4—7—26.

இங்ஙனம்,<br>
ஆ. கார்மேகக்கோன்.

# அறிவுநூல் திரட்டு

## குறிப்புரையுடன்.


தொகுத்தோர்

ஆ. கார்மேகக் கோனாரவர்கள்,

தலைமைத் தமிழாசிரியர்,

அமெரிக்கன் காலேஜ்,

மதுரை.



இரண்டாம் பதிப்பு.

மதுரை, புத்தக வியாபாரம்,

இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்,

வெளியிட்டது.

[illegible]ட்] 1926 [விலை அணா 10.

# உள்ளுறை.


| வணக்கப்பகுதி. | பக்கம். |
|---|---|
| 1. கடவுள் வணக்கம ... ... ... | 1 |
| 2. நாமகள் வணக்கம் ... ... ... | ,, |
| 3. தமிழ்த்தெய்வ வணக்கம் ... ... | ,, |
| **தமிழ்ப்பெருமை.** | |
| 1. பரஞ்சோதியார் திருவிளையாடல் ... | 3 |
| 2. காஞ்சிப்புராணம் ... ... ... | ,, |
| 3. தனிப்பாடல்கள் ... ... ... | ,, |
| 4. மதுரைக்கலம்பகம் ... ... ... | 4 |
| **II. அருட்பாப்பகுதி.** | |
| 1. முதற்றிருவந்தாதி ... ... ... | 4 |
| 2. இரண்டாந்திருவந்தாதி ... ... | 7 |
| 3. திருமொழி ... ... ... | ,, |
| 4. பெருமாள் திருமொழி ... ... | 11 |
| 5. திருமாலை ... ... ... | 13 |
| 6. தேவாரம் (திருஞானசம்பந்தர்) ... | 15 |
| 7. தேவாரம் (திருநாவுக்கரசர்) ... ... | 19 |
| **IV. நீதிப்பகுதி.** | |
| 1. நாலடியார் ... ... ... | 23 |
| 2. திரிகடுகம் ... ... ... | 27 |
| 3. ஆசாரக்கோவை ... ... ... | 28 |
| 4. சிறுபஞ்சமூலம் ... ... ... | 31 |
| 5. அறநெறிச்சாரம் ... ... ... | 32 |
| 6. வள்ளுவர் நேரிசை ... ... ... | 35 |
| **V. சரிதைப்பகுதி.** | |
| 1. நைடதம் ... ... ... | 38 |
| 2. நளவெண்பா ... ... ... | 48 |

3. குசேலோபாக்கியானம் ... ... 56
4. தேம்பாவணி ... ... ... 65

VI. பல்துறைப் பகுதி.

1. அரசியல் ... ... ... 74
2. கையறுநிலை ... ... ... 77
3. வீரத்தாய்மார் ... ... ... 80
4. வஞ்சினக்காஞ்சி ... ... ... 81

VII. வருணனைப்பகுதி.

1. பாண்டிநாடு ... ... ... 83
2. சேரநாடு ... ... ... 84
3. சோழநாடு ... ... ... ,,
4. கோசலநாடு ... ... ... 85
5. ஏமாங்கதநாடு ... ... ... ,,
6. நிடதநாடு ... ... ... 86
7. திணைமயக்கம் ... ... ... ,,
8. மதுரைமாநகர் ... ... ... 87

VIII. பிரபந்தப்பகுதி.

1. அறப்பளீசுரசதகம் ... ... ... 89
2. குமரேச சதகம் ... ... ... ,,
3. திருவேங்கட சதகம்... ... ... 90
4. தண்டலையார் சதகம் ... ... 91
5. மதுரைக்கலம்பகம் ... ... ... 92
6. மீனாக்ஷியம்மைபிள்ளைத்தமிழ் ... ,,
7. முத்துக்குமாரசுவாமிபிள்ளைத்தமிழ் ... 93
8. திருச்செந்தூர்ப்பிள்ளைத்தமிழ் ... 94
9. அழகர்கலம்பகம் ... ... ... 95
10. திருவரங்கக்கலம்பகம் ... ... ,,

IX. தனிப்பாடற் பகுதி ... ... ... 97

குறிப்புரை ... ... ... 104

ஸ்ரீ

# அறிவுநூல் திரட்டு.

## 1. வணக்கப் பகுதி.

### கடவுள் வணக்கம்.

உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவினை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசரண் நாங்களே.

கம்பர்.

### நாமகள் வணக்கம்.

தவளத் தாமரை தாதார் கோயில்
அவளைப் போற்றுதும் அருந்தமிழ் குறித்தே.

### தமிழ்த் தெய்வ வணக்கம்.

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்,
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநற் றிருநாடும்
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன் இருந்தபடி இருப்பதுபோல்,
கன்னடமுங் களிதெலுங்குங் கவின்மலையாளமுந்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்
ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே. 2.

சுந்தரம் பிள்ளை.

பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்
திருப்பிலே யிருந்து வையை யேட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோர் என
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளருகின்றாள். 3.

வில்லிபுத்தூரர்.

மறைமுதற் கிளந்த வாயான் மதிமுகிழ் முடித்த வேணி
இறைவர்தம் பெயரைநாட்டி யிலக்கணம் செய்யப் பெற்றே
அறைகடல்வரைப்பிற்பாடையனைத்தும்வென் றாரியத்தோ
டுறழ்தருதமிழ்த்தெய்வத்தை யுண்ணினைந்தேத்தல்செய்வாம். 4.

கருணைப்பிரகாசர்.

---

## II. தமிழ்ப் பெருமை.

கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணி டைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ. 1.

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை
உண்ட பாலனை அழைத்ததும் எலும்புபெண் ணுருவாக்

கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததும் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்? 2.

பரஞ்சோதியார் திருவிளையாடல்.

வடமொழியைப் பாணினிக்கு
வகுத்தருளி அதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை
உலகமெலாந் தொழுதேத்தும்
குடமுனிக்கு வலியுறுத்தார்
கொல்லேற்றுப் பாகர்எனில்
கடல்வரைப்பின் இதன்பெருமை
யாவரே கணித்தறிவார். 3.

சிவஞானமுனிவர் காஞ்சிப்புராணம்.

ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருள்கடியும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ். 4.

தனிப்பாடல்.

பைங்க ணிளம்பகட்டின் மேலானைப் பான்மதிபோல்
திங்கள் நெடுங்குடையின் கீழானை—அங்கிரந்து
நாம்வேண்ட நன்னெஞ்சே நாடுதிபோய் நானிலத்தோர்
தாம்வேண்டும் கூடற் றமிழ். 5.

தனிப்பாடல்.

சொல்லென்னும் பூம்போது தோற்றிப் பொருளென்னும்
நல்லிருந் தீந்தாது நாறுதலான்—மல்லிகையின்
வண்டார் கமழ்தாமம் அன்றே மலையாத
தண்டாரான் கூடற் றமிழ். 6.

தனிப்பாடல்.

தமரநீர்ப் புவனம் முழுதொருங் கீன்றாள்
தடாதகா தேவியென் றொருபேர்
தரிக்க வந்ததுவும் தனிமுத லொருநீ
சவுந்தர மாறனா னதுவும்
குமரவேள் வழுதி உக்கிர னெனப்பேர்
கொண்டதும் தண்டமிழ் மதுரம்
கூட்டுண வெழுந்த வேட்கையா லெனிலிக்
கொழிதமிழ்ப் பெருமையா ரறிவார்
பமரம்யாழ் மிழற்ற நறவுகொப் பளிக்கும்
பனிமலர்க் குழலியர் பளிக்குப்
பானிலா முன்றில் தூநிலா முத்தின்
பந்தரில் கண்ணிமை யாடா
தமரர்நா டியரோ டம்மனை யாட
ஐயநுண் நுசுப்பள வலவென்
றமாரும் மருளும் தெளிதமிழ்க் கூடல்
அடலரா அலங்கல்வே ணியனே. 7.

குமரகுருபரர் மதுரைக்கலம்பகம்.

---

## III. அருட்பாப் பகுதி.

### 1. முதற்றிருவந்தாதி.

விஷ்ணுமூர்த்தியைப் பரம்பொருளாகக் கொண்டொழுகி வழிபட்டு வைணவ மதத்தைத் தமிழுலகில் வளம்படுத்திய ஆழ்வார்கள் பன்னிருவர் ஆவர். அவர்கள் தாம் தாம் அநுபவித்து உய்ந்தபடியே ஆன்மாக்கள் பகவானது திருக்கல்யாண குணங்களை அநுபவித்து உய்யும் வண்ணம் பாடியருளிய தெய்வத் தன்மை பொருந்திய நாலாயிரம் பாடல்கள் கொண்ட நூல்

'நாலாயிரத் திவ்ய பிரபந்தம்' எனப்படும். இது முதலாயிரம், பெரிய திருமொழி, இயற்பா, திருவாய்மொழி என நான்கு பிரிவினை யுடையது. அவற்றுள் கீழே காணும் பகுதி இயற்பாவின் பிரிவில் முதற்றிருவந்தாதி ஆகும். இது நூறு வெண்பாக்களால் அந்தாதித் தொடையாய் அமைந்தது. அந்தாதி:—முதற் பாட்டின் ஈற்றடியின் ஓர் எழுத்தையேனும் அசையையேனும் சொல்லையேனும் சீரையேனும் அவ் அடியையேனும் அடுத்த செய்யுளின் முதலாக வரவைத்துத் தேவர்க்காயின் நூறு பாட்டளவில் பாடப்படுவது. (அந்தம் + ஆதி = அந்தத்தை ஆதியாக-வைத்துப் பாடப்படுவது) இது தமிழிலுள்ள தொண்ணூற்ருறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்று. இது தொல்காப்பியர் கூறிய யாப்பினுள் 'விருந்து' என்ற பகுதியுள் அடங்கும்

இதனை அருளிச்செய்தவர், ஆழ்வார்கள் பன்னிருவருள் முதலாழ்வார்கள் எனக் கூறப்படும் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்பவருள், பொய்கையாழ்வார் ஆவர். இவர் தொண்டைநாட்டைச் சேர்ந்த பொய்கைநாட்டில் அவதரித்தவராகையால், பொய்கையார் என வழங்கப்பட்டார். இவர் உடன் காலத்தவர் பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார். புறநானூற்றுப் பாடல்களிற் சிலவற்றையும், களவழி நாற்பதையும் பாடிய சங்கப்புலவர் ஒருவர் பொய்கையார் என்னும் பெயருடையராக அறியப்படுகிருர். அவரும், இவரும் ஒருவரே என ஒரு சாராரும், அவர் வேறு, இவர் வேறு என ஒரு சாராரும் கூறுவர். இவர் காலத்தைச் சங்கப்புலவரே இவர் என்பார். கி-பி. இரண்டாம் நூற்ருண்டென்றும், வேறென்பார் பல்லவர் காலமாகிய நான்காம், எட்டாம் நூற்ருண்டின் இடைப்பட்ட காலமென்றும் (ஏழாம் நூற்ருண்டு) கூறுவர். இவர்பாடல்கள் விஷ்ணுவுக்கும், சிவனுக்குமுள்ள ஒருமைப் பாடு கூறி, விஷ்ணுவுக்குப் பரத்துவங் கற்பித்துப் பத்திச்சுவை மலிந்து, சிறுசிறு சொற்களாலாகித் திட்பநுட்பஞ் செறிந்து விளங்குகின்றன. இவ்வாழ்வாரது வெண்பா நடை பாரதவெண்பா, நளவெண்பா என்ற வெண்பாக்களின் நடையினும் சிறந்து செந்தமிழ்வளம் தேக்கப்பெற்றது.

வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காகச்—செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன்சொன் மாலை
இடராழி நீங்குகவே என்று. 1.

அரன்நா ரணன்நாமம் ஆன்விடை புள்ளூர்தி
உரைநூல் மறையுறையும் கோயில்—வரைநீர்
கருமம் அழிப்பளிப்புக் கையதுவேல் நேமி
உருவமெரி கார்மேனி ஒன்று. 2.

மயங்க வலம்புரி வாய்வைத்து வானத்(து)
இயங்கும் எரிகதிரோன் தன்னை—முயங்கமருள்
தேராழி யால்மறைத்த தென்நீ, திருமாலே!
போராழிக் கையால் பொருது. 3.

பெற்றார் தளைகழலப் பேர்ந்தோர் குறளுருவாய்ச்
செற்றார் படிகடந்த செங்கண்மால்—நற்றா
மரைமலர்ச் சேவடியை வானவர்கை கூப்பி
நிரைமலர்கொண் டேத்துவரால் நின்று. 4.

ஆளமர் வென்றி அடுகளத்து ளஞ்ஞான்று
வாளமர் வேண்டி வரைநட்டு—நீளரவைச்
சுற்றிக் கடைந்தான் பெயரன்றே தொல்நரகைப்
பற்றிக் கடத்தும் படை. 5.

ஏற்றான்புள் ளூர்ந்தான் எயிலெரித்தான் மார்பிடந்தான்
நீற்றான் நிழன்மணி வண்ணத்தான்—கூற்றொருபால்
மங்கையான் பூமகளான் வார்சடையான் நீண்முடியான்
கங்கையான் நீள்கழலான் காப்பு. 6.

## 2. இரண்டாம் திருவந்தாதி.

இதனை அருளிச்செய்தவர் பூதத்தாழ்வார். இவர் அவதரித்த திருப்பதி திருக்கடல்மல்லை. இவர் பக்தி, ஞான, வைராக்கிய மிக்கவர். இவர் பாடல்கள் சிறுசிறு சொற்களாலாகிப் பெருகிய பொருள்களைத் தம்முட்பொதிந்து திகழ்கின்றன. பத்திச்சுவை கனிந்து மிளிர்கின்றன. இவரது காலம் பொய்கையார் காலம். இவர் தமிழ்மொழியில் மிக்க பற்றுள்ள முடையவர். தமிழை ஞானத்தமிழெனவும், தம்மைத் 'பெருந்தமிழன்' எனவுங் கூறியிருத்தலை நோக்குக. இவ்வந்தாதி இயற்பாவின் பிரிவுள் ஒன்று.

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை யிடுதிரியா—நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான். 1.

அரிய தெளிதாகும் ஆற்றலால் மாற்றிப்
பெருக முயல்வாரைப் பெற்றால்—கரியதோர்
வெண்கோட்டு மல்யானை வென்று முடித்தன்றே
தண்கோட்டு மாமலரால் தாழ்ந்து. 2.

பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன்னின்று
இருகண் இளமூங்கில் வாங்கி—அருகிருந்த
தேன்கலந்து நீட்டும் திருவேங் கடம்கண்டீர்
வான்கலந்த வண்ணன் வரை. 3.

அத்தியூ ரான்புள்ளை யூர்வான் அணிமணியின்
துத்திசேர் நாகத்தின் மேல்துயில்வான்—முத்தி
மறையாவான் மாகடல்நஞ் சுண்டான் தனக்கும்
இறையாவான் எங்கள் பிரான். 4.

## 3. திருமொழி.

இது நாலாயிரத் திவ்யபிரபந்தத்துள் முதலாயிரம் என்ற பகுதியுள் அடங்கியது. இதனை அருளிச்செய்தவர் விஷ்ணுசித்த

ரென்னும் பெரியாழ்வார். இவர் பாண்டியநாட்டில் ஸ்ரீவில்லிபுத்தூ ரில் அந்தணர் குலத்தில் பதுமையார்க்கும், முகுந்தாசார்யாருக் கும் புத்திரராக அவதரித்தவர். அத்திருப்பதியி லெழுந்தருளி யிருக்கும் பெருமாளுக்குத் திருமாலை கட்டிச்சாத்தும் திருப்பணி யை விருப்புடன் மேற்கொண்டு, அப்பூமாலையுடன் பாமாலையும் செய்தணிந்து பணிந்துவாழ்ந்தவர். இவர் மதுரையில் பாண்டியஅர சனால் வித்தியாசுல்கமாகக் கட்டிவைத்த பொற்கிழியை அவனது பெருஞ்சபையில் விஷ்ணுவே பரம்பொருள் என நிரூபணஞ் செய்து அறுத்துக் கைக்கொண்டவர். கி-பி-769-70-ல் மதுரையை ஆண்ட நெடுமாறன் என்னும் பாண்டியனாற் குலகுருவாகக் கொள்ளப்பட்டவர். இவனை இவ்வாழ்வார் தாம் பாடியருளிய திரு மாலிருஞ்சோலைத் திருப்பாசுரத்துள் குறிப்பிட்டுள்ளார். ஆகவே இவர் நெடுமாறன் காலமாகிய கி-பி-769-70-ல் வாழ்ந்திருந்தவரா வர். இப்பாண்டியனது காலம் இதுவாமென்பது மதுரையை அடுத்த ஆனைமலைக் கோயிற் கல் வெட்டாலும், வேறு சாசனத் தாலும் அறியப்பட்டது. இவர் விஷ்ணுவின் அவதாரங்களுள் பின் னையதாகிய கிருஷ்ணாவதாரத்தில் பெரிதும் ஈடுபட்டுத் தமதுபாசு ரங்களுள் கண்ணபிரானது பாலசரித இயற்கையைப் புலப்படுத் தியிருக்கும் பகுதிகள் யாவரும் பன்முறை படித் தின்புறற் பாலன.

## திருக்கோட்டியூர்ப்பதிகம்.

நாவ காரியம் சொல்லி லாதவர்<br>
  நாடொ றும்விருந் தோம்புவார்<br>
தேவ காரியம் செய்து வேதம்<br>
  பயின்று வாழ்திருக் கோட்டியூர்<br>
மூவர் காரிய முந்தி ருத்து<br>
  முதல்வ னைச்சிந்தி யாத-அப்<br>
பாவ காரிகளைப் படைத்தவ<br>
  னெங்ஙனம்படைத் தான்கொலோ. 1.

குற்ற மின்றிக் குணம்பெ ருக்கிக்
குருக்க ளுக்கனு கூலராய்ச்
செற்ற மொன்று மிலாத வண்கையி
ளூர்கள் வாழ்திருக் கோட்டியூர்
துற்றி யேழுல குண்ட தூமணி
வண்ணன் தன்னைத் தொழாதவர்
பெற்ற தாயர் வயிற்றி னைப்பெரு
நோய்செய் வான்பிறந் தார்களே. 2.

குருந்த மொன்றொசித் தானொ டுஞ்சென்று
கூடி யாடி விழாச்செய்து
திருந்து நான்மறை யோரி ராப்பக
லேத்தி வாழ்திருக் கோட்டியூர்
கருந்த டமுகில் வண்ண னைக்கடைக்
கொண்டு கைதொழும் பத்தர்கள்
இருந்த வூரி லிருக்கும் மானிடர்
எத்த வங்கள்செய் தார்கொலோ. 3.

கொம்பி னார்பொழில் வாய்க்கு யிலினம்
கோவிந் தன்குணம் பாடுசீர்
செம்பொ னார்மதிள் சூழ்செ ழுங்கழ
னியுடைத் திருக் கோட்டியூர்
நம்ப னைநர சிங்க னைநவின்
றேத்து வார்களைக் கண்டக்கால்
எம்பி ரான்தன சின்னங் களிவ
ரிவரென் றாசைகள் தீர்வனே. 4.

## அசோதை கண்ணபிரானை நீராட அழைத்தல்.

வெண்ணெய் அளைந்த குணுங்கும்
விளையாடு புழுதியும் கொண்டு
திண்ணென இவ்விரா வுன்னைத்
தேய்த்துக் கிடக்கநான் ஒட்டேன்
எண்ணெய் புளிப்பழங் கொண்டிங்,
கெத்தனை போது மிருந்தேன்
நண்ண லரிய பிரானே!
நாரணா! நீராட வாராய். 1.

கன்றுக ளோடச் செவியில்
கட்டெறும்பு பிடித்திட்டால்
தென்றிக் கெடுமாகில் வெண்ணெய்
திரட்டி விழுங்குமா காண்பன்
நின்ற மராமரம் சாய்த்தாய்!
நீபிறந்ததிரு வோணம்
இன்றுநீ நீராட வேண்டும்
எம்பிரான் ஓடாதே வாராய். 2.

அப்பம் கலந்த சிற்றுண்டி
அக்காரம் பாலில் கலந்து
சொப்பட நான்சுட்டு வைத்தேன்
தின்ன லுறுதியேல் நம்பி
செப்பிள மென்மட வார்கள்
சிறுபுறம் பேசிச் சிரிப்பர்
சொப்பட நீராட வேண்டும்
சோத்தம் பிரானிங்கே வாராய். 3.

## 4. பெருமாள் திருமொழி.

இது ஆழ்வார்கள் பன்னிருவருள் ஒருவராகிய குலசேகரப் பெருமாளால் அருளிச் செய்யப்பட்டது. நாலாயிரத் திவ்ய பிரபந் தத்துள் இது முதலாயிரம் என்ற பிரிவுள் அடங்கியது. இவர் திரு வஞ்சைக் களத்தில் சேரர் பரம்பரையில் திடவிரதருக்கு மைந்த ராய் அவதரித்துச் சேரநாட்டரசராய் விளங்கியவர். இவர் அரச ராய் இருக்குங் காலத்தே ஸ்ரீராமபிரான் மீது மிகுந்த பத்திபூண்டு அவரது சரிதையாகிய இராமாயணத்தைக் கேட்குந்தோறும் ஸ்ரீராமனுகவே தம்மைப் பாவித்து ஈடுபட்டவராதலின் இவர்க்குப் 'பெருமாள்' என்னும் திருநாமம் வந்தது. (ஸ்ரீராமனைப் பெரு மாள் என்பது சம்பிரதாயம்)

இவர் அரச செல்வத்தில் வெறுப்புற்றுத் திருவரங்கம், திரு வேங்கடம் முதலான திருப்பதிகளிற் போய் வதிதற்கு விருப்புற் றுப் பாசுரங்கள் பாடி அத்தலங்கள்தோறும் போய் வதிந்து பெரு மாளைத் தொழுது பாசுரங்கள் பாடியருளியவர். இவர் பாடல்கள் மிக்க உருக்கமும் கனிவும் நயமும் வாய்ந்தவை. இவர் பாடலில் இராமாயணக்கதை நிரம்பியுள்ளன. இவர் வடமொழியில் முகுந்த மாலை என்னும் நூல் இயற்றியுள்ளார்.

இவர் காலம்:—கி-பி-1070-ல் பட்டமடைந்த முதலாம் குலோத்துங்கனது ஆட்சியின் பதினேட்டாம் ஆண்டாகிய கி-பி-1088-ல் திருவரங்கம் பெரிய கோயிலில் பொறிக்கப்பட்ட சாச னத்துள் இவரது ஓர் பாசுரத்தின் பகுதி காணப்படுதலாலும், வேறு காரணங்களாலும் இவர் காலம் பதினொன்றும் நூற்றாண் டிற்கு 2 நூற்றாண்டு முன்னராகலாம்.

### அழகிய மணவாளன் விஷயம்.

இருளிரியச் சுடர்மணிகள் இமைக்கும் நெற்றி
யினத்துத்தி யணிபணம் ஆயிரங்களார்ந்த
அரவரசப் பெருஞ்சோதி யனந்த னென்னும்
அணிவிளங்கும் உயர்வெள்ளை யணையை மேவித்

திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும்
கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்டென்
கண்ணிணைகள் என்றுகொலோ களிக்கும் நாளே?

விற்றுவக் கோட்டம்மான் விஷயம்.

தருதுயரந் தடா யேலுன் சரணல்லாற் சரணில்லை
விரைகுழுவுமலர்ப்பொழில்சூழ் விற்றுவக்கோட்டம்மானே!
அரிசினத்தா லீன்றதாய் அகற்றிடினும்-மற்றவள்தன்
அருள்நினைந்தே அழுங்குழவி யதுவேபோன் றிருந்தேனே.

மீன் நோக்கும் நீள்வயல்சூழ் விற்றுவக்கோட்டம்மா!-என்
பால் நோக்கா யாகிலுமுன் பற்றல்லாற் பற்றிலேன்
தான்நோக்கா தெத்துயரஞ் செய்திடினும்-தார்வேந்தன்
கோல் நோக்கி வாழும் குடிபோன் றிருந்தேனே. 2.

வெங்கட்டிண் களிறடர்த்தாய்! விற்றுவக் கோட்டம்மானே!
எங்குப்போ யுய்கேன்? உன் இணையடியே யடையலல்லால்
எங்கும்போய்க் கரைகாணா தெறிகடல்வாய் மீண்டேயும்
வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே. 3.

எத்தனையும் வான்மறந்த காலத்தும் பைங்கூழ்கள்
மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும் மற்றவைபோல்
மெய்த்துயர்வீட் டாவிடினும் விற்றுவக்கோட் டம்மா! என்
சித்தமிக வுன்பாலே வைப்ப னடியேனே. 4.

கண்ணபுரத்தோளிர் காகுத்தன் தாலாட்டு.

மன்னுபுகழ்க் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே!
தென்னிலங்கைக் கோன்முடிகள் சிந்துவித்தாய்! செம்பொன்சேர்
கன்னிநன்மா மதிள்புடைசூழ் கணபுரத்தென் கருமணியே!
என்னுடைய இன்னமுதே இராகவனே! தாலேலோ. 5.

பாராளும் படர்செல்வம் பரதநம்பிக் கேயருளி
ஆராவன் பிளையவனோ டருங்கானம் அடைந்தவனே!
சீராளும் வரைமார்பா! திருக்கண்ண புரத்தரசே!
தாராரும் நீண்முடியென் தாசரதி! தாலேலோ. 6.

சுற்றமெல்லாம் பின்தொடரத் தொல்கானம் அடைந்தவனே
அற்றவர்கட் கருமருந்தே! அயோத்திநகர்க் கதிபதியே!
கற்றவர்கள் தாம்வாழும் கணபுரத்தென் கருமணியே!
சிற்றவைதன் சொல்கொண்ட சீராமா! தாலேலோ. 7.

## 5. திருமாலை.

இது நாலாயிரத்திவ்ய பிரபந்தத்தின் நான்கு பெரும் பிரிவினுள் முதலாயிரத்தைச் சேர்ந்தது. இதனை அருளிச்செய்தவர் **தொண்டரடிப்பொடியாழ்வார்.** 'இவரது பிள்ளைத் திருநாமம்'விப்ரநாராயணன்' என்பது. இவர் சோழநாட்டில் திருமண்டங்குடியில் ஸ்ரீ வைஷ்ணவ சோழியர் குலத்தில் அவதரித்தவர். இவர் திருவரங்கம் சென்று அரங்கநாதருக்குத் துளவத் தொண்டுசெய்ய எண்ணி திருநந்தவனக் கைங்கிரியம் செய்திருந்தவர். 'திருமங்கையாழ்வார் திருவரங்கத் திருமதில் கட்டுங் காலத்தில் தொண்டரடிப்பொடியாழ்வார் பெருமாளுக்குத் திருமாலை சேர்க்கிற இடம் எதிர்ப்பட அவ்விடத்தை விலக்கிக் கட்டிக்கொண்டு போனார்' என்று பின்பழகிய ஜீயர் திருமங்கையாழ்வார் சரித்திரத்துள் உரைத்திருக்கிறபடியால் இவ்வாழ்வார் திருமங்கை மன்னன் காலத்தவராவர். திருமங்கையாழ்வார் கி-பி-785-க்கு முன்னிருந்த வைரமேகன் என்னும் 2-வது நந்திவர்மனைத் தம்பாசுரத்துள் இறந்த காலத்தில் வைத்துப்பாடியிருத்தலின் அவர் அவனது ஆட்சியிறுதிக் காலமாகிய கி-பி-785-க்குப் பின்னர் 3-வது நந்திவர்மன் காலமாகிய கி பி-835-க்குள் இருந்தவராவர். ஆகலின் இவ்வாழ்வார் எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்தவராவர்.

இவ்வாழ்வார் பிறவியின் இழிவை எடுத்துக்கூறி, அதனைக் கடந்து, அழிவில் இன்பமாகிய திருநாம வைபவத்தைத் தாம்

அநுபவிக்கச்செய்து திருமாலை உவப்பிக்கிற செய்தி இத் திருமாலையிற் கூறப்பெறுகின்றது. இப்பாமாலை பூமாலை போல்வதாகலின் திருமாலை யென உவமையாகு பெயராய் வந்தது.

பச்சைமா மலைபோல் மேனிப் பவளவாய்க் கமலச் செங்கண்
அச்சுதா! அமர ரேறே! ஆயர்தம் கொழுந்தே! யென்னும்
இச்சுவை தவிர யான்போ யிந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகரு ளானே!

வேதநூற் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவ ரேலும்
பாதியும் உறங்கிப்போகும் நின்றதிற் பதினை யாண்டு
பேதைபா லகன தாகும் பிணிபசி மூப்புத் துன்பம்
ஆதலாற் பிறவி வேண்டேன் அரங்கமா நகரு ளானே. 2.

வண்டினம் முரலும் சோலை மயிலினம் ஆலும் சோலை
கொண்டல்மீ தணவும் சோலை குயிலினம் கூவும் சோலை
அண்டர்கோன் அமரும் சோலை அணிதிரு வரங்கம் என்னா
மிண்டர்பாய்ந் துண்ணும்சோற்றை விலக்கிநாய்க்கிடுமினீரே.

மெய்யர்க்கே மெய்யனாகும் விதியிலா என்னைப் போலப்
பொய்யர்க்கே பொய்யனாகும் புட்கொடி யுடையகோமான்
உய்யப்போம் உணர்வினார்கட் கொருவனென் றுணர்ந்தபின்னை
ஐயப்பா டறுத்துத் தோன்றும் அழகனூர் அரங்கமன்றே.

விரும்பிநின் றேத்த மாட்டேன் விதியிலேன் மதியொன்றில்லை
இரும்புபோல் வலியநெஞ்சம் இறையிறை யுருகும்வண்ணம்
சுரும்பமர் சோலைசூழ்ந்த அரங்கமா கோயில்கொண்ட
கரும்பினைக் கண்டுகொண்டென் கண்ணிணை களிக்குமாறே.

குரங்குகள் மலையை நூக்கக் குளித்துத்தாம் புரண்டிட்டோடித்
தரங்கநீர் அடைக்கலுற்ற சலமிலா அணிலும் போலென்
மரங்கள்போல் வலியநெஞ்ச வஞ்சனேன் நெஞ்சுதன்னால்
அரங்கனார்க் காட்செய்யாதே அளியத்தேன் அயர்க்கின்றேனே. 6.

# தேவாரம்.

## 6. திருஞானசம்பந்தர்.

இராஜராஜ சோழன் வேண்டுகோட்படி நம்பியாண்டார் நம்பியால் வகுக்கப்பட்ட சைவத்திருமுறைகள் பதினொன்றனுள் முதலேழும் தேவாரம் எனப்படும்.

தேவாரம்-என்பது தே+வாரம் எனப் பிரிந்து தெய்வத்தன்மைபொருந்திய தெய்வப்பாடல் எனப்பொருள்படும். இனி தே-தெய்வத்தைத் துதிக்கும், வாரம்-பாடல் எனப் பொருள் கொள்ளுதலுமொன்று. தே+ஆரம் எனப்பிரித்து, சிவபெருமானுக்குப் பூமாலைபோல் சாத்தப்பெறும் பாமாலை எனப் பொருள்கூறுவாருமுளர். இது சைவர்களால் தமிழ்மறை எனக் கொண்டாடிப் பக்தியோடு ஓதப்படுவது. அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற நால்வரும் சைவசமய குரவர்கள் எனப்படுவார்கள். இவர்களுள், முதன் மூவர் பாடியதுமே தேவார மெனப்படும். அடியில் வரும் தேவாரப் பாடல்கள் திருஞானசம்பந்தர் அருளியவை. இவர் சோழநாட்டில் சீகாழிப்பதியில் கௌணியகோத்திரத்தாராய சிவபாதஹிருதயர் என்னும் அந்தணர்க்கும் அவர் தம் மனைவியார், பகவதியார் என்பார்க்கும் அருந்தவப் புதல்வராய்த்தோன்றி, மூன்றாம் ஆண்டில் உமாதேவியாரால் சுரந்து ஞானப்பாலூட்டப்பட்டுப் பான்மணம்மாறுப் பச்சிளங் குழந்தையாய அப்போதே 'தோடுடைய செவியன்' என்ற திருப்பாட்டைப் பாடியவர். பின்னர் தமிழ்நாட்டு நூற்றுக்கணக்கான பல தலங்கள்தோறும் சென்று, சிவபெருமான்மீது திருப்பதிகங்கள் ஓதிச் சைவந்தழைக்கத் தமிழ் தழைக்கச் செய்தவர். ஆண்பனையைப் பெண்பனையாக்கல், எலும்பைப் பெண்ணுக்கல் முதலிய அற்புதச் செயல்களைப் புரிந்தவர். பாண்டியநாட்டில் சமணமதம் பரவியிருத்தலை அறிந்து வந்து, சமணரோடு அனல்வாதம், புனல்வாதம் செய்து, அவர்களை வென்று, சமணர்களால் தீர்க்கமுடியாத பாண்டியனது வெப்புநோயையும், கூனையும் நீக்கி, அவனைச் சைவனாக்கியவர். தமது 16 ஆண்

டுக்குள்ளேயே இத்தகைய அற்புதச் செயல்களைப்புரிந்து, பின் தம் தந்தையார் விருப்பின்படி திருமணத்துக் கிசைந்து, அம்மணம் நடந்ததும் பெருமணம் என்னும் தலத்துட் சென்று ஆங்குத் தோன் றிய அருட்பெருஞ்சோதியில் மணத்துக்கு வந்திருந்த பெருஞ்சனத் திரளுடன் புகுந்து கலந்தருளியவர். இவரை முருகக்கடவுளின் அம்சமெனக் கூறுவர். இவர் தமது 16 ஆண்டுக்குள் பாடிய திருப் பாடல்கள் 16000 எனப் பெரியபுராணம் கூறும். இப்போது கிடைத்திருப்பவை 384 பாடல்களாகும். இவரது பாடல்கள் இயல் இசைத் தமிழ்களின் கூறுபாடு கலந்து பத்திச்சுவை ததும்பி இயற்கைவருணனை மிகுந்திருக்கும். இவர் சித்திர கவிகளும் பல பாடியுள்ளார். இவரும் அப்பரும் ஒரே காலத்தவர். இவர் மிக இளையராயிருந்த காலத்து அப்பர் முதிர்ந்து தளர்ந்திருந்தார். சிறுத்தொண்டரும் சம்பந்தரும் ஒரே காலத்தவர். சிறுத்தொண் டர் திருப்பணியை இவர் தமது செங்காட்டங்குடிப் பதிகத்தில் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

சிறுத்தொண்டர் கி-பி-630-ல் காஞ்சியிலிருந்த நரசிம்மவர் பல்லவனிடம் மந்திரியாயிருந்து, அவனுக்காகக் குந்தளநாட்டர சன் இரண்டாம் புலிகேசியின் தலைநகராகிய பழைய வாதாபி நகரத்தை அழித்தவர். கி-பி-641-ல் சீனயாத்திரிகர் யுவான்சுவாங் இந்நகரம் நன்னிலையிலிருந்ததாகக் குறித்துள்ளார். ஆகவே சிறுத் தொண்டரால் வாதாபி அழிந்தது. கி-பி-642-ல். சிறுத்தொண்டர் சேனாதிபத்தியம் நீங்கிச் செங்காட்டங்குடியில் திருத்தொண்டு மேற்கொண்டிருந்த காலத்தில்தான் சம்பந்தர் அவரைச்சந்தித் தது. இவற்றை யெல்லாம் நோக்கச் சிறுத்தொண்டர் காலத்தவ ராகிய திருஞானசம்பந்தரதுகாலம் ஏழாம் நூற்றாண்டின் இடைப் பகுதி என்பது தெளிவு. (இற்றைக்கு 1300-வருஷத்திற்கு முன்.

தோடு டையசெவி யன்விடை ஏறியோர்
தூவெண் மதிசூடிக்
காடு டையசுட லைப்பொடி பூசியென்
உள்ளங் கவர்கள்வன்

ஏடு டையமல ரான்முனை நாள்பணிந்
　　தேத்த அருள்செய்த
பீடு டையபிர மாபுர மேவிய
　　பெம்மான் இவன் அன்றே. 1.

புலன்ஐந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
　　அறிவழிந்திட் டைம்மே லுந்தி
அலமந்த போதாக, "அஞ்சேல்" என்
　　றருள்செய்வான் அமருங் கோயில்,
வலம்வந்த மடவார்கள் நடமாட
　　முழவதிர மழையென் றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரம்ஏறி
　　முகில்பார்க்கும் திருவை யாறே. 2.

ஊன்பாயும் உடைதலைகொண் டூரின்
　　பலிக்குழல்வார், உமையாள் பங்கர்,
தான்பாயும் விடையேறும் சங்கரனார்,
　　தழலுருவர், தங்கும் கோயில்,
மான்பாய வயலருகே மரம்ஏறி
　　மந்திபாய் மடுக்கள் தோறும்
தேன்பாய மீன்பாயச் செழுங்கமல
　　மொட்டலரும் திருவை யாறே. 3

காடுபயில் வீடு, முடை ஓடுகலன்,
　　மூடும்உடை ஆடை புலிதோல்,
தேடுபலி ஊணதுடை வேடமிகு
　　வேதியர் திருந்து பதிதான்,

நாடகம தாடமஞ்ஞை, பாடஅரி,
கோடல்கை மறிப்ப, நலமார்
சேடுமிகு பேடைஅனம் ஊடிமகிழ்
மாடமிடை தேவூ ரதுவே. 4.

என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே!
இருங்கடல் வையத்து
முன்னம் நீபுரி நல்வினைப் பயனிடை?
முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி
வாணனை வாயாரப்
பன்னி ஆதரித் தேத்தியும் பாடியும்
வழிபடும் அதனாலே. 5.

கொட்டமுழ விட்டவடி வட்டணைகள்
கட்டநட மாடி, குலவும்
பட்டநுதல் கட்டுமலர் மட்டுமலி
பாவையொடு மேவு பதிதான்,
வட்டமதி தட்டுபொழி லுட்டமது
வாய்மைவழு வாத மொழியால்
சட்டகலை எட்டுமரு வெட்டும்வளர்
தத்தைபயில் சண்பை நகரே. 6.

மங்கையர்க் கரசி, வளவர்கோன் பாவை,
வரிவளைக் கைம்மட மானி,
பங்கயச் செல்வி, பாண்டிமா தேவி
பணிசெய்து நாடொறும் பரவப்

பொங்கழல் உருவன், பூதநா யகன்,நால்
வேதமும் பொருள்களும் அருளி,
அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவாய் ஆவதும் இதுவே. 7.

கண்காட்டும் நுதலானும் கனல்காட்டும் கையானும்
பெண்காட்டும் உருவானும் பிறைகாட்டும் சடையானும்
பண்காட்டும் இசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டில் உறைவானும் விடைகாட்டும் கொடியானே.

---

## தேவாரம்.

### 7. திருநாவுக்கரசர்.

இவர் நடு நாட்டின் ஒரு பகுதியாகிய திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில் வேளாண்குலத்தில் அவதரித்தவர். இவரது பிள்ளைப் பெயர் மருணீக்கியார் என்பது. அப்பர், வாகீசர் என்ற மறுபெயர்களும் இவர்க்கு வழங்கும். இவர் இளம்பருவத்திலேயே கலைபல பயின்று, உலக நிலையாமையை உணர்ந்து, துவரத்துறந்து, சமணமதமாகிய ஆருகதமே உண்மை மத மெனக்கருதி, அம்மதத்தைத் தழுவிப் பாடலி புத்திரமென்னும் நகரை அடைந்து, சமணப் பள்ளியில் தருமசேனர் என்னும் பட்டப் பெயரோடு சமணத்துறவிகளுள் சிறந்தோராய் விளங்கியிருந்தனர். இவரைத் திரும்பவும் சைவ சமயத்துக்கு இழுக்கக் கருதிய இவரது தமக்கையாரின் வேண்டுகோட்கிரங்கி, சிவபெருமான் இவர்க்குச் சூலை நோயை உண்டாக்கி வருந்தும்படி செய்ய, இவர் ஆருகத மதத்தை விட்டுத் திருவதிகையில் திருத்தொண்டு செய்திருந்த தம் தமக்கையாரை அடைந்து, அவரது உபதேசம் பெற்று, சிவபெருமான் மீது பத்திமிக்கவராய்த் திருக்கோயில் சென்று. 'கூற்றயினவாறு' என்று தொடங்கித் திருப்பதிகம் பாடச் சூலைநோய் நீங்கித் தலங்கடோறும் சென்று பதிகங்கள் பாடியருளினர். இவ

ரது நாவன்மையை வியந்து சிவபெருமான் இவர்க்கு 'நாவுக்கரசர்' என்ற திருப்பெயரைச் சார்த்தியருளினர். இவர் சைவ மதத்தைத் தழுவியமைக்குப் புழுக்கங்கொண்ட சமணர், தங்கள்மதத்தவனாகிய மகேந்திரவர்மன் என்னும் பல்லவ அரசனைத் தூண்டி, அப்பரை நீற்றறையிலிட்டும், தலையை யிடற யானையை ஏவியும், கல்லிற் கட்டிக் கடலிலிட்டும் பலவாறு வருத்தும்படி செய்தனர்; இவ்விடர்களையெல்லாம் நாவுக்கரசர் சிவபெருமான் திருவருளால் கதிரவன் முன் பனியென நீங்கப்பெற்றார். வருத்திய அரசன் தன் தவற்றை உணர்ந்து, அப்பர் சுவாமிகளை வணங்கிச் சைவனாகிப் *பாடலிபுத்திரத்திலிருந்த சமணப்பள்ளிகளை இடித்துத் திருவதிகையில் சிவபெருமானுக்குத் தன் பெயரால் குணபதீச்சுரம் என்னும் ஆலயம் கட்டினன். இவர் திருஞானசம்பந்தரது அற்புத நிகழ்ச்சிகளைக் கேள்வியுற்று, அவரையடைந்து கண்டு, அவருடன் அளவளாவியிருந்தார். பின்னர் பல தலங்கடோறும் சென்று பதிகம் பாடி மீண்டும் வந்து அவரிடத்து மிக்க பத்தியும் ஊற்றமும் உள்ளவராயிருந்தார். கால்தேயக் கைதேய உடல்தேயக் கைலாயஞ்சென்று, சிவபெருமான் அருள்பெற்று ஓர் பொய்கையில் மூழ்கித் திருவையாற்றில் எழுந்த அற்புத நிகழ்ச்சியுடையவர். இவரது பாவன்மையை இவரது பெயரே செவ்விதின் விளக்கும். ஜைனபௌத்தரோடு வாதுசெய்துவென்று சைவத்தைத் தழைக்கச் செய்தவர். இவரது காலம்:-கி-பி 570-க்குச் சிறிது முன்பிருந்து 650-வரையும் இருந்தவராகக்கூற ஆதாரமுண்டு.

மாசில் வீணையும், மாலை மதியமும்,
வீசு தென்றலும், வீங்கிள வேனிலும்,
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே. 1.

விறகில் தீயில், நன் பாலின் படுநெய் போல்,
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்;
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே. 2.

* பாடலி புத்திரம்-திருப்பாதிரிப்புலியூர் என்பர்.

மனிதர்காள், இங்கே வம்மொன்று சொல்லுகேன்
கனிதந் தால்கனி உண்ணவும் வல்லிரே?
புனிதன் பொற்கழல் ஈசன் எனும்கனி
இனிது சாலவும் ஏசற்ற வர்கட்கே. 3.

கங்கை ஆடில்என்? காவிரி ஆடில்என்?
கொங்கு தண்கும ரித்துறை ஆடில்என்?
ஓங்கு மாகடல் ஓதநீர் ஆடில்என்?
எங்கும் ஈசன் எனாதவர்க் கில்லையே. 4.

பேரா யிரம்பரவி வானோர் ஏத்தும்
பெம்மானைப், பிரிவிலா அடியார்க் கென்றும்
வாராத செல்வம் வருவிப்பானை,
மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னைத்
திரிபுரங்கள் தீஎழத்திண் சிலைகைக் கொண்ட
போரானைப், புள்ளிருக்கும் வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 5.

நாமார்க்கும் குடிஅல்லோம்; நமனை அஞ்சோம்;
நரகத்தில் இடர்ப்படோம்; நடலைஇல்லோம்;
ஏமாப்போம்;பிணிஅறியோம்;பணிவோம் அல்லோம்;
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை;
தாமார்க்கும் குடியல்லாத் தன்மை யான
சங்கரன்நல் சங்கவெண் குழைஓர் காதின்
கோமாற்கே நாம்என்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடிஇணையே குறுகி னோமே. 6.

சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து
தாரணியொடு வான்ஆளத் தருவ ரேனும்

மங்குவார் அவர்செல்வம் மதிப்போம் அல்லோம்
மாதேவர்க் கேகாந்தர் அல்லர் ஆகில்;
அங்கம்எலாம் குறைந்தழுகு தொழுநோ யாராய்
ஆஉரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பர் ஆகில்
அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவு ளாரே. 7

பற்றிநின்ற பாவங்கள் பாற்ற வேண்டில்,
பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டில்,
சுற்றிநின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டில்,
சொல்லுகேன் கேள்,நெஞ்சே, துஞ்சா வண்ணம்
'உற்றவரும் உறுதுணையும் நீயே' என்றும்
'உன்னை அல்லால் ஒருதெய்வம் உள்கேன்'என்றும்
'புற்றரவக் கச்சார்த்த புனிதா' என்றும்,
பொழில்ஆரூ ரா,என்றே போற்று நில்லே. 8

---

# IV. நீதிப்பகுதி.

## 1. நாலடியார்.

இது சங்கமருவிய நூல்கள் எனப்படும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகும். இது பல ஜைநமுனிவர்கள் இயற்றிய பாடற்றொகுதியினின்றும் தேர்ந்தெடுத்த நானூற்றின் தொகுதியாகும். அதனால் இது நாலடி நானூறு எனவும் வழங்கும். "எண்ணாயிரம் ஜைநமுனிவர்கள் தங்கள் நாடு பஞ்சத்தால் வருந்தியதால் பாண்டியன் சபையில் வந்து, அவனால் புரக்கப்பட்டிருந்தவர்கள். பின்னர்த் தங்கள் நாடு மழைவளமிகுந்து, நாடு நாடாயினமையின் தங்கள் நாட்டுக்குச் செல்லப் பாண்டியனிடம் விடைவேண்ட, அவன் அவர்கள் பிரிவுக்கு உடன்படாது காலந்தாழ்த்தமையின் முனிவர்கள் ஒரு நாளிரவில் அறமுதற்பொருள் நான்கும் புலப்பட ஒவ்வோர் வெண்பாவைப் பாடித் தங்கள்தங்கள் ஆசனத்தின் கீழ் வைத்துப் போய்விட்டனர். மறு நாட்காலைப் புலவரைக் காணாது வருந்திய பாண்டியன் அவர்கள் ஆசனங்களைச் சோதித்த போது அப்பாடல்கள் அகப்பட்டன. அவைகள் ஒன்றற்கொன்று பொருளொவ்வாமல் பல திறப்பட்டனவாயிருந்தமையின் அவற்றையெல்லாம் எடுத்து வையையாற்றில் போகட்டு விடும்படி அரசன் சொல்ல, அங்ஙனமே அவைகளை ஆற்றிலிட்டபோது இந்நானூறு வெண்பாக்களும், ஆற்று வெள்ளத்தில் நாலடித்தூரம் எதிரேறிச் சென்றன. இதனைக்கண்ட பாண்டியன் விம்மிதங்கொண்டு, அவற்றைத் திரட்டி ஓர் நூலாக்கினன். ஆற்றில் நாலடித்தூரம் எதிரேறிச் சென்றமையின் நாலடியார் எனப் பெயர் வழங்கலாயிற்று" என இந்நூலுக்கு ஓர் வரலாறு வழங்குகின்றது. இஃதன்றியும், பல்வேறு காலத்தில் பல்வேறு புலவர்களால் பாடியிருந்தவற்றைப் பின்னர் ஓர் சமயத்து, ஓர் நூலாகத் தொகுக்கப்பட்டது இது; என்ற கொள்கையுமுண்டு. இந்நூல் ஜைனப் புலவர்கள் பாடியதென்பது நச்சினார்க்கினியர் கொள்கை; அது சிந்தாமணி 1089-ம் செய்யுள் உரையில் "பிறரும் இச்சமயத்தார், "சிறுகா பெருகா முறை பிறழ்ந்து வாரா" (நாலடி, பழவினை 10) என்றதனாலும் உணர்க" என இவர் உரைத்ததனால் அறிக.

இந்நூலுக்குப் பால் இயல் அதிகார அடைவு வகுத்துக் கடவுள் வாழ்த்தும், உரையும் இயற்றியவர் 'பதுமனார்' என்ற ஜைனப் புலவர். இந்நூல் சுருங்கச் சொல்லல் அழகினும், சொல்லருமை பொருளருமையினும், திட்ப நுட்பங்களினும், நீதியினும், அணிவகைகளினும், நடையினும் தமிழ் வேதமாகிய திருக்குறளுக்கு அடுத்த படியாக வைத்துப் பாராட்டப்படுவது. திருக்குறள் கற்பார் இதனை முதலிற் கற்றல்முறை. "ஆலும் வேலும் பல்லுக்குறுதி 'நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி" "பழகு தமிழ்ச் சொல்லருமை நாலிரண்டில்" என்று வழங்கும் மூதுரைகளே இந்நூலின் பெருமைக்குச்சான்று. இது அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என மூன்று பெரும் பிரிவையும், அதனுட்பிரிவாகிய நாற்பது அதிகாரங்களையும் உடையது. ஒவ்வோர் அதிகாரத்துக்கும் 10 வெண்பாக்களாக அதிகார விஷயத்தைப் பல்திறப்படவிரிக்கும். இதனிற்காணும் வெண்பாக்கள் பல நேரிசை வெண்பாக்கள், சில இன்னிசை வெண்பாக்கள். இந்நூற்சுவையை நுகர்ந்த மேனாட்டுப் புலவரான டாக்டர் ஜி. யூ. போப் என்ற இங்கிலீஷ் பாதிரியார் "இந்திய ஜனங்களுக்குள் தமிழரே முதன்மை பெற்றவர்; அவர்களை அங்ஙனம் செய்தது குறளும், நாலடியுமே" எனக் கூறியுள்ளார். இந்நூல் ஜைனர் பாடியதாயினும் இதனுள் கூறப்படும் நீதிகளும், விதிகளும் யாவரும் மேற்கொள்ளத்தக்கவைகளே. இந்நூல் தமிழுரையாசிரியர் எல்லாராலும் எடுத்தாளப்பட்ட பெருமையுடையது. இந்நூலின் காலம் 1800 வருடங்களின் முன்னதாகும்.

பொருள்.

வடுவிலா வையத்து மன்னிய மூன்றில்  
நடுவண தெய்த இருதலையும் எய்தும்.  
நடுவண தெய்தாதான் எய்தும் உலைப்பெய்  
தடுவது போலுந் துயர்.

ஊக்கம்.

*நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும், தன்னை*
*நிலைகலக்கிக் கீழிடு வானும், நிலையினும்*
*மேன்மேல் உயர்த்து நிறுப்பானும், தன்னைத்*
*தலையாகச் செய்வானும் தான்.* 2.

*பெருமுத் தரையர் பெரிதுவந் தீயும்*
*கருனைச்சோ றார்வர் கயவர்.—கருனையைப்*
*பேரும் அறியார் நனிவிரும்பு தாளாண்மை*
*நீரும் அமிழ்தாய் விடும்.* 3.

ஈகை & ஈயாமை.

*கடிப்பிடு கண்முரசம் காதத்தோர் கேட்பர்.*
*இடித்து முழங்கியதோர் யோசனையோர் கேட்பர்.*
*அடுக்கிய மூவுலகுங் கேட்குமே; சான்றோர்*
*கொடுத்தார் எனப்படுஞ் சொல்.* 4.

*உடாஅதும் உண்ணாதும் தம்முடம்பு செற்றும்*
*கெடாஅத நல்லறமுஞ் செய்யார்.—கொடாஅது*
*வைத்தீட்டி னார்இழப்பர். வான்றோய் மலைநாட!*
*உய்த்தீட்டும் தேனீக் கரி.* 5.

கல்வி.

*கல்வி கரையில: கற்பவர் நாள்சில;*
*மெல்ல நினைக்கிற் பிணிபல. தெள்ளிதின்*
*ஆராய்ந் தமைவுடைய கற்பவே; நீரொழியப்*
*பாலுண் குருகிற் றெரிந்து.* 6.

*வைப்புழிக் கோட்படா: வாய்த்தீயிற் கேடில்லை:*
*மிக்க சிறப்பின் அரசர் செறின்வவ்வார்:*
*எச்ச மென ஒருவன் மக்கட்குச் செய்வன*
*விச்சைமற றல்ல பிற.* 7.

குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும்,
மஞ்சள் அழகும், அழகல்ல.—நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்
கல்வி அழகே அழகு. 8.

நட்பு.

யானை யனையவர் நண்பொரீஇ, நாயனையார்
கேண்மை தழீஇக் கொளல்வேண்டும். யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும். எறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கும் நாய். 9.

கனைகடற் றண்சேர்ப்ப! கற்றறிந்தார் கேண்மை
நுனியிற் கரும்புதின் றற்றே.—நுனிநீக்கித்
தூரிற்றின் றன்ன தகைத்தரோ, பண்பிலா
ஈர மிலாளர் தொடர்பு. 10

யாமாயின் எம்மில்லம் காட்டுதும்; தாமாயின்
காணவே கற்பழியு மென்பார்போல் நாணிப்
புறங்கடை வைத்தீவர், சோறும்; அதனால்
மறந்திடுக செல்வர் தொடர்பு. 11.

இறப்பவே தீய செயினும்தன் நட்டார்
பொறுத்தல் தகுவதொன் றன்றோ?—நிறக்கோங்(கு)
உருவவண் டார்க்கும் உயர்வரை நாட
ஒருவர் பொறையிருவர் நட்பு. 12.

மகன்.

செந்நெலா லாய செழுமுளை மற்றுமச்
செந்நெலே யாகி விளைதலால்,—அந்நெல்
வயனிறையக் காய்க்கும் வளவயல் ஊர!
மகனறிவு தந்தை யறிவு. 13.

சிதலை தினப்பட்ட ஆல மரத்தை
மதலையாய் மற்றதன் வீழுன்றி யாங்குக்
குதலைமை தந்தைக்கண் தோன்றின், தான்பெற்ற
புதல்வன் மறைப்பக் கெடும். 14.

தான்கெடினும் தக்கார்கே டெண்ணற்க. தன்னுடம்பின்
ஊன்கெடினும் உண்ணார்கைத் துண்ணற்க.—வான்கவிந்த
வையக மெல்லாம் பெறினும், உரையற்க;
பொய்யோ டிடைமிடைந்த சொல். 15.

---

## ௨. திரிகடுகம்.

கீழ்க்கணக்கில் ஒன்றான இந்நூலை இயற்றிய ஆசிரியர், நல்லாதனார் என்பார். இவர் வைணவமதத்தினர். நூலின் முதற்பாட்டில் "இம்மூன்றுந்திரிகடுகம் போலும் மருந்து" என்பதினால் இந்நூலின் பெயர்க்காரணம் அறியப்படும். திரிகடுகம்:—சுக்கு, திப்பிலி, மிளகு—ஒவ்வொரு வெண்பாவிலும் மும்மூன்று நீதிகள் உரைக்கப்படும்.

உண்பொழுது நீராடி உண்டலும், என்பெறினும்
பால்பற்றிச் சொல்லா விடுதலும்,—தோல்வற்றிச்
சாயினும் சான்றாண்மை குன்றாமை, இம்மூன்றும்
தூஉயம் என்பார் தொழில்.

வள்ளன்மை பூண்டான்கண் செல்வமும், உள்ளத்
துணர்வுடையா னோதிய நூலும்,—புணர்வின்கண்
தக்க தறியும் தலைமகனும், இம்மூவர்
பொத்தின்றிக் காழ்த்த மரம். 3.

உப்பின் பெருங்குப்பை நீர்படியின் இல்லாகும்.
நட்பின் கொழுமுளை பொய்வழங்கின் இல்லாகும்.
செப்ப முடையார் மழையனையர். இம்மூன்றும்
செப்ப நெறிதூரா வாறு. 4.

நல்விருந் தோம்பலின் நட்டாளாம். வைகலும்
இல்புறஞ் செய்தலின் ஈன்றதாய்.—தொல்குடியின்
மக்கட் பெறலின் மனைக்கிழத்தி. இம்மூன்றும்
கற்புடையாள் பூண்ட கடன். 5.

பிறர் தன்னைப் பேணுங்கால் நாணலும், பேணா
ரன்வேறு கூறின் பொறையும்,—அறவினையைக்
ராண்மை போல ஒழுகலும், இம்மூன்றும்
ராண்மை யென்னும் செருக்கு. 6.

## 3. ஆசாரக்கோவை.

யாரும அறிய அறனாய மற்றவற்றை
ஆசாரக்கோவை எனத்தொகுத்தான் தீராத்
திருவாயிலாய திறல்வண் கயத்தூர்ப்
பெருவாயின் முள்ளியென் பான்"

என்னும் தற்சிறப்புப் பாயிரத்தால் அறியப்படும். இதனால் ஆரிட நூல்களில் தாமறிந்தவற்றைத் தொகுத்து இந்நூலைக் கோத்தார் என்பதறியப்படும். (ஆரிடநூல் ரிஷிகள் அருளிய ஸ்மிருதிகள்) இந்நூலிற் காணப்படும் ஆசாரங்கள் வடமொழியிலுள்ள சுக்கிர ஸ்மிருதியோடு ஒத்திருக்கிறதென்பர். இந்நூலின் சிலபாக்கள் பத்

துப்பாட்டு, சிந்தாமணி முதலிய பழந்தமிழ் நூலுரைகளில் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. இதனால் இந்நூற் பெருமை விளங்கும் இந்நூலுட் கூறப்படும் ஆசாரங்களுட் சில உடலுக் குறுதி பயப்பன, சில உயிர்க்குறுதி பயப்பன. இந்நூலுள் நேரிசை வெண்பா, இன்னிசைவெண்பா, பஃறொடை வெண்பா, சிந்தியல் வெண்பா என்ற வெண்பா விகற்பங்கள் பயின்றிருக்கின்றன இந்நூலாசிரியர் காலம் கடைச்சங்க காலம்

## ஆசாரமூலம்.

நன்றியறிதல், பொறையுடைமை, இன்சொலோ
டின்னாத எவ்வுயிர்க்குஞ் செய்யாமை, கல்வியோ
டொப்புர வாற்ற அறிதல், அறிவுடைமை,
நல்லினத் தாரோடு நட்டல்; இவையெட்டும்
சொல்லிய ஆசார வித்து. 1.

## நாட்காலைக்கடன்.

வைகறை யாமம் துயிலெழுந்து, தான்செய்யும்
நல்லறமும ஒணபொருளும் சிந்தித்து, வாய்வதின்,
தந்தையுந் தாயுந் தொழுதெழுக என்பதே
முந்தையோர் கண்ட முறை. 2.

## நீராடும்முறை.

உடுத்தல்லால் நீராடார்; ஒன்றுடுத் துண்ணார்;
உடுத்தாடை நீருட் பிழியார்; விழுத்தக்கார்,
ஒன்றுடுத் தென்றும் அவைபுகார் என்பதே
முநதையோர் கண்ட முறை. 3.

## சயனமுறை.

கிடக்குங்கால் கைகூப்பித் தெய்வந் தொழுது,
வடக்கொடு கோணம் தலைவையார், மீக்கோள்
உடற்கொடுத்துச் சேர்தல் வழி. 4.

### அட்டிற் பணி ஒழுக்கம்.

காட்டுக் களைந்து, கலங்கழீஇ, இல்லத்தை
ஆப்பிநீர் எங்குந் தெளித்துச் சிறுகாலை,
நீர்ச்சால் கரகம் நிறைய மலரணிந்
தில்லம் பொலிய அடுப்பினுள் தீப்பெய்க;
நல்ல துறல் வேண்டு வார். 5.

### ஐங்குரவர் வணக்கம்.

அரசன் உவாத்தியாயன் தாய்தந்தை தம்முன்
நிகரில் குரவர் இவர்; இவரைத்
தேவரைப் போலத் தொழுதெழுக என்பதே
யாவருங் கண்ட நெறி. 6.

### உண்ணும் விதி.

உண்ணுங்கால் நோக்கும் திசைகிழக்குக் கண்ணமர்ந்து
தூங்கான் துளங்காமை நன்கிரீஇ யாண்டும்
பிறிதியாதும் நோக்கான் உரையான தொழுதுகொண்(டு)
உண்க உகாஅமை நன்கு. 7.

### உண்ணும் சுவை முறை.

கைப்பன வெல்லாம் கடை, தலை தித்திப்ப,
மெச்சும் வகையால் ஒழிந்த இடையாகத்
துய்க்க முறைவகையால் ஊண். 8.

### ஆசாரம் அடையும் உபாயம்.

நந்தெறும்பு தூக்கணம் புட்காக்கை என்றிவைபோல்
தங்கருமம் நல்ல கடைப்பிடித்துத் தங்கருமம்
அப்பெற்றி யாக முயல்பவர்க் காசாரம்
எப்பெற்றி யானும் படும். 9.

---

## 4. சிறுபஞ்சமூலம்.

*கீழ்க்கணக்கு நூலுள் ஒன்றான இதனைச்செய்தவர் மாக்காயன் மாணாக்கர் காரியாசான் என்பார். இது,

'மல்லிவர் தோள் மாக்காயன் மாணாக்கன் மாநிலத்துப்
பல்லவர் நோய்நீக்கும் பாங்கினால்—கல்லா
மறுபஞ்சம் தீர்மழைக்கை மாக்காரி யாசான்
சிறுபஞ்ச மூலம்செய் தான்."

என்னும் இந்நூல் தற்சிறப்புப் பாயிர வெண்பாவால் அறியப்படும். செவ்வியம் சித்திரமூலம், கண்டுபாங்கி, பேரரத்தை, சுக்கு ஆகிய பஞ்சமூலங்களால் (மூலம் வேர்) வடித்த கஷாயம் உடற்பிணியை நீக்கி நலம் தருவதுபோல் இந்நூலில் ஒவ்வொருபாவிலும் உரைக்கப் பெற்றுள்ள பொருள்கள் மக்களுயிர்க்கு உறுதி தருவன வெனக்கொண்டு உவமையாகு பெயராய் வந்தது இந்நூற்பெயரென்க. இதிற்கூறப்பெறும் நீதிகள் மக்கள்யாவரும் மேற்கொண்டு போற்றுந் திறத்தன. இந்நூலாசிரியர் காலம்-கடைச்சங்க காலம்.

கொன்றுண்பான்நாச்சாம். கொடுங்கரிபோவான்நாச்சாம்.
நன்றுணர்வார் முன்கல்லான் நாவுஞ்சாம்.—ஒன்றானும்
கண்டுழி நாச்சாம் கடவான். குடிப்பிறந்தான்
உண்டுழி நாச்சாம் உணர்ந்து. 1.

தேவரே கற்றவர். கல்லாதார் தேருங்கால்
பூதரே. முன்பொருள் செய்யாதார்—ஆதரே.
துன்பமி லேம்பண்டு யாமே வனப்புடையேம்.
என்பார் இருகா லெருது. 2.

---

* நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி—மாமூலம்
இன்னிலைசொல் காஞ்சியுட னேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு.
என்ற வெண்பாவால் கீழ்க்கணக்கு நூல்களை அறிக.

வான்குருவி கூடரக்கு வாலுலண்டு கோற்றருதல்
தேன்புரிந்தி யார்க்கும் செயலாகா—தாம்பரீஇ.
வல்லவர் வாய்ப்பன வென்னார் ஒரோவொருவர்க்
கொல்காதோ ரொன்று படும். 3.

வருவாய்க்குத் தக்க வழக்கறிந்து, சுற்றம்
வெருவாமை வீழ்ந்து, விருந்தோம்பித்—திருவாக்கும்.
தெய்வதையும் எஞ்ஞான்றும் தேற்ற வழிபாடு
செய்வதே பெண்டிர் சிறப்பு. 4

வார்சான்ற கூந்தல்! வரம்புயர, வைகலும்
நீர்சான் றுயரவே, நெல்லுயரும்,—சீர்சான்ற
தாவாக் குடியுயரத், தாங்கருஞ்சீர்க் கோவுயர்தல்
ஓவா துரைக்கும் உலகு. 5

தான்பிறந்த இன்னிலைந்து, தன்னைக் கடைப்பிடித்துத்,
தான்பிற ரால்கருதற் பாடுணர்ந்து,—தான்பிறரால்
சாக வெனவாழான், சான்றோரால் பல்யாண்டும்
ஆக வெனவாழ்தல் நன்று. 6.

---

## 5. அறநெறிச்சாரம்.

இதனை இயற்றிய ஆசிரியர் முனைப்பாடியார் என்பவர். இவர் மதம் ஜைநம். இதனுள் கூறப்படும் அறமும் ஒழுக்கமும் எல்லோரும் மேற்கொள்ளத்தக்கவை. இந்நூலில் 222 வெண்பாக்கள் உள்ளன. இந்நூலின் காலம் 500 வருஷங்களுக்கு முற்பட்டதென லாம். இதில் சில பாட்டுக்கள் "பிரசங்காபரணம்" என்னும் புறத் திரட்டில் சேர்க்கப்பட்டுள்ளன. இந்நூல் சிறந்த அறநெறிகளை [illegible]யிடுகின்றமையால் 'அறநெறிச்சாரம்' எனப்பெயர்பெற்றது.

இதில் அருக சமயத்தையும் அருகக்கடவுளையும் அருகவாகமத்தையும் சில பாக்கள் சிறப்பாகக் கூறுகின்றன. பல பாடல்களில் உருவக முகத்தான் விளங்க வைத்திருக்கும் கருத்துக்கள் படிப்போருள்ளத்தில் பசுமரத்தாணிபோல் பதிந்து நிற்கும் செவ்வி வாய்ந்துள்ளன.

## அறத்தினியல்பு.

மெய்ம்மை, பொறையுடைமை, மேன்மை, தவமடக்கம்,
செம்மையொன் றின்மை, துறவுடைமை,—நன்மை,
திறம்பா விரதம் தரித்தலோ டின்ன
அறம்பத்தும் ஆன்ற குணம். (1)

ஈட்டிய ஒண்பொருளும் இல்லொழியும். சுற்றத்தார்
காட்டுவாய் நேரே கலுழ்ந் தொழிவர்.—மூட்டும்
எரியின் உடம்பொழியும் ஈர்ங்குன்ற நாட!
தெரியின் அறமே துணை. (2)

## இளமையில் அறஞ்செய்தல்.

இன்சொல் விளைநிலமா ஈதலே வித்தாக
வன்சொற் களைகட்டு வாய்மை யெருவட்டி
அன்புநீர்ப் பாய்ச்சி அறக்கதி ரீன்றதோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய். (3)

## அறவுரையால் பயனெய்தார்.

கல்லா வொருவனைக் காரணங் காட்டினும்
இல்லைமற் றென்றும் அறனுணர்தல்—நல்லாய்!
நறுநெய் நிறைய முகப்பினும் மூழை
பெறுமோ சுவையுணரு மாறு? (4)

## நூல் ஆராய்தல்.

காய்த லுவத்த லகற்றி ஒருபொருட்கண்
ஆய்த லறிவுடையார் கண்ணதே.-காய்வதன்கண்
உற்ற குணந் தோன்றா தாகும்: உவப்பதன்கண்
குற்றமுந் தோன்றாக் கெடும். (5)

## சினங் கடிதல்.

உயிரும் உடம்பும் பிரிவுண்மை யுள்ளிச்,
செயிரும் சினமும் கடிந்து,—பயிரிடைப்
புற்களைந்து நெற்பயன் கொள்ளு மொருவன்போல்,
நற்பயன் கொண்டிருக்கற் பாற்று. (6)

## பொறை.

எள்ளிப் பிறருரைக்கும் இன்னாச்சொல் தன்னெஞ்சில்
கொள்ளிவைத் தாற்போல் கொடிதெனினும்-மெள்ள
அறிவென்னு நீரால் அவித்தொழுக லாற்றின்,
பிறிதெனினும் வேண்டா தவம். (7)

## அடக்கம்.

பலகற்றோம் யாமென்று தற்புகழ வேண்டா;
அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையும் காக்கும்
இலகற்றார் கண்ணும் உளவாம் பலகற்றார்க்(கு)
அச்சாணி யன்னதோர் சொல். (8)

## இல்வாழ்க்கை.

மருவிய காதல் மனையாளும் தானும்
இருவரும் பூண்டுய்ப்பின் அல்லால்—ஒருவரால்
இல்வாழ்க்கை யென்னும் இயல்புடைய வான்சகடம்
செல்லாது தெற்றிற்று நின்று. (9)

---

## 6. வள்ளுவர் நேரிசை.

இந்நூலை இயற்றிய ஆசிரியர் அரசஞ் சண்முகனார் என்பவர். இவர் மதுரையை அடுத்த சோழவந்தானூரில் வேளாண் மரபில் அரசபிள்ளை என்பார்க்கு, கி-பி-1860-ம் வருடம் புதல்வராய்த் தோன்றிச் சண்முகம்பிள்ளை என்ற இயற்பெயரோடு விளங்கியிருந் தவர். இவர் இலக்கண இலக்கிய ஆராய்ச்சியிலும் உரை நடை எழுதுவதிலும் சித்திரகவிகள் யாப்பதிலும் ஆற்றல் மிக்கவர். இவ ருடைய உரைகளும் செய்யுள்களும் திட்பநுட்பஞ்செறிந்தவை. பல வருடங்கள் மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலையிலும் சேது பதி ஆங்கில உயர்தர கலாசாலையிலும் தமிழாசிரியராக அமர்ந் திருந்தவர். ஆரவார நீர்மையில்லாதவர். அடக்கமும் சாந்தமும் தண்ணளியு மிக்கவர். திருக்குறள் சண்முகவிருத்தி, (சிலகுறளுக்கு மட்டும்) தொல்காப்பியப் பாயிரவிருத்தி முதலிய உரைகளும் ஏக பாத நூற்றந்தாதி முதலிய பிரபந்தங்களும் இவர் இயற்றியுள்ளார்.

இந்நூல், வரிசைக்கிரமமாக ஒவ்வொரு திருக்குறளையும் பின் னிரண்டடியாக வைத்து அக்குறள் நீதிக்கியைந்த ஓர் சரித்திரம் அல்லது ஓர் நீதி அடங்குமாறு பாடிய அடிகள் இரண்டை முன் னிரண்டடியாக அமைத்து இரண்டாம் அடியின் மூன்றாம் சீரில் வள்ளுவரே! என நாயனார் பெயரை முன்னிலையாக்கித் தனிச் சொல்லோடு நேரிசை வெண்பா ரூபமாய் இயற்றப் பெற்றிருத்த லின் வள்ளுவர் நேரிசை எனப் பெயர் பெற்றது: (இந்நூல் பூர்த் தியாதற்கு முன் ஆசிரியர் காலஞ்சென்றனர்.)

### கடவுள் வாழ்த்து.

சாயா இரணியனும் சாய, அவன்இளஞ்சேய்
மாயாநல் வாழ்வுறலென்? வள்ளுவரே! - ஆயின்
பிறவிப் பெருங்கடல் நீந்துவர். நீந்தார்;
இறைவன் அடிசேரா தார். (1)

### வான் சிறப்பு.

பெய்யமழை இந்திரன்பாற் பெட்டான் பொருநையொடு
வையையுடை யானுமென்னே? வள்ளுவரே!-உய்யவே
நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு. (2)

### நீத்தார் பெருமை.

கோனுக முன்சசிபாற் சென்றோன் குறுகாமே
மானுகம் ஆகியதென்? வள்ளுவரே!-ஆனுக்
குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்தல் அரிது. (3)

### அறன் வலியுறுத்தல்.

காலால் மிதித்தாலும் கண்ணப்பர் செய்பூசை
வாலிதெனச் சொல்வதென்னே? வள்ளுவரே!-சாலும்
மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற. (4)

### இல் வாழ்க்கை.

இன்னுயிரே அன்ன இராமனைக் கோசிகன்பால்
மன்னன் விடுத்ததென்னே? வள்ளுவரே!-உன்னுங்கால்
இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை. (5)

### வாழ்க்கைத்துணை நலம்.

முன்னரன சூயைமழை மூவர் தடுப்பவும்நா
வன்மையாற் பெய்வித்தாள் வள்ளுவரே!-உன்னியே
தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை. (6)

### மக்கட் பேறு.

*தீநிரயம் நீங்கிச் சிறந்தார் இறந்தாரும்*
*வானிற் பகீரதனல் வள்ளுவரே!-ஏனோ?*
*எழுபிறப்பும் தீயவை தீண்டா, பழிபிறங்காப்*
*பண்புடை மக்கட் பெறின்.* (7)

### அன்புடைமை.

*தேராருந் தாமுணரக் கன்னன் சிதைந்துகளன்*
*வாரா அழுதாளே வள்ளுவரே!-சூரன்பெண்*
*அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்? ஆர்வலர்*
*புன்கணீர் பூசல் தரும்.* (8)

### விருந்தோம்பல்

*வித்தும் அரித்திட்டு விருந்தோம்பி னார்மாறர்*
*வைத்தபொருள் போயபின்னும் வள்ளுவரே!-மொய்த்தே*
*இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி*
*வேளாண்மை செய்தற் பொருட்டு.* (9)

*நீடுவா ழச்செய்யும் நெல்லிக் கனியதிகன்*
*வாடாதௌவைக்கீந்தான் வள்ளுவரே!-நாடில்*
*விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா*
*மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.* (10)

### இனியவை கூறல்.

*முன்பரவான் இன்சொல் மொழிந்து களப்பலிக்கு*
*மன்பால் உடன்பட்டான் வள்ளுவரே!-இன்பால்*
*அகனமர்ந் தீதலின் நன்றே முகனமர்ந்து*
*இன்சொலன் ஆகப் பெறின்.* (11)

# V. சரிதைப் பகுதி.

## 1. நைடதம்.

நைடதம் வடமொழியிலுள்ள பஞ்சகாவ்யங்களுள் ஒன்று. வடமொழியில் இதனையியற்றியவர் ஸ்ரீஹர்ஷதேவன் என்னும் அரசர்பெருந்தகை. நிஷததேசத்தரசனான நளனது சரித்திரத்தைக் கூறுதலால் இஃது இப்பெயர் பெற்றது. தத்திதாந்த நாமம். நைஷதம் என்னும் வடமொழிப் பெயர் தமிழில் நைடதம் என ஆயிற்று. வடமொழி நைடதத்தையும் தமிழிலுள்ள நளவெண்பாவையும் முதனூலாகக் கொண்டு இந்நூலை இப்பெயரோடு செய்தவர் அதிவீரராமபாண்டியன் என்னும் இயற்பெயர் வாய்ந்த பாண்டியர்குலத்து அரசராவர். இவர்க்குச் சீவலன் வரராமன் என்ற பெயர்களும் வழங்கும். இவர் தென்காசியில் இருந்து, அரசு செய்தவர். இவரது தந்தை குலசேகரபாண்டியன். இவர் முடிசூடிய காலம் கி-பி-1562-என்று சாசனங்களால் அறியப்படுகிறது. இவரது பாடல்களால் இவர்மதம் சைவம் என்பதுதெளிவு.

இவர் இயற்றிய ஏனைய தமிழ் நூல்கள் இலிங்கபுராணம், கூர்மபுராணம், காசிகாண்டம், நறுந்தொகை, கருவை அந்தாதிகள் முதலியன. இவரது தமையன் வரதுங்கராமபாண்டியன் என்பாரும் சிறந்த தமிழ்ப்புலமை வாய்ந்திருந்தவர். அவர் பாடியது, பிரமோத்திர காண்டம். கருவையந்தாதிகளையும் அவரே பாடினர் என்பது சிலரது கொள்கை.

அதிவீரராமபாண்டியன் வாக்கு வெண்மையும் வன்மையுமின்றிச் செம்பாகமானது. ஒரு பொருளுக்கு அடைமொழிகளை அணி அணியாய் அடுக்கிக் கூறுவது இவரியல்பு. சிந்தாமணி, கம்பராமாயணம் முதலிய காவ்யங்களினின்றும் சங்கநூல்களினின்றும் நயமான தொடர்களையும் கருத்துக்களையும் தம்முடைய பாடல்களில் அங்கங்கே அமைத்துக் கொள்வர். தமிழ் இலக்கிய அறிவு பெற விரும்புவோர் இந்நூலை முதற்கண் விரும்பிக்கற்றல் மரபு. இந்நூலில் காவ்யரசம் மலிந்திருக்கின்றன. "நைடதம் புலவர்க் கௌடதம்" என்ற பழமொழியால் இந்நூலின் பெருமை விளங்கும். நளன்

அன்னத்தைக்கண்ணுற்று அதனைத் தமயந்தியிடம் தூதுவிட்டது முதல் அது தமயந்தியிடம் தூது சென்று அவன்பால் திரும்பி வந்தது வரையுமுள்ள வரலாறு அடங்கிய பகுதியில், பெரும் பாலும் வருணனையான பாடல்களை ஒழித்துக் கதைத்தொடர்ச்சிக் குரிய பாட்டுக்களே ஈண்டுப் பதிப்பிக்கப்படுகின்றன. தமயந்தியை நளன் சுயம்வரத்தில் மணந்து தன்னகர்க்கு வரும்வரையுள்ள வரலாறு, அடுத்துப் பதிக்கப்பட்டுள்ள நளவெண்பாவால் பூர்த்தி செய்யப்படுகின்றமை காண்க.

## நளன் அன்னத்தைக் கண்ணுற்றது.

மத்திய இந்தியாவில் நிடதம் என்று பெயரிய வளநாடு ஒன்று உண்டு; அந்நாட்டுக்கு ராஜதானி மாவிந்தநகரம், அந்நகரத்தரசன் நளன் என்பான்.

இவன் குடிகளைச்சேமமாய்ப் புரக்கும் செங்கோலினன்; பகைவரை அழிக்கும் நாமவேலினன்; வெண்கொற்றக் குடையுடையவன்; மங்குலின் வழங்கும் கொடையுடையவன்; அருளினுக்கு உறையுள்; அறத்துக்கு வேலி; கல்விக்குக்கடல்; குணக்குன்று; அரசர்கள் ஏறு. இவன் விதர்ப்பதேசத்துக் குண்டினபுரத்தரசனாகிய வீமராசனது தவப்புதல்வி தமயந்தி என்பாளது எழில் நலமாதியவற்றைக் கேள்வியுற்று அவளை மனைவியாக அடையக் கருத்துக்கொண்டு வருந்தியவன், ஒருநாள் பொழுது போக்கிற்குத்தனது பூஞ்சோலைக்குச் சென்று அதன் வளனுதிய வனப்பைக்கண்டு அச்சோலையின் நடுவணுள்ள ஓர் மணிநீர்த் தடாகக்கரையை அடைந்தான். அடைந்தவன் அத்தடாகத்தில் ஓர் புஷ்பசயனத்தில் உறங்கிக்கொண்டிருக்கும் பொன்னிறமான அன்னமொன்றைக் கண்ணுற்று, அதன் அழகைக்கண்டு களிப்பதற்கு அதனைப்பிடித்தான். பிடித்தலும் அன்னம் தன்னை அரசன் கொல்லப்பிடித்தானோ என வெருவி அரசனுக்குப் பலவாறு நீதிகூறி வருந்திற்று. அதனைக் கண்டு நளன் அதன் வருத்தம் நீங்க 'ஏகுழி ஏகு' என விடுத்தனன். விடுபட்ட அன்னம் தடாகத்துள் மற்ற அன்னங்களிடையில் போய்த்தங்கிற்று. அவ்வன்னங்கள் அரசன் பிடித்தமையால் வேறுபட்ட தோற்றத்தோடு கூடிய அவ்வன்னத்தை வேறு பறவை

யெனக்கருதி அவ்விடம் விட்டுப் பறந்து சென்றன. பின்னர் அன்னம் தன்னைக்கொல்லாது விட்ட அரசனுக்குக் கைம்மாறு செய்யக்கருதி, அவன் கரத்தில் வந்தமர்ந்து தமயந்தியினது அழகின் நலத்தை முடிமுதல் அடிகாறும் பலபடியாக வருணித்துக்கூறி, "அவளை மனைவியாகப் பெறுதல் உனக்கரிது, அவளை அமரர்களும் விரும்பியுள்ளார்கள், அவள் அவர்மீது ஆர்வம் அடையாவாறு நான் அவளிடம் தூதுசென்று உன் அழகை விரித்துரைத்து அவளுக்கு உன்மீது காதல் உண்டாகும்படி செய்வேன்" என்று கூறிற்று. அவ்வளவில் மகிழ்ந்து,

### நளன் தமயந்தியிடம் அன்னத்தைத் தூதுவிடுதல்.

"பொலன் சிறைப் பவளக் கடிகைவாய் அனம்! நின்
பொற்பினுக் குவமைவே றின்று.
நலங்கெழு குணனும் உரைப்பதற் கரிது.
நல்லெழில் பகருமுன் னூலோர்
இலங்கெழி லளவு குணமென உரைப்பர்.
இதற்குமேற் கோளென நின்னைத்
துலங்குறக் கண்டேன். என்துயர் தீர்க்கும்
மருந்துநின் சொல்லின்வே றுளதோ. (1)

"காதலங் கடலின் கரைபெறற் கயனால்
காரண மின்றியே காட்டப்
போதரும் புணைய தாதி என்உள்ளம்
புலம்புகொண் டினைவது தவிர்ப்பான்
தூதுநீ போய்முன் உரைத்தவா முடித்தல்
தோமறு புகழ்நினக்" கென்ன
ஆதரம் பெருக நன்மொழி புகன்றவ்
அனத்தினை மடந்தைபால் விடுத்தான். (2)

"போதரு நெறியில் நன்மைகள் பயக்க.
பொருந்துறு கிளையொடும் புல்லி
ஆதரம் பெருகும் அளியனை மறவேல்.
ஆயிழை அருண்முகம் பெற்றுத்
தீதற விரைவில் வருதி" என்றுரைத்துத்
திங்களின் அருஞ்சுதை தீற்று
தாதவிழ் தாம மாடமேல் தானும்
தனியுமாய் இருந்துடல் தளர்ந்தான். (3)

அன்னம் தமயந்தியிடம் புறப்பட்டுப்போதல்.

கட்புலன் கதுவா துயர்ந்துபின் எவரும்
காண்வர வெள்ளிடைப் பறந்து,
புட்செறி வாவி புகாதகல் விசும்பில்
பொன்னுரைத் தாலெனப் போகி,
நுட்பமாய் குனர்க்கும் அதிசயம் பயப்ப
நொடிவரை புகுந்ததவ் வன்னம்;
வட்கிவெண் மதியம் சவிகெட ஒளிரும்
மாடமார் குண்டின புரமே. (4)

அன்னம் தமயந்தியைக் கண்டு பேசுதல்.

சோலை வாயிற் சுடரு நிலாமணி
ஆல வாலத் தவிர்மதி யாற்புனல்
கால வாய்ந்த கதிர்மணி முல்லையின்
கோல நாண்மலர் கொய்வதற் கெய்தினள். (5)

மீது லாயவெண் தாரகை நாப்பணில்
சீத வொண்கதிர்த் திங்கள்கண் டாலென
மாதர் நோக்கின் மடந்தையர் நாப்பணில்
காதல் கூர்தம யந்தியைக் கண்டதே. (6)

வழிந்து தெள்ளமு தூற வளர்ந்துமா
சொழிந்த திங்களை ஊர்வளைந் தாலெனச்
செழுந்தண் கோதை திருமுகம் உள்ளுறச்
சுழன்று தாழ்ந்தது தூச்சிறை அன்னமே. (7)

தெய்வத் தாமரைப் போதுறை செல்வியும்
கொவ்வை வாய்அயி ராணியும், கூறுமிந்
நவ்வி நோக்கிக் கிணையென நாட்டுதல்
எவ்வ மென்ன இகழ்ந்து வியந்ததே. (8)

அன்னம் தமயந்தியின் அருகில் அடைந்திருந்தது. அப்போது தமயந்தி

அவிர்பூண் ஒலி யாமல் அடக்கினளாய்க்
கவர்வான்வரல் கண்டும் அகன்றிலதாய்த்
துவர்வாய்மயில் தொட்டிட லாகுமெனும்
நவைதீர் அனமெல்ல நடந்ததுவே. (9)

தோழிகள் தமயந்தியைப் பரிகசித்தல்.

“புளினத்தட மேவிய போகு மனம்
எளிதில் தன கைம்மலர் எய்துறுமோ?
உளம் வைத்தமை என்?” என ஒண்ணுதலார்
நளினக்கை புடைத்து நகைத்தனரால். (10)

அவர்களைத் தமயந்தி முனிந்துரைத்தல்.

“புனைமே கலையீர், கைபுடைத்து நகைத்
தனமேக வியற்றுதல் அன்பு கொலோ!
தனியேகுவன், நின்மின்” எனத்தகையாத்
துனியோ டுரைசெய்து தொடர்ந்தனளே. 11

இங்ஙனம் அன்னத்தின் நிழல்போல் பின்றொடர்ந்து சென்று,

செய்ப்பட்ட செழுங்கம லத்திலனம்
கைப்பட்டது பட்டதெனக் கருதா,
மைப்பட்ட மலர்ப்பொழில் மாதவிவாய்ப்
பொய்ப்பட்ட மருங்கினள் புக்கனளே. (12)

தொடர்ந்தாள் கலுழ்தூமுகம் வேரொழுக
நடந்தாயிழை எய்த்தனள் என்னநயந்
திடந்தேர்ந்தவள் இன்புறு நன்மொழிகள்
மடந்தாழ் இளவன்னம் வழங்கியதே (13)

அன்னம் தமயந்தியுடன் பேசுதல்.

"விண்ணின் இயங்கும் எனை மேவரநீ
மண்ணின் நடந் தெவ்வணம் வெளவுதியால்?
எண்ணின் இதுகண்டவர் யார் நகையார்?
பெண்ணின் னமுதே வரல் பேதமையே. (14)

என்று சொல்லி "நாங்கள் பிரமதேவனது வாகனமான அன்னத் தின்சுற்றமாவோம்; அவனது மானசதடாகத்தில் வசிப்போம்; திரிலோகங்களிலும் தளர்ச்சியின்றிச் சஞ்சரிக்கும் வரம்பெற்றுள்ளோம்; நாங்கள் நிடதநாட்டில் நளனுடைய மாவிந்த நகரத்தில் பூஞ்சோலையில் உள்ள தடாகத்தைக் காணும்படி பூலோகத்துக்கு வருவோம்: தெய்வத்தன்மை பொருந்திய நளன் எங்களைப் பிடித்தால் பிடிக்கலாமன்றி மற்ற மனிதர் எங்களைப் பிடித்தற்கியலாது. ஒரு காரியத்தைச் செய்யும்படி இந்திரன் ஏவினும் செய்வோமல்லோம். பிரமனும் நளனும் ஏவியதை மாத்திரம் நன்கு செய்வோம். நளன் நல்ல சுந்தரபுருஷன். அவன் பூமிதேவிபோலவும் ஆதிசேடன் போலவும். பொறுமை வாய்ந்தவன்; அவனது தாதியாது நடையைக் கற்றுக் கொண்டுபோய் நான் அரம்பைக்குக் கற்பிப்பதுண்டு. மாவிந்த நகரத்திலுள்ள பெண்கள் தங்கள் ரகசியங்களை என்னிடம் சொல்லுவது வழக்கம். நான் இரகசியங்களை வெளியிடாதவன் என்பது அவர்களுக்குத் தெரியும். அம்மா! என்னென்னவோ பொருந்தாத வார்த்தைகளையெல்லாம் சொல்லிக்

கொண்டிருந்து விட்டேன். அது நிற்க; வீணாய் உன் கால் நோகும் படி குற்றம் செய்து விட்டேன். அதற்குப் பரிகாரமாய் என்ன வேண்டுமானாலும் செய்கிறேன் சொல்லுக" என்று சொல்லி,அவள் மனக்குறிப்பை அறியும் பொருட்டு அன்னம் சும்மா இருந்தது. அப்போது தமயந்தி

"பேதை நீர்மையின் பெட்புறின் யாங்கணும்
ஏதம் எய்துறும் என்பர் சரதமே.
ஆதலால்நிற்கொரு டார்ந்தனர் எய்துறத்
தீதிழைத் தனன் யான்உன் திறத்தினே. (15)

"பளிங்கிற் றுன்னிய பல்பொருள் மற்றதில்
விளங்கித் தோன்றல்போல், யான்செய்த வெம்பிழை
களங்கம் அற்றவுன் உள்ளத்தில் கண்டுகொல்
துளங்க யான்பிழைத் தேனென்று சொற்றதே. (16)

"வேண்டல் செய்வல் என்றாய். விழைவால்நினைக்
காண்ட லன்றிஎன் வேண்டும்? கதிர்மதி
ஈண்டு நோக்குநர் கண்களிப் பெய்துறச்
சேண் தயங்குவ தன்றி என் செய்யுமால்? (17)

"விழையுமனத் ததுமனத்தை விட்டகல்வ தெனினன்றோ
தழையஉரை தருநாவால் சாற்றலாம் தகைமைத்தாம்?
எழுபுவிவாழ் கன்னியரில் இருவிசும்பில் தருவினறுங்
கொழுநனை நல்குதியென்று கூறுநளும் உள்கொல்லோ?" (18)

தமயந்தி இவ்வாறு நானோடுகூறிய வார்த்தையைக் கேட்டுச் சந்தேகங்கொண்டு அன்னமானது,

"தருவினறுங் கொழுநனையார் தருகவென உரைப்பள்" எனும்
அரியமறைப் பொருளதனை யான்கேட்க லாகாதோ?
தெரியவருமறைப்பொருளைச் செவிப்புலத்தில்உறநான்காம்
வருணமுடை யவர்கேட்க லாகாத வாறேபோல். (19)

என்னால் முடிக்கலாகாத காரியம் ஒன்றுமில்லை. இந்த உலகத்தில் நீ விரும்பியதைச் சொல்லுக. விரைவில் கொண்டு வந்து கொடுக்கிறேன்'' என்றது. அப்போது தமயந்தி,

''மருவுபுரி நரம்பிசைக்கு மாடகநல் யாழிசைகேட்
டுருகினளன் பால்வேட்கை உற்றனளென் றறிகில்லாய்.
அரியபசும் பொன்னிறத்த ஆய்தூவி மடவனமே!
தெருமாலுற்றேன்,விழைவு செப்புமா றெவன்?'' என்றாள்.

தமயந்தி தன் விருப்பத்தை நாணத்தால் மறைத்துக் குறிப்புரையாக உரைத்தவற்றின் பொருளை அறிந்த அன்னம்,
''தருவினறுங் கொழுநனையார் தருகென்பாள்' என்றதுவும்
'மருவுபரி நரம்பிசைக்கு மாடகநல் யாழிசை கேட்
டுருகினளன் பால்வேட்கை உற்றனளென் றுரைத்ததும்,யான்
கருதினால் பலகலையும் கற்றுணர்ந்த தெளிவினால். (21)

'கன்னியாது மனம் ஒரு பொருளில் பதிந்தாலும் உடனே அதைவிட்டு நீங்குவதுண்டு என்பார்களாகையால், உன் குறிப்புரைகளை அறிந்தும் அறியேன் போன்று ஐயுற்றிருந்தேன். மேலும் சக்கரவர்த்தியினுடைய நாளோலக்கத்தில் ஒரு கன்னிகை நாணத்தோடு சில வார்த்தைகளைக் கூறினளென்று கூறுவது சிறப்பாகுமா? நான் அந்த மஹாராஜனுடைய மனத்தை உன்னிடம் பொருந்தும்படி செய்த பிறகு உன் தந்தை பிறனொருவனுக்கு உன்னைக் கொடுத்துவிட்டால் என்வாய்மை தவறுமன்றோ? உன் தந்தை உன்னை யார்க்குக் கொடுப்பானோ என்கிற ஐயம் எனக்கிருப்பதுபோல் உனக்கும் இருப்பதால் இக்காரியத்தை யொழித்து வேறு கூறுக. வேறெதுவானாலும் முடித்துக் கொடுக்கிறேன்' என்றது. அதுகேட்ட தமயந்தி நாணத்தை விட்டு வெளிப்படையாகப் பேசலுற்றாள்.

''விரையுயிர்க்கும் தாமரைக்கு வெய்யவனும் சேதாம்பல்
மருவுயிர்க்கு நாண்மலர்க்கு மாமதியு மல்லாமல்,
உரைபெறுநற் றலைவர்பிறர் உளர்கொல்லோ? பொலன்சிறைய
அரசமடஅனம்! எனையும் அன்னளாய் எண்ணுதியால். (12)

"ஐயமுறேல்; நளன்மார்பில் அணிய லணிகுவதன்றி,
மையல்புரி வேள்வரினும், மன்றலந்தார் சூட்டுவனோ?
நெய்யொழுகு வேற்றுதை பிறற்களிப்ப நேர்குவனேல்
வெய்யதழல் புகுந்தாவி விட்டுனுரை நிறுத்துவனால். (23)

"உயிருதவிசெய்தவர்க்கொன் றுற்றக்கால் உணர்வுடையோர்
செயிரறுதம் உயிரளித்துச் செய்ந்நன்றிக் கடன்கழிப்பார்.
மயர்வறஎன் உயிரினுஞ்சீர் வாய்ந்தநளன் றனையளிப்பின்,
அயர்வறும் ஓதிமம், அதற்குக் கைம்மாறே தறிகிலன்யான் ()

"கைம்மாறு நினக்காற்றல் அரிதெனினும், களிப்பினுளம்
செம்மாந்துன் செயிரறுசீர் ஓவாது செப்புவல்யான்.
எம்மாவி இறந்துபடா திருக்குங்கொல்? விரைவினிற்போய்த்
தெம்மாறு சுடர்வேலான் திருவருள்பெற் றிடா யெனினே." (25)

தமயந்தி தன்னைப்பற்றி நளனிடம் சமயமறிந்துரையெனல்.

"வேற்றரசர் திறைகொணரும் வேலையினும் சொல்லற்க.
மாற்றரசர் பால்வெகுளும் அமையத்தும் வகுத்துரையேல்.
தேற்றமுடை மதிவல்லோர் தேர்ச்சியினும் தெரிந்துரையேல்.
சாற்றின் உரைத்தன வெல்லாம் தவறுதல் அறிதியே." ()

"பொறிசெறித்த மாண்பினராய்ப்
பொருந்தலர்ச்செற் றிருநிதியம்
செறிதருமா றீட்டியரு
வினைவாங்கு செயலினரும்
உறுபிழையுட் சிறிதியற்றின்
ஒறுத்திடுவர் வயவேந்தர்;
அறுதிபெற நீ மொழியும்
அமயமறிந் துரைத்தியால்." (47)

"உளத்தனவாண் முகத்தனவாய்
உதிக்குமவை குறிப்பினுல்
தெளித்துரைத்தல் சீர்மைத்தே.
தூதர்செயல் இற்ருகும்.
விளக்கமுற நீயலதி யாரறிவர்
இவை? மெலியுமெனை
அளித்திடுதி விரைவினிற் போய்
ஆய்தூவி மடவனமே" (28)

தமயந்தி இங்ஙனங்கூறிய சொற்களைக்கேட்டு அன்னம் "நீ மனந்தளராதே உன்னை மணஞ் செய்தற்கு விருப்பங்கொண்டே நளன் என்னை உன்னிடம் தூதுவிடுத்தான். நீங்கள் இருவீரும் முற்பிறப்பில் செய்த தவப்பயனுல் உங்கள் விருப்பம் நிறைவேறியது. நான் அவனிடம் போகவிடைகொடு" என்றது. தமயந்தி சில உபசார மொழிகளைச் சொன்னுள். அப்போது தாதியர் தமயந்தியின் அடிச்சுவட்டை நோக்கி அவளைத்தேடி வருவதைக் கண்டு, அன்னம் அவர்கள் ஏதாவது சந்தேகம் கொள்வார்கள் என்று கருதி விரைந்து பறந்து சென்றது. தமயந்தியின் கண்களும் கருத்தும் அன்னத்தைத் தொடர்ந்து சென்றன. தாதியர் "அம்மா! அனிச்சமலரினும் மென்மைவாய்ந்த உன் சீறடிகள் கன்றிவருந்த இங்ஙனம் அன்னத்தைத் தொடர்ந்து வருதல் தகுமா?" என்று சொல்லி, அவளை அழைத்துக்கொண்டுபோய்க் கன்னிமாடத்தில் சேர்த்தனர். அவள் புஷ்பசயனத்திலே நளனே நினைவாகச் செயலற்றுக் கிடந்தாள்.

இவள் இங்ஙனமாக, அன்னம் மாவிந்தநகாஞ்சென்று அங்கே பூஞ்சோலையிலுள்ள தடாகக்கரையிலே ஏங்கியிருந்த நளனை அடைந்து,

"திருந்தார் மௌலி மணியுரிஞ்சித்
திகழுங் கழற்கால் தேர்வேந்தே,
வருந்தேல் வருந்தேல்; நீவேண்டின்
வாராதனவும் உளகொல்லோ?
முருந்தேர் முறுவல் முகம்பெற்று
வந்தேன்" எனலும் மூர்ச்சைதெளிந்
தருந்தா வமுதம் அருந்தினன் போல்
பலகால் கேட்கும் அகமகிழும். (29)

இவன் இங்ஙனமாகத் தமயந்தி உருவமும் தோற்றமும் வேறுபட்டிருப்பதைத் தமயந்தியின் தாயான சாருகாசினி தாதியர்களால் அறிந்து அதனைத் தன் கணவனிடம் சொல்பவள் 'தமயந்தி முதுக்குறைந்தாள்' என உணர்த்தினாள். வீமராஜன் சென்று தமயந்தியைப் பார்த்து அவளுக்கு மணப்பருவம் வந்தமை அறிந்து உடனே அவன் அவளுக்குத் திருமணம் செய்ய நிச்சயித்து அதனை அரசர்களுக்குத் தெரிவிக்க நினைந்தான்.

---

## 2. நளவெண்பா.

நளவெண்பாவை இயற்றியவர் "வெண்பாவிற் புகழேந்தி" எனப்புகழ்ப் பெற்ற புகழேந்திப் புலவர். இவரது பிறப்பிடம் செங்கற்பட்டையடுத்த பொன்விளைந்த களத்தூர்; இது "மாலார் களந்தைப் புகழேந்தியும் தொண்டை மண்டலமே" என்ற தொண்டைமண்டல சதகச் செய்யுளடியால் விளங்கும். குலம் துளுவ வேளாளர் என்பர். "நாராயணாய நமவென்றவனடியில், சோரரை வெந்துயரம் சேர்ந்தாற்போல்" "மிக்கோன் உலகளந்தமெய்யடியே சார்பாகப், புக்கோர் அருவினைபோல் போயிற்றே". என்று இந்நூலில் இடையிடையே காட்டிய உவமைகளாலும், கடவுள் துதியாலும் இவர் வைணவ மதத்தினரென்பது துணிபு. இவர் இரண்டாங் குலோத்துங்கன் காலத்துப் புலவர்களான கம்பர், ஒட்டக்கூத்தர் என்பவர்களோடு ஏககாலத்தில் இருந்தவர். (கி. பி. 1143-க்குமேல்.)

இவர் முதற்கண் பாண்டியன் ஆஸ்தானத்துப்புலவராயிருந்து, பின்னர் பாண்டியனால் சோழன் அவைக்களத்துக்கனுப்பப்பட்டனரெனவும், சோழனது சமஸ்தானப்புலவரான ஒட்டக்கூத்தர் பொறாமையால் இவரிடம் மிக்க பகைமைகாட்டி வந்தனரெனவும் அதனால் புலவர் சோழன் சபையை நீங்கி உறையூரையடுத்த மள்ளுவநாட்டு முரணைநகர்ச் சந்திரன்சுவர்க்கி என்னும் சிற்றரசனிடம் சென்று அவனது சமுகவித்துவானாய்த் தங்கியிருந்தனரெனவும் வரலாற்றால் அறியப்படுகின்றன. இக்காலத்தில் தான் இந்நூலை இப்புலவர் பாடியிருத்தல் வேண்டுமென்று கருதப்படுகிறது. "சங்கநிதிபோல் தருசந்திரன் சுவர்க்கி" "வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான், தண்டார் புனை சந்திரன் சுவர்க்கி," "மாமனுநூல் வாழ வருசந்திரன் சுவர்க்கி, தாமரையாள் வைகுந் தடந்தோளான், காமருபூந் தாரான் முரணைநகர்" எனச் சந்திரன் சுவர்க்கியை இவர் நளவெண்பாவில் பலவிடங்களில் புகழ்ந்து பாடியுள்ளார். இவர்செய்த வேறு நூல் இரத்தினச் சுருக்கம். நளவெண்பா ஒன்றே இப் புகழேந்தியாரது பெரும்புகழுக்குப் பேரிலக்காதற்குப் போதுமானது. இவரது வெண்பாக்கள் ஓசையமைதியும் பொருளாழமும் இயற்கைச் சுவையும் பொருந்திக் கற்போருள்ளம் காமுறும் பொற்போடு திகழ்கின்றன. நளச்சரிதையை முதன்முதல் விரித்துத் தமிழிற் கூறப்புகுந்தநூல் இதுவே. நளவெண்பாவிற்கு முதனூல் வடமொழிப்பாரதத்திலுள்ள நளோபாக்கியான பருவம்.

பெண்கள் எளிதில் படிக்கவும் கேட்கவும் எளிய நடையில் அல்லியரசிமாலை, கோவலன் கதை, பாண்டவர் வனவாசம், வைகுந்த அம்மானை என்பவற்றையும் இவர்பாடினரெனப் பலர்சொல்லி வருகின்றனர். இங்ஙனமே இவர் இவற்றைச் செய்திருக்கலாம். இருநூறு முந்நூறு வருடங்கட்கு முன்னிருந்த தேசிங்குராஜன், காத்தவராயன் முதலியோர்களைப்பற்றிய வழூஉச்செறிந்த கதைப் பாடல்களையும் இவரே பாடினரென இவர்மீது ஏற்றிக்கூறுவது புனைந்துரையென அதனைக் கொள்ளாது தள்ளுக.

சுயம்வர காண்டம்.

"மங்கை சுயம்வரநாள் ஏழென்று வார்முரசம்
எங்கும் அறை"யென் றியம்பினான்,-பைங்கமுகின்
கூந்தல்மேல் கங்கைக் கொழுந்தோடும் நன்னாடன்
வேந்தர்மேல் தூதோட விட்டு. (1)

அரசர்கள் தமயந்தியின் சுயம்வரத்துக்கு வருதல்.

செந்தடையும் வண்டுறைதார்ச் செய்யாள் வளர்மார்பன்
கந்தடையும் வேழக் கடைத்தலைவாய்—வந்தடைந்த
பூவேந்தர் தங்கள்கிளை பொன்னகரில் ஈண்டிற்றே
கோவேந்தன் மாதைக் குறித்து. (2)

(நளன், தமயந்தியிடஞ் சென்ற அன்னம் திரும்பிவந்து அவள் தன்மேற் கொண்ட காதலைத் தெரிவிக்கக்கேட்டு அவன் அறிவழிந்து தழல்படு தளிர்போல் சாய்ந்து கிடக்கையில்)

கோதை சுயம்வரநாள் கொற்றவனுக் குற்றுரைப்ப
ஏதமிலாக் காட்சியர்வந் தெய்தினார்,—போதில்
பெடையோடு வண்டுறங்கும் பேரொலிநீர் நாடன்
அடையாத வாயி லகம். (3)

(தூதர் மொழிகளைக் கேட்டவுடன் நளன் தேரேறி விதர்ப்ப ராஜதானியான குண்டினபுரத்துக்கு விரைந்து புறப்பட்டுச்செல்லலுற்றான்-இது இங்ஙனம் நிகழ்கையில் நாரதமுனிவர் தேவலோகத்தில் இந்திரன் சபையைப் போயடைந்தார்; அவ்வளவில்,

வீரர் விறல்வேந்தர் விண்ணாடு சேர்கின்றார்
ஆரும் இலரால்என் றையுற்று—நாரதனார்
நன்முகமே நோக்கினான், நாகம் சிறகரிந்த
மின்முகவேற் கையான் விரைந்து. (4)

"வீமன் மடந்தை மணத்தின் விரைதொடுத்த
தாமம் புனைவான் சயம்வரத்து—மாமன்னர்
போயினர்" என்றான் புரந்தரற்குப், பொய்யாத
வாயினான் மாதவத்தோர் மன். (5)

மால்வரையை வச்சிரத்தால் ஈர்ந்தானும் வானவரும்
கோல்வளைதன் மாலை குறித்தெழுந்தார்,—சால்புடைய
விண்ணாடு நீங்கி, விதர்ப்பன் திருநகர்க்கு
மண்ணாடு நோக்கி மகிழ்ந்து. (6)

பைந்தெரியல் வேல்வேந்தன் பாவைபால் போயினதன்
சிந்தை கெடுத்ததனைத் தேடுவான்—முந்தி
வருவான்போல் தேர்மேல் வருவானைக் கண்டார்
பெருவானில் தேவர் பெரிது. (7)

தேவர்கள் வேண்ட, நளன் தமயந்தியிடம் தூது போதல்.

காவல் குடைவேந்தைக் கண்ணுற்றுவிண்ணவர்கோன்
"ஏவல் தொழிலுக் கிசை" என்றான்.—ஏவற்கு
மன்னவனும் நேர்ந்தான், மனத்தினால் மற்றதனை
இன்னதென ஓரா திசைந்து. (8)

"செங்கண் மதயானைத் தேர்வேந்தே! தேமாலை
எங்களிலே சூட்ட இயல்வீமன்—மங்கைபால்
தூதாக" என்றான். அத் தோகையைத்தன் ஆகத்தால்
"கோதாக" வென்றான் அக் கோ. (9)

தேவர் பணிதலைமேல் செல்லும்: திரிந்தொருகால்
மேவுமிளங் கன்னியால் மீண்டேகும்:—பாவில்
குழல்போல நின்றுழலும் கொள்கைத்தே, பூவின்
நிழல்போலும் தண்குடையான் நெஞ்சு. (10)

"ஆவ துரைத்தாய். அதுவே தலைநின்றேன்
தேவர்கோ னே! அத் திருநகரில்—காவல்
கடக்குமா றென்?" என்றான், காமநீ ராழி
அடக்குமா றுள்ளத் தவன். (11)

[இந்திரன் "உன்னை ஒருவருங் காணமாட்டார்கள்; நீ போய் அவளைக்காண்" என்றான்; நளனும் சென்று தமயந்தியின் கன்னி மாடத்தை அடைந்தான். தமயந்தி]

"காவல் கடந்தெங்கள் கன்னிமா டம்புகுந்தாய்.
யாவனோ? விஞ்சைக் கிறைவனோ?—தேவனோ
உள்ளவா சொல்" என்றாள், ஊசற் குழைமீது
வெள்ளவாள் நீர்சோர விட்டு. (12)

[அப்போது நளன் காதலை அடக்கித் தான் இன்னானென்றும் வந்த செய்தி இன்னதென்றும் சொன்னான்].

"என்னுரையை யாதென் றிகழா திமையவர்வாழ்
பொன்னுலகம் காக்கும் புரவலனை—மென்மாலை
சூட்டுவாய்" என்றான், தொடையிற்றேன் தும்பிக்கே
ஊட்டுவான், எல்லாம் உரைத்து. (13)

## தமயந்தியின் விடை.

"இயமரம்நின் றார்ப்ப, இனவளைநின் றேங்க,
வயமருதோள் மன்னா! வகுத்த—சுயம்வரந்தான்
நின்பொருட்டால் என்று நினை" கென்றாள், நீள்குடையான்
தன்பொருட்டால் நைவாள் தளர்ந்து. (14)

போதரிக்கண் மாதராள், "பொன்மாலை சூட்டத்தான்
ஆதரித்தார் தம்மோ டவையகத்தே,—சோதிச்
செழுந்தரள வெண்குடையாய்! தேவர்களும் நீயும்
எழுந்தருள்க" என்றாள் எடுத்து. (15)

விண்ணவர்தம் ஏவலுடன் வீமன் திருமகள்பால்
நண்ணு புகழ்நளனும், நன்குரைத்த-பெண்ணணங்கின்
வன்மொழியும், தேவர் மனமகிழத் தான்மொழிந்த
மென்மொழியும், சென்றுரைத்தான் மீண்டு. (16)

## தேவர் மகிழ்ந்து வரமளித்தல்.

"அங்கி அமுதநீர் அம்பூ அணிஆடை
எங்குநீ வேண்டினைமற் றவ்விடத்தே—சங்கையறப்
பெற்றாய்" எனவருணன் ஆகண் டலன் தருமன்
மற்றோனும் ஈந்தார் வரம். (17)

அங்கவர்கள் வேண்டும் வரங்கொடுக்கப் பெற்றவர்கள்
தங்களொடும் தார்வேந்தன் சார்ந்தனன், மேல்-மங்கை
வயமருவு கின்ற மனக்கா வலர்க்குச்
சயம் வரந்தான் கண்டதோர் சார்வு. (18)

## சூரிய அஸ்தமனம்.

வையம் பகலிழப்ப, வானம் ஒளியிழப்பப்
பொய்கையும் நீள்கழியும் புள்ளிழப்பப்,—பையவே
செவ்வாய அன்றில் துணையிழப்பச், சென்றடைந்தான்
வெவ்வாய் விரிகதிரோன் வெற்பு. (19)

[நளன்பால் காதல் கொண்ட தமயந்தி மாலைப் பொழுதையும் பிறைச் சந்திரனையுங் கண்டு கலங்கி இரவெல்லாம் நளனே நினைவாகத் துயில் கொள்ளாமலிருந்தாள்]

## சூரிய உதயம்.

பூசுரர்தம் கைம்மலரும் பூங்குமுத மும்முகிழ்ப்பக்,
காசினியும் தாமரையும் கண்விழிப்ப,—வாசம்
அலர்ந்ததேம் கோதையாள் ஆழ்துயரத் தோடு
புலர்ந்ததே அற்றைப் பொழுது. (20)

## தமயந்தியின் சுயம்வரம்.

முரசெறிந்த நாளேழும் முற்றியபின் கொற்ற
வரைசெறிந்த தோள்மன்னர் வந்தார்,-விரைசெறிந்த
மாலை துவள, முடி தயங்க, வால்வளையும்,
காலை முரசும் கலந்து. (21)

மன்றலந்தார் மன்னர் நடுவணைய வந்திருந்தான்,
கன்று குதட்டிய கார்நீலம்—முன்றில்
குறுவிழிக்கு நேர்நாடன் கோதைபெருங் கண்ணின்
சிறுவிழிக்கு நோற்றிருந்த சேய். (22)

நித்திலத்தின் பொற்றோடு நீலமணித் தோடாக
மைத்தடங்கண் செல்ல, வயவேந்தர்—சித்தம்
மருங்கே வர, வண்டின் பந்தர்க்கீழ் வந்தாள்,
அருங்கேழ் மணிப்பூண் அணங்கு. (23)

[மன்னர் விழித்தாமரைமலர்ந்த மண்டபத்தில் அன்னம் கமலப் பொய்கையில் புகுந்ததுபோல் தமயந்தி புகுந்தாள்]

மன்னர் குலமும் பெயரும் வளநாடும்
இன்ன பரிசென், றியலணங்கு—முன்னின்று
தார்வேந்தன் பெற்ற தனிக்கொடிக்குக் காட்டினாள்
தேர்வேந்தர் தம்மைத் தெரிந்து. (24)

["இவன் சோழன்; இவன்பாண்டியன்; இவன் குரு நாடன்; இவன் பாஞ்சாலநாட் டரசன்; இவன் கோசல நாட்டரசன், என்று]

காவலரைத் தன்சேடி காட்டக்கண், டீரிருவர்
தேவர் நளனுருவாய்ச் சென்றிருந்தார்—பூவரைந்த
மாசிலாப் பூங்குழலாள் மற்றவரைக் காணாகின்,
றாசலா டுற்றாள் உளம். (25)

பூணுக் கழகளிக்கும் பொற்றொடியைக் கண்டக்கால்
நாணுக்கு நெஞ்சுடைய நல்வேந்தர்—நீணிலத்து
மற்றேவர் வாராதார்? வானவரும் வந்திருந்தார்
பொற்றோ நளனுருவாய்ப் போந்து. (26)

[அதன் மேல் தமயந்தி,]

"மின்னுந்தார் வீமன்தன் மெய்ம்மரபில் செம்மைசேர்
கன்னியான் ஆகின், கடிமாலை—அன்னந்தான்
சொன்னவனைச் சூட்ட அரு"ளென்றாள், சூழ்விதியின்
மன்னவனைத் தன்மனத்தே வைத்து. (27)

கண்ணிமைத்தலால்,அடிகள் காசினியில் தோய்தலால்,
வண்ண மலர்மாலை வாடுதலால்,—எண்ணி
நறுந்தா மரைவிரும்பும் நன்னுதலே யன்னாள்
அறிந்தாள் நளன்றன்னை ஆங்கு. (28)

விண்ணரசர் எல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்,
கண்ணகன் ஞாலம் களிகூர,—மண்ணரசர்
வன்மாலைத் தம்மனத்தே சூட, வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன். (29)

திண்டோள் வயவேந்தர் செந்தா மரைமுகம்போய்
வெண்டா மரையாய் வெளுத்தவே,—ஒண்டாரைக்
கோமாலை வேலான் குலமாலை வேற்கண்ணாள்
பூமாலை பெற்றிருந்த போது. (30)

மல்லல் மறுகில் மடநா குடனாகச்
செல்லும் மழவிடைபோல் செம்மாந்து-மெல்லியலாள்
பொன்மாலை பெற்றதோ ளோடும் புறப்பட்டான்
நன்மாலை வேலான் நளன். (31)

## 3. குசேலோபாக்கியானம்.

—

இது அபிமன்யு புத்திரனும் அருச்சுனன் பவுததிரனுமான பரீக்ஷித்து மகாராஜனுக்குச் சுகமுனிவர் உபதேசித்த ஸ்ரீபாகவத புராணத்தில் கண்ணபிரானுடைய வைபவங்களை விரித்துக் கூறும் தசமஸ்கந்தத்தில் வந்துள்ள கிளைக்கதைகளுள் ஒன்றாகும். குசேலோபாக்கியானம் குசேலரைப் பற்றிய உபாக்கியானம் என விரியும்; வடமொழிச்சந்தி. இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்றொக்கதொகை. குசேலர்-குற்சிதமான ஆடையை யுடையவர். (பீறலாடையுடையவர்) உபாக்கியானம்-கிளைக்கதை. இதனைத் தமிழில் செய்யுள் வடிவில் சிறு காப்பியமாய் யாத்தவர் தொண்டை நாட்டு வல்லூர் தேவராஜபிள்ளை என்னும் கருணீகர். இவர் திரிசிரபுரம் மஹா வித்வான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை யவர்களின் மாணாக்கரில் ஒருவர். இந்நூலின் பாடல்களெல்லாம் செம்பாகமாய்த் தெளிந்து இன்னோசை தழுவி ஆற்றொழுக்காய்ச் செல்கின்றன. இந்நூலில் வறுமையின் கொடுமை, இல்லற முறைமை, நட்பின்மாட்சி, பெரியார் பெருமை இவற்றைத் தெரிவிக்கும் பாடல்கள் பன்முறைபடிக்கும் இனிமை வாய்ந்தவை. இந்நூல் அரங்கேறியது கி-பி. 1850-ஆம்

இந்நூலுக்கு முதனூல் ஆந்திரகவி கட்டுப்பிரபுநாமர் ஆந்திர பாஷையில் பத்தியகத்தியங்களால் வரைந்துள்ள குசேலோபாக்கியானமே என்பது சிலர் துணிபு.

### கண்ணன் குசேலரை உபசரித்து அவலுண்ணல்.

கண்ணபிரானும் குசேலரும் சாந்தீபமுனிவரிடம் கல்வி பயின்ற ஒருசாலை மாணவர். அக்காலத்து இருவரும் ஆருயிர் நண்பராய் அன்பு பூண்டிருந்தனர். கல்விப்பயிற்சி முடிந்த பின்னர் குசேலர் மனையறத்திற் புகுந்தனர். கண்ணன் முடிசூடி துவாரகையில் அரசாண்டனன். குசேலர் மக்கள் பலரைப் பெற்றமையால் வறுமை மேலிட்டு மனைவி மக்களுடன் காலங்கழித்தனர். மனைவி கண்ணபிரானிடம் சென்று கனநிதி பெற்று வறுமை

களைய வேண்டினள். அவர் அதற்கு மறுத்துரைத்தும் மனைவி வற்புறுத்துதலான் அவளைச் சிறிது அவலைப் பாகம் பண்ணச் செய்து, தமது கந்தையில் முடிந்து பல காததூரம் நடந்து, துவாரகை அடைந்து கண்ணனது அரண்மனை வாயிலைக் குறுகினர். காவலாளர் முதலிற்றடைசெய்து பின்னர் முனிவர் வருகையைக் கண்ணனுக்குரைத்து அவன் உத்திரவின்படி குசேலரை உள்ளே புகவிட்டனர். அவரும் உட்புகுந்து வந்தனர்.

### கண்ணன் குசேலர் வருகைக்கு உவந்திருத்தல்.

ஈங்கிவன் இவ்வாறெய்த, இன்னம்வந் திலனென் றையன்
பூங்கதிர் வரவு பார்க்கும் பொற்றபுண் டரீகம் போலும்
தீங்கதிர் வரவு பார்க்கும் செவ்வரக் காம்பல் போலும்,
ஓங்குமை வரவு பார்க்கும் ஒண்டழை மஞ்ஞை போலும்.

பொருந்துதாய் வரவுபார்க்கும் புனிற்றிளங்கன்றுபோலும்
திருந்துதன் வரவுபார்க்கும் செம்மனத்தொருவன்போலும்
அருந்துநீர் வரவுபார்க்கும் அறல்நசை உடையான்போலும்,
கருந்துழாய்க் கண்ணிஅண்ணல் கமழ்நறும் சேக்கைமீதே.

முனிவரது வரவை எதிர்பார்த்திருந்தான்; முனிவர் சமீபித்த போது,

வருந்துமோர்மிடியன்சேம வைப்பெதிர் கண்டாற்போலும்,
அருந்துணவிழந்தோன் விண்ணோரமுதெதிர்கண்டாற்போலும்
பரிந்துவெப் புழல்வோன்கற்ப கம்எதிர் கண்டாற்போலும்,
சரிந்தபற்றினன் மெய்யாசான் றனைஎதிர்கண்டாற்போலும்,

எண்ணனைக் கிலங்குமார்பம் ஈந்தருள் பிரானை, நீல
வண்ணனைத் திகிரிசங்கம் வலம்இடம் உறக்கொண்டானை,
மண்ணனைத்தும் புரக்கும் வாசுதேவனை, மணக்கும்
கண்ணனைத்துளவத்தாமக் கண்ணனைக்கண்ணிற்கண்டான்.

## கண்ணன் உபசரித்தல்.

காண்டலும் உவகைபூத்துக்
கால்விசை கொடுநடந்தான்
ஆண்டகை யவனும் கண்ணுற்
றணையுடைத் தெழுநீத்தம் போல்
நீண்டபூம் பள்ளி நீத்து,
நிலவுபே ரன்பு பொங்கப்
பூண்டமா தவன்முன் சென்று
பொன்னடி வணங்கி னானல். (5)

திலகம்மண் மேதாய ஐயன்
திருவடி வணங்கிப், பின்னர்
நிலவுமெய்ப் புளகம் போர்த்து
நிரம்புறத் தழுவிக் கொண்டான்;
குலமறைத் தலைவ னென்றும்
கூர்ந்தமெய் நட்ப னென்றும்
மலர்தலை உலகம் கூறும்
வாய்மைகாத் தருளி னானே. (6)

அப்பால் முனிவரை வாசுதேவன் ஒரு பொற்பீடத்தில் எழுந்தருளப்பண்ணி மஞ்சனநீராட்டி ஈரம் புலர்த்திப் பட்டாடை சாத்தினான், பின்னர் சாந்தம் பூசி மாலை வேய்ந்து அறுசுவை யுண்டி ஊட்டி கையும் வாயும் பூசி அடைக்காய் உதவி அமளியேற்றினான். அருகிருந்து முதுகு தைவந்தான். வழி நடந்திளைத்த அடிகளை மெல்ல வருடினான். குசேலர் ஒன்றும் பேசாது ஐயன் திருவுருவையே சிந்தித்து அசைவற்றிருந்தார்.

உருவினைக் கண்டும் கண்டத்
தொளிர்வன மணம் கவர்ந்தும்
அருமைசால் முகமன் கேட்டும்
அமைந்த மெய்ப் பரிசம் உற்றும்
வெருவில்நல் திருநாமங்கள்
விருப்பின் உள் துதித்தும் ஐந்தும்
பொருவில் ஆநந்தம் எய்தப்
பொலிகடத் தீபம் போன்றான். (7)

நீருறும் உப்புப் போலும்,
நெருப்புறும் பளிதம் போலும்,
ஏருறு வடிவத் தண்ணல்
இடத்துத்தன் மனங் கலப்பப்,
பேருறு பவஞ்ச வாழ்க்கைப்
பிணிப்பொழிந் தகலக், கஞ்சத்
தாருறு மார்பத் தையன்
தன்னையும் மறந்தி ருந்தான். (8)

## கண்ணன் குசேலரோடு அளவளாவல்.

முனிவர் இங்ஙனம் இருக்குங்கால் அவர் வரவின் காரணத்தை அவர் சொல்லாமலே உணர்ந்துகொண்ட கண்ணபிரான் அவரைப்பார்த்துக் கூறலுற்றான்:—

"பூன்றதயை என்னிடத்தெப்
போதும்நீ வைத்தருள்க.
ஆன்றஎன துளத்தினைவிட்
டகன்றிலை இந் நாள்காறும்;
சான்றகுணத் தாய்நின்னைச்
சந்ததமும் நினைத்திருப்பேன்
தோன்ற அனேகம்பெறினும்
தொன்னட்பின் சிறந்தனவோ? (9)

## நட்பு.

“ஆயின்மறை முதற்கலைக
ளனைத்தும் உணர்ந் தறம்மறம்பாத்
தேயின்இது நன்றிதுதீ
தென்றுணர்த்தும் அவர்நட்பை
வீயினுந் தான் மறப்பர்களோ
மேதையோர்? மறப்பரேல்,
நாயினுங்கீழ்ப் பட்டவர்கள்
அவர்காண்இந் நானிலத்தே. (10)

“பேயோடு பழகுறினும்
பிரிவதரி தரிதென்று
தூயோர்கள் மொழிவரால்.
தூயோரும் புகழுதூயோர்
ஆயோர்கள் பெருநட்பை
அருந்தவத்தால் பெறலன்றி
ஏழைஎண் மையின்கிடைப்பின்,
இகழ்வரோ இகழ்வில்லார்? (11)

“சமையம்வரின் இடித்துரைப்பார்
தக்கவழி செலச் செய்வார்
இமையவர்தம் உலகுறவும்
இருளுலகம் பகையுமாய்
அமையஅறி வுறுத்துவார்
அந்தோ, நூல் கற்றுணர்ந்த
கமையுடையார் நட்பெவர்க்குக்
காண்கிடைக்கும்? அரிதரிது. (12)

"கூடுதற்குக் கூடாத கூட்டத்துப் படும்நட்பு
வீடுதற்குத் தக்கதாய் நாடோறும் மெலிந்தொழியும்
நீடுதற்குத் தக்கதுநன் னெறிநின்ரோர் நட்பொன்றே.
தேடுதற்குக் கிடையாத திரவியமும் அஃதாமால். (13)

"முத்திக்கு வித்தாகும் முழுதுணர்ந்தோர் பெருநட்பே
தித்திக்கும் நாடோறும்; தேவர்பெறற் கருந்திருவும்
சித்திக்கும் படிஅருளும்; செப்பரிதால், அதுநிறக.
எத்திக்கும் புகழுநினக் கியல்மணம்நன் காயிற்றே? (14)

"நின்னுடைய மனைக்கிழத்தி நிரம்புபெரு நீர்மையளே?
மன்னுடைய சொற்காத்துச் சோர்விலா மாண்பினளே?
தன்னுடைய உயிராநின் றனைப்பேணும் தன்மையளே?
உன்னுடைய வருவாய்க்குத் தக்கசெல வுஞற்றுவளே?

"பைங்குதலை வாய்மைந்தர்
பலர்பிறக்க வேண்டுமே.
எங்கும்அரும் புகழுடையாய்,
எத்தனைமைந் தர்கள்பிறந்தார்?
அங்கவரைப் பேரவையோர்
அணிதரச்செய் செயலனைத்தும்
சிங்கலறப் புரிந்தனையோ?
செய்தனையோ உபநயனம்? (16)

"நானமுதல் சந்திசெபம் நன்குநடக் கின்றனவே?
ஆனவிவை செயமெய்திடம் ஆகியிருக் கின்றதே?
மானமுறு மறைப்பொருளில் வைத்ததியா னம்சிதறு(று)
ஈனமற நிற்கின்றதே?எவரும் சொலற்கரியாய். (17)

"சீரார்நின் ஊர்நின்று சேரஇவண் வருவாரால்
நீரார்நின் தன்மையெலாம் னென்னல்வரைக் கும்தவறு
தாராய்ந்து கொண்டிருந்தேன். அகன்றபல நாள்களின்பின்
ஏரார்இன் பம்சிறப்ப இருவேமும் கூடினேம். (18)

"நள்ளார்கள் அண்மைக்கண் இருந்தாலும் நட்புறுத்தார்
விள்ளார்கள் சேய்மைக்கண் இருந்தாலும் விருப்பொழியார்.
தள்ளாத பலபொருள்கள் தனைச்சூழ இருந்தாலும்
உள்ஆத வன்கதிரை உறநோக்கும் நெருஞ்சியே. (19)

"ஐயநீ குடியிருக்கும் அணிநாட்டில் அதிகமழை
பெய்யுமழை யின்மைகிளி விட்டில் முதல்பெருங்கேடு
வெய்யகொடுங் கள்வர்வன விருகம்முதல் பலகேடு
நைய,இனி துயிரெலாம் நன்குதழைக் கின்றனவே? (20)

"இளமையில் நாம் இருவரும் சாந்தீப முனிவரிடம் கல்வி பயிலும் நாளில் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டிருந்த பேச்செல்லாம் நினைவிலிருக்கின்றனவா? ஒருமுறை முனிவரது மனைவி சோறு சமைத்தற்கு விறகு கொணரச்சொல்ல அதுபற்றி நாமிருவரும் காட்டில் திரியும்போது மழை சோனுமாரியாகப் பெய்ய, வெள்ளம் அரையளவாக ஓட இரவாகி இருள்சூழ, வழிதெரியாது ஒருவர் கையை ஒருவர் பற்றிக் காலால் வழிதடவி விடிகிறவரை குளிரில் இடர்ப்பட்டு ஓரிடத்திருந்தோமே! அப்போது குருநாதர் நம்மைத் தேடிவந்து கண்டு நம்மைப் பன்முறை ஆசிகூறி அழைத்துப்போயினரே! ஈதெல்லாம் நினைவில் இருக்கின்றனவா" என்று வினவினன். பின்பு

## கண்ணன் குசேலர் கொண்டுவந்த அவலை உண்ணல்.

"பந்தனை அகன்றமேலோய், பற்பல நாட்குப்பின்பு
வந்தனை எனக்கென் கொண்டு வந்தனை? அதனை இன்னே
தந்தனை, யாயின், நன்று. தருசுவைப் பக்கணத்தென்
சிந்தனை நின்ற"தென்றான் தெரிவரும் வஞ்சக் கள்வன்.

"இனியசிற் றுணவே தேனும்
இன்றிநீ வருவாய் கொல்லோ?
இனியநின் உள்ளம் இன்றே
எண்ணியான் அறிதல் வேண்டும்?
இனியநின் மனைவி வாளா
ஏகிவா என்ப ளோ?மற்
றினியஎற் கன்றி யார்க்குக்
கொண்டுவந் திருக்கின்றாயே? (22)

"திருந்தஇங் களித்தி" என்று
செங்கரம் மலர்த்தி நீட்டப்,
'பொருந்தஇன் பால்உண் பான்பால்
புளித்தகா டியைக்கொ டுத்திட்
டருந்திடென் றுரைத்தல்போல், இவ்
வவற்கொடை' என்றுவாளா
இருந்தனன், குசேல மேலோன்.
இவனுளம் அறிந்த கண்ணன், (23)

மலிதரும் அன்பின் வந்த
வண்பொதி அவிழ்த்து நோக்கி,
'வலிதரும் அவற்றாள் நன்று
வாய்த்தது நமக்கி' தென்று,
ஒலிதரு கழற்கால் ஐயன்
ஒருபிடி அவலைக் காதல்
பொலிதர எடுத்து வாயில்
போகட்டுக் கொண்டான் மாதோ. (24)

"செறிதரு சுவைத் தீஞ்தென்றும்
தேவர்க்கும் அரிய தாகும்
அறிதரு விருப்பின் இல்லின்
அமைத்ததே; பழைதும் அன்று;
குறிதரு விலைப்பால் சென்று
கோடல்இவ் வளத்ததோ"? என்(று)
உறிஅளை வாரி உண்டோன்
ஒருபிடி அவல்தின் றானே. (25)

"முன்னும்இவ் வவல்ஒன் றேனும்
முனைமுறிந் ததுவு மின்று;
பன்னும்முட் டையும்இன் றாகும்
பட்டஅங் கையும் மணக்கும்
கொன்னும் வாய் செறிப்பின்
அம்ம! குளமும்வேண் டுவதின்"றென்ன
உன்னும்பல் உலக முண்டோன்
ஒருபிடி அவல் தின்றானே. (26)

"நாட்டும்இவ் வவல் விருப்பம்
நமக்குமிக் குள்ள தென்று
கேட்டுளாய் கொல்லோ? முன்னும்
கிளர்ந்திருப் பதுமன் றே"யென்(று)
ஏட்டுமென் மலர்ப்பூந் தொங்கல்
இமையவாக் கமிர்தம் முன்னாள்
ஊட்டிய புகழின் மேலோன்
ஒருபிடி அவல்தின் றானே. (27)

## 4. தேம்பாவணி.

இது கிறிஸ்தவ மதத்திற் காதாரமாயுள்ள விவிலியநூலிலும் அதற்குச் சார்பாய்ச் செய்துள்ள வேறு சில நூல்களிலுமுள்ள உண்மை நிறைந்த சரித்திரங்களை எடுத்துத் தமிழ்ப் பாடல் ரூபமாய் வெளியிடும் ஒரு பெருங்காப்பியம். அடியிற் காணும் பகுதி இக்காவியத்தில் இயேசுநாதர் உலகில் அவதரித்த சிறப்பினை விளக்கும் மகவருள்படலத்தைச் சேர்ந்தது.

இக்காவியத்தை இயற்றியவர் Constantius Beschi. இவருக்கு வீரமாமுனிவர், தைரியநாதன் என்ற பெயர்களும் வழங்கும். இவர் ஐரோப்பியர். வட இட்டாலி தேசத்தில் வேனிஸ் நகருக்கு மேற்கே 90 மைல் தூரத்திலுள்ள காஸ்டிக்கிலியானி (Castiglione) என்னும் ஊரில் கி-பி-1680ஆ நவம்பர்மீ 8உ பிறந்தவர். இவர் இளவயதிலேயே கிறிஸ்தவமதப் பற்றுடையவராய் இந்தியாவில் மதப்பிரசாரம் செய்யக்கருதிப் புறப்பட்டு, 1706-ஆ இந்தியாவிலுள்ள கோவாப்பட்டினத்தில் வந்திறங்கித் தங்கியிருந்து, பின்னர் திருநெல்வேலிக்கு வந்து தமிழ்ப்புலவர்களை அடுத்துத் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்கத் தொடங்கிப் பெரும் புலவராகி அந்த ஜில்லாவிலேயே தமது வேலையைச் செய்யத் தொடங்கினார். இவர் வதிந்திருந்த ஊர்கள் வடக்கன்குளம், காமயநாயக்கன்பட்டி, கயத்தாறு. 1716ல் மதுரைக்கு வந்தார். பின்னர்த் திருச்சியை அடுத்த வடகார்பட்டி என்னும் கிராமத்துக்குச் சென்று தங்கியிருந்து, 1724ஆ தேம்பாவணியைப் பாடி முடித்தார். ஷை ஜில்லா ஆரூரிலிருக்கும்போது இதற்கு உரையும் செய்தார். தமிழில் முதன்முதல் அகராதி செய்தவர் (சதுரகராதி) இவரே. வித்தியார்த்திகளுக் கேற்ற வசனநூல் பலவும், செய்யுள்நூல் பலவும் சில இலக்கணங்களும், தமிழ் பிரஞ்சு அகராதி, தமிழ் லட்டீன் அகராதி, தமிழ் போர்த்துகீஸ் அகராதி என்ற அகராதிகளும் செய்துள்ளார். இவர் அந்நிய தேசத்தவராயிருந்தும் தமிழ்மொழியில் இவருக்கிருந்த அபிமானமும் அபிருசியும் அளவிடற்பாலனவல்ல. இவரது தமிழபிமானத்தைத் தேம்பாவணி, மகிழ்வினைப்படலம் 133-ம் பாட்டே விளக்கும். இக்காவியத்தில்

திருக்குறள், சிந்தாமணி, கம்பராமாயணம் என்னும் பழந்தமிழ் நூல்களின் சொற்பிரயோகங்களும் கருத்துக்களும் மலிந்து கிடக்கின்றன. பாட்டுக்கள் தோறும் சிறந்த எதுகைத் தொடைநயம் அமைந்துள்ளது. செய்யுள்கள் பெரும்பாலும் சிந்தாமணிச் செய்யுளின் ஓசை அமைதியை யுடையனவாயிருக்கின்றன. இவர் தமிழுக்குழைத்த நன்றி என்றும் மறக்கற்பாலதன்று.

## இயேசுநாதர் பிறப்பு.

அகஸ்டஸ்ராயன் (Caesar Augustus) என்பான் பொதுவற உலகெல்லாம் ஆண்டதினால் செருக்குற்றுப் பல முறையாலெங்கும் பிரிந்துபோன எல்லாரும் தாமிருந்த பழைய ஊரிலே போய்க் குலத்தின் முறையோடு வரியும் எண்ணிக்கையும் கொடுக்கும்படி கட்டளை பிறப்பித்தான். இதனை அறிந்த சூசை உலக நாதனை (இயேசு நாதனை) கர்ப்பத்தில் தாங்கியிருக்கும் மரி அம்மையாரை நோக்கித் தான் 'அரையன் கட்டளையை நிறைவேற்றப்பெத்திலேம் (Bethlehem) என்னும் நகர்செல்ல வேண்டு'மென்று சொல்ல பூரணகர்ப்பிணியான மரியாளும் உடன் சென்றனள். பல காடுகளையும் சோலைகளையுங் கடந்து இராக்காலம் துவக்கும்போது பெத்திலேம் வந்து சேர்ந்தனர். பின்னர் சூசை

சாதியினால் நிகர்க்கரிய
மலர்மென் றாளின் தகுதிநலாள்
வீதியினால் எய்தியநோ
யாற்ற வெஃகி வெயில்மிடைந்த
ஓதியினு ளுளத்துயர்ந் தோன்
ஒதுங்குந் தன்மைத் துறையுள்அருட்
சோதியினு லவிர்முகத்தில்
உறவோர் கேட்டுத் துருவினனால் (1)

"நல் கூர்ந்தார்க்கில்லை சுற்றம்' என்பது மூதுரையன்றோ? அதனால்

நஞ்செஞ்சாக் காஞ்சிரங்காய்
அழகென் றெண்ணி நச்சுவார்போல்
விஞ்செஞ்சா வினைபயக்கும்
பொருளை வெஃகி விழிகடந்த
மஞ்செஞ்சா அருட்செல்வம்
எண்ணு மூடர் வறியரோடு
நெஞ்செஞ்சாத் திருவோரை
எவரோவென்று நீக்கினரால். (2)

பின்னரும் இடந்தேடி நகரமெல்லாம் இருவரும் அலைந்தனர்; ஊரவர் அனைவரும் இடிபோற் சீறிச்சினந்தனர். அதனால் சூசை வருந்தி

நான்செய்த குறைதானோ
நகரே செய்த நவைதானோ
தான்செய்த விதிதானோ
தரணி காக்கத் தற்பரனிங்
கூன்செய்த உடலொடெழ
இடமொன் றில்லை உலகிலெனத்
தேன்செய்த பூவுயர்த்தோன்
அரற்றி விம்மித் திரிவானும். (3)

இங்ஙனம் வருந்திய சூசையும் மாமரியும் தம்மை யிகழ்ந்தவர்களையெல்லாம் புகழ்ந்தவர்களாகக்கருதி அவர்களைத் துதித்து வணங்கி மீண்டும் மீண்டும் இடம் வேண்ட அவர்களுரைத்த நிந்தையை மறுபடியும் கேட்டு மகிழ்ந்து, அவர்களை நோக்கி "உறவின் முறையைக் கருதாவிடினும் இரந்தவர்க்குள்ள இரக்கமாகிலும் எங்கள்மேல் உங்களுக்கிராதா? அண்டினவரை ஆதரித்த நன்மை, பாவக்கடலை மறித்தடைக்கும் கரையல்லவோ?" என்று கைகூப்பித்தொழுதிடவும் அவர்கள் அவர்களைப் பரிகசித்துநகைத்தார்கள். இந்த நிலைமையிலும் சூசை அரசன் கட்டளைப்படி வரியும் எண்

ணிக்கையும் கொடுத்துவிட்டு மரியை நோக்கிப் "பெருமையுடைய வளே! நிலத்தின் றன்மையால் நல்ல நீர் தன் தன்மை திரிந்து, அந் நிலத்தின் தன்மை யடைந்ததுபோல அற்பனாகிய என்னை நீ அடைந்தமையினன்றோ வருத்தமும், நிந்தையும் அடைந்தாய்" என்று இரங்கிக் கூறிவிட்டு "மரியே! செல்வவான்கள் உறையும் இப்பட்டணத்தில் இனி நமக்கு இடங்கிடையா. ஆகையால் இந் நகர்க்குப் புறத்தே நாம் வரும் வழியிற் கண்ட கல்லால் அமைந்த குகையில் ஒடுங்கப்போனால் நல்ல"தென்றான். பின்னர் இருவரும் நடுநிசியில் இவர்களைச் சூழ்ந்துவந்த வானவர் வெளிச்சங்காட்ட அக்குகையை அடைந்தார்கள்.

உயரிய வரைபகிர் உறுப்புப் போன்றெனப்
பெயரிய கல்மிசைப் பெருங்கல் சேர்த்திய
துயரியல் தோன்றிடம் விலங்கு துன்னிட
மயரிய இடமொரு முழையஃ தாமரோ. (4)

கலங்கெழுந் திரையெறி கடலெ னாநகர்
புலங்கெழு மிடைமனுப் புழங்க லாமையும்
விலங்கெழும் இடமென வெறுத்த அம்முழை
நலங்கெழும் இறையவன் பிறப்ப நாடினான். (5)

இருள்மயமான குகையை, மணி ஒளி மயமாய் நின்ற வானவர், ஒளியை உண்டாக்கினர். அது பூஞ்சோலைபோல் விளங்கிற்று. மரி குசையை நித்திரை செய்து சிரமபரிகாரம் செய்து கொள்க என்றனள். அவனும் ஒருப்பக்கம் போய்த் தனியே கர்த்தாவை வணங்கினான். மரியாள் தனது திருவயிற்றில் திருக்குமரன் அசையக் கண்டனள்.

உலக மூன்றினும் உவமை நீக்கிய
இலயை மூன்றினும் இழிவில் கன்னியாய்
அலகில் மூன்றினுள் நடுவ மைந்தனை
நிலவு மூன்றினும் நிறப்ப வீன்றனள். (6)

வாய்ப்படா நுழை பளிங்கின் வாய்கதிர்
போய்ப்படா வொளி படரும் போன்றுதாய்
நோய்ப்படா தருங் கன்னி நூக்கிலா
தாய்ப்படா வயத் தமலன் தோன்றினன். (7)

மாத மார்கழி வைகல் ஐயைந்தாய்
எதி லாநிசிக் கிருத்தை மூவைந்தாய்
ஆதி நாளென ஆதி நாதனைக்
காதல் நாயகி களிப்பின் நல்கினள். (8)

பாய்ந்த வான்தருப் பருவ மின்றியும்
ஈய்ந்த தீங்கனி யியையப் பூத்தலும்
வேய்ந்த நாயகன் விளைத்த நன்றியால்
வாய்ந்த ஓகையின் முறுவல்மாணுமே. (9)

சொக்க ளாவுருத் தோன்றிய தோன்றலை
மிக்க யேலொடு காபிரி யேல்விழைந்
தொக்க வேந்தினை ரொக்கவும் தாய்முனர்
மக்கள் நாதனை மாண்பெழக் காட்டினர். (10)

பொதிர்கொள் பூமணம் போன்மக வீன்றனள்
கதிர்கொள் சேயோடு கண்கள் கலந்தகால்
எதிர்கொள் வெஞ்சுடர் காண்முழு இந்தெனு
முதிர்கொள் இன்ப முகத்து விளங்கினள். (11)

திருக்குமாரன் தாயை நோக்கி,'என்னைப்பெற்றதாயே நீயும் என்னைப்போலிரு'வென்றான். தாயும் தேவகுமாரனை வணங்கினள். முன்சொன்ன வானவரிருவரும் திருக்குமாரனைத் தாயின் காத்தில் தந்து முன்னே விழுந்து வணங்கினர்.

காந்தனேரிய செங்கரத் தேந்தினள்
ஏந்தமார்பி லிறுகவுஞ் சேர்த்தனள்
வாய்ந்த பூம்பதம் நீவி வணங்கினள்
ஆய்ந்த நூற்கடந் தாருணர் வெய்தினள் (12)

பின்னர் தேவகுமாரனைப்பலவாறு துதித்துப்புகழ்ந்தனள். பின்பு,

தெருள் சுரந்த திரைப்புவி யார்ந்துணப்
பொருள் சுரந்துயிர்க்(கு) உண்டி பொழிந்தனன்
மருள் சுரந்த வடுக்கெட மைந்தனுய்
அருள் சுரந்தமு தாய்தர நுங்கினன். (13)

மரியாள் சூசையைத் தேவகுமாரன் வடிவினைக்கண்டுமகிழ அழைத்தனள்.

இந்து நேர்நுதல் மீன்கள் நேர்விழி
யிண்டை நேர்முக நீர்மையாற்
கந்த நேர்நளிர் தாது நேருடல்
காட்டு நாதனை யம்புயச்
சந்தம் நேரிய கன்னி நேர்கையில்
தாம நேரிய முத்தெனச்
சிந்து நேர்நயம் மூழ்கு சீர்மையில்
தேற நோக்கினன் சூசையே. (14)

வியப்புற்று நின்ற சூசையை நோக்கிக் கன்னிமரி 'நம் நாதனை உன் கையில் ஏந்திக்கொள்'என்று மலர்க்கையை நீட்டினள்; அவனும்,

கைத்த லத்தி லெடுத்து மார்பொடு
காதலோங்க வணைத்தலும்
முத்த மிட்டலும் நோக்கில் தீட்டலும்
முற்ற நீரில் நனைத்தலும்

சித்த முற்றலும் நாண் மலர்க்கழல்
　　சென்னியின் மிசை வைத்தலும்
இத்தி றத்திலும் உண்ம கிழ்ந்துறும்
　　இன்ப மெல்லையு மில்லையே. (15)

இன்பக்கடலில் மூழ்கிய சூசை குமாரனைத் தாய்கைக்கொடுக்கத் தேவகுமாரன் விரிந்த செந்தாமரை மெத்தையின்மேல் அன்னக் குஞ்சுபோலக் கன்னித்தாயின் கையிலே தூங்கினான்; சூசை பலவாறு பாராட்டிச் சீராட்டித் துதித்தனன்.

களித்த நாளில் அருப்புந்தேன்
　　காலே! இனிதீங் கரும்புதியே
துளித்த நானத் தேனரும்பத்
　　துணர்நாண் மலர்காள்! அரும்புதிரே
விளித்த நாகு மாங்குயில்காள்!
　　விளைதேன் பாவை அரும்புதிரோ
அளித்த நாதன் நான்கனிய
　　அன்பு துயிலாத் துயில் கின்றான். (16)

கண்பட் டுறங்கக் கண்டேனே
　　கருணை கரனே! களிக்கடலே!
புண்பட் டுளையும் நெஞ்சிற்கோர்
　　பொருவா மருந்தே! அருளன்பே!
மண்பட் டலையும் கடலன்ன
　　மருளென் னெஞ்சிற் குயிர்நிலையே!
எண்பட் டுயர்ந்த செல்வரசே!
　　எம்மே லிரங்குந் தயையினுமே. (17)

வான்தோய் நயங்கள் பயந்தோய்நீ
மண்தோய் துயர்நீத் தளித்தோய்நீ
தேன்தோய் இன்பத் தமைந்தோய்நீ
சேண்மேற் புகழப் படுவோய்நீ
நான்தோய் உணர்வின் உயர்ந்தோய்நீ
நானென் றாக அவதரித்தே
ஊன்தோய் உடல்கொண் டனவன்பின்
உணர்விட் டெனக்குப் பணியாயோ. (18)

நூல்வாய்ப் புகழ்மே லுயர்ந்தோய்நீ
நோய்வாய் மருந்திற் கனிவோய்நீ
கோல்வாய் கோடா நீதிநெறி
கொண்டெவ் வுலகும் புரந்தோய்நீ
வேல்வாய்க் குருதி பாய்ந் திறப்ப
மெய்கொண் டாயோ விதையறியாக்
கால்வா யிலைபோல் தியங்கியவென்
கருத்திற் குணர்வை உணர்த்தாயோ. (19)

என்றான் அழுதான் உள்ளுருகி
யின்பக் கடலாழ்ந் தன்றாழ்ந்தான்
குன்றா விறையோன் தயைக்கடலுட்
குளித்தான் நீந்திக் கரைகாணான்
சென்றா னென்ன மெய்ம்மறந்தே
சிறிதோர் கால்நின் றுணர்ந்தவைவான்
நின்றார் கண்டுள் ளதிசயிப்ப
நிகரில் அன்பால் மீண்டுரைப்பான். (20)

அறந்தாய் தந்தை சுற்றமுமற்
றனைத்தும் நீயே கதிநீயே
பிறந்தா யுலகிற் குயிரன்னாய்
பிறந்தெம் துயரும் எம்பகையும்
துறந்தாய் எங்கள் சிறைதீர்த்தாய்
துகள்பூட் டியவீட் டுயர்வாயில்
திறந்தா யிவையா வருமறியத்
திறன்செய் தருள்செய் திரங்காயோ. (21)

என்று பலவாறு தொழுதான். அவ்வளவில்,

துஞ்சுந் தன்மைத் தெவ்வுலகும்
துணையற் றுள்ளோ னிவைகேட்டு
விஞ்சுந் தன்மைத் தோங்கவளன்
விழைவே விளக்கும் விழிவிழித்தான்
எஞ்சுந் தன்மை யுதவியதா
னியைந்த தன்மை யுலகுணர்த்த
அஞ்சுந் தன்மைத் தெதிரிறைஞ்சும்
அமரர்க் குரையா தேவவிட்டான். (22)

---

# VI. பல்துறைப் பகுதி.

## 1. அரசியல்.

### (தசரதன்.)

தசரதனைப்பற்றிய இவை கம்பராமாயணத்துள் அரசியற் படலத்தில் உள்ளவை. தசரதன் இராமனது தந்தை. கம்பர், கவிச் சக்கரவர்த்தி. இவர் சோழநாட்டு தேரழுந்தூரில் பிறந்தவர். குலம் ஓச்சர்குலமென்ப, காலம் இரண்டாங்குலோத்துங்கன் காலம் (கி - பி - 1143) இவரது கவிகள் வெண்சொல்லும் புதைபொருளும் உடையனவாய் அளத்தற்கரிய நயமுடையவை. திருக்குறள் சங்கநூற்கருத்துக்களையும், ஜீவக சிந்தாமணி முதலிய காவ்யங்களின் கருத்துக்களையும் இவர்கவிகளில் பாக்கக்காணலாம். ‘கல்வியிற் பெரியவர் கம்பர்’ என வழங்கும் மூதுரையே இவரது கல்விப்பரப்பை விளக்கும். திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலால் இளவயதில் ஆதரிக்கப்பெற்றவர். இவர் வரலாறு விரிப்பிற்பெருகும். இவர் செய்த வேறுநூல் சடகோபரந்தாதி. சிலர் திருக்கை வழக்கம், ஏரெழுபது சரசுவதி அந்தாதி என்பவையும் இவர் பாடியவை எனக் கூறுவர்.

தாயொக்கு மன்பின்; தவமொக்கும் நலம்பயப்பில்;
சேயொக்கும் முன்னின் றொருசெல்கதி உய்க்குநீரான்;
நோயொக்கு மென்னின் மருந்தொக்கும்; நுணங்குகேள்வி
ஆயப்புகுங்கால் அறிவொக்கும் எவர்க்கும் அன்னான். (1)

ஈய்ந்தே கடந்தான் இரப்பார்கடல் எண்ணி னுண்ணூல்
ஆய்ந்தே கடந்தான் அறிவென்னும் அளக்கர்; வாளால்
காய்ந்தே கடந்தான் பகைவேலை; கருத்து முற்றத்
தோய்ந்தே கடந்தான் திருவிற்றொடர் போகபௌவம். (2)

எய்யென எழுபகை யெங்கு மின்மையால்,
மொய்பொரு தினவுறு முழவுத் தோளினன்
வையக முழுவதும் வறிஞ னோம்புமோர்
செய்யெனக் காத்தினி தரசு செய்கின்றான். (3)

(சச்சந்தன்.)

இவன் சிந்தாமணிக் கதாநாயகனாகிய ஜீவகனின் தந்தை. சிந்தாமணி, தமிழ்ப்பெருங்காப்பியம் ஐந்தனுள் ஒன்றாகும்; ஜைன மதத்தினனாகிய இவனது சரித்திரத்தை விரித்துக்கூறும் முகத்தான் ஜைனமத சித்தாந்தத்தை வெளியிடுவது. சொல்லழகும் பொருளழகும் பொருந்தியது. பிற்காலக்காவியங்களுக்குக் கற்பனை யூற்றாயிருப்பது. இதனை இயற்றியவர் சோழர்குலத்தவராகிய திருத்தக்கதேவர் என்னும் ஜைனமுனிவர். இவரே நான்கடிப் பாவில் காவ்யம்பாடும் வழக்கை முதன் முதல் தமிழில் புகுத்தியவர். இவர் காலம் கடைச்சங்ககாலத்துக்குச் சிறிதுபிற்பட்டது.

வண்கை யாற்கலி மாற்றிவை வேலினால்
திண்டி றற்றெவ்வர் தேர்த்தொகை மாற்றினான்
நுண்க லைக்கிட னாய்த்திரு மாமகள்
கண்க ளுக்கிட னாங்கடி மார்பனே. (4)

கோதை நித்திலஞ் சூழ்குளிர் வெண்குடை
ஓத நீருல கொப்ப நிழற்றலால்
தாதை யேயவன் றாணிழற் றங்கிய
காத லாற்களிக் கின்றதிவ் வையமே. (5)

தருமன் தண்ணளி யாற்றன தீகையால்
வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே
அருமை; யாலழ கிற்கணை யைந்துடைத்
திரும கன்றிரு மாநில மன்னனே. (6)

ஏனை மன்னர்தம் இன்னுயிர் செற்றவேற்
றானை மன்னரிற் றனிமி லேறனான்
தேனை மாரியன் றன்றிசை காவலன்
வானந் தோய்புக ழான்மலி வெய்தினான். (7)

(நளன்.)

(நளன் நைடதகாவியத்தலைவன்; 38-பக்கம் பார்க்க)

வளமலி இந்நகர் மன்னர் மன்னவன்
தளையவிழ் நறுமலர்த் தண்ணந் தாரினான்;
களைகணாய் உலகொரு மூன்றுங் காத்தருள்
நளனெனப் பெயரிய நாம வேலினான்; (8)

ஒன்னலர் மணிமுடி யுரிஞ்சு தாளினான்;
கன்னவில் தோளினான்; கமலக் கண்ணினான்;
தன்னுயி ராமென உலகிற் றங்கிய
மன்னுயி ரனைத்தையும் புரக்கு மாட்சியான்; 9)

வெங்கலி யிருள்கெட வெண்ணி லாவுமிழ்
திங்களங் கவிகையான்; திகிரி ஒன்றினால்
அங்கண்மா நிலமுழு தளிக்கும் ஆற்றலான்;
மங்குலின் எழுமடங் குதவும் வண்மையான்; (10)

அருளின துறையுள்; நல் அறத்தின்வேலி; சொல்
தெருளுறு கல்வியந் தெய்வ மாக்கடல்;
குரைகடற் புவிபுகழ் குணக்குன்றம்; சுடர்
எரிதவழ் அலங்கல் வேல் அரச ரேறனான். (11)

அதிவீரராமபாண்டியன்.

---

## 2. கையறுநிலை.

### இராமபிரானால் இராவணன் கொல்லப்பட்ட பின்பு விபீஷணன் புலம்பல்.

உண்ணாதே யுயிருண்ணா தொருநஞ்சு
சனகியெனும் பெருநஞ் சுன்னைக்
கண்ணாலே நோக்கவே போக்கியதே
உயிர்நீயுங் களப்பட் டாயே!
எண்ணாதே னெண்ணியசொ லின்றினித்தா
னெண்ணுதியோ வெண்ணி லாற்றல்
அண்ணாவோ அண்ணாவோ! அசுரர் கடம்
பிரளயமே! அமரர் கூற்றே! (1)

ஓராசை யொருவன்மேல் உயிராசைக்
குலமகள்மே லுடைய காதல்
தீராசை பழியென்றே னெனைமுனிந்த
முனிவாறித் தேறி னாயோ?
போராசைப் பட்டெழுந்த குலமுற்றும்
பொன்றவுந்தான் பொங்கி நின்ற
பேராசை பேர்ந்ததோ? பேர்ந்தாசைக்
கரியிரியப் புருவம் பேர்த்தோய்! (2)

மன்றன்மா மலரானும் வடிமழுவாட்
படையானும் வரங்க ளீந்த
ஒன்றலா தனவுடைய முடியோடும்
பொடியாகி யுதிர்ந்து போன
அன்றுதா னுணர்ந்திலையே யானுலு
மவனுட்டை யணுகி நின்ற
இன்றுதான் தெரிந்ததே யிராமனார்
யாவர்க்கும் இறைவ ராதல்? (3)

வீரநா டற்றாயோ? விரிஞ்சனும்
யாவர்க்கு மேலா முன்பன்
பேரநா டற்றாயோ? பிறைசூடி
பிஞ்ஞகன்றன் புரம்பெற் றாயோ?
ஆரணு வுன்னுயிரை யஞ்சாதே
கொண்டகன்றார்? அதெலா நிற்க;
மாரனார் வலியாட்டம் தவிர்ந்தாரே
குளிர்ந்தானே மதிய மென்பான்.! (4)

கொல்லாத மைத்துனனைக் கொன்றாயென்
றதுகுறித்துக் கொடுமை சூழ்ந்து
பல்லாலே யிதழதுக்குங் கொடும்பாவி
நெடும்பாரப் பழிதீர்ந் தாளே
நல்லாருந் தீயாரு நரகத்தார்
துறக்கத்தார் நம்பி! நம்மோ
டெல்லாரும் பகைஞரே யார்முகத்தே
விழிக்கின்றாய் எளியை யானாய்.! (5)

போர்மகளைக் கலைமகளைப் புகழ்மகளைத்
தழுவியகை பொறாமை கூரச்
சீர்மகளைத் திருமகளைத் தேவர்க்குந்
தெரிவரிய தெய்வக் கற்பின்
பேர்மகளைத் தழுவுவான் உயிர்கொடுத்துப்
பழிகொண்ட பித்தா! பின்னைப்
பார்மகளைத் தழுவினையே திசையானைப்
பணையிறுத்த பணைத்த மார்பால்.! (6)

## மண்டோதரி (இராவணன் மனைவி) புலம்பல்.

வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த
  திருமேனி மேலுங் கீழும்
எள்ளிருக்கு மிடமின்றி யுயிரிருக்கும்
  இடனாடி யிழைத்த வாறோ?
கள்ளிருக்கு மலர்க்கூந்தற் சானகியை
  மனச்சிறையிற் கரந்த காதல்
உள்ளிருக்கு மெனக்கருதி யுடல்புகுந்து
  தடவியதோ வொருவன் வாளி! (7)

காந்தையருக் கணியனைய சானகியார்
  பேரழகும் அவர்தம் கற்பும்
ஏந்துபுயத் திராவணனார் காதலுமச்
  சூர்ப்பணகை யிழந்த மூக்கும்
வேந்தர்பிரான் தயரதனார் பணியினால்
  வெங்கானில் விரதம் பூண்டு
போந்ததுவுங் கடைமுறையே புரந்தரனார்
  பெருந்தவமாய்ப் போயிற் றம்மா! (8)

ஆரனா ருலகியற்கை யறிதற்கா
  ரவையேழு மேழும் அஞ்சும்
வீரனா ருடல்துறந்து விண்புக்கார்
  கண்புக்க வேழ வில்லால்
நாரநாண் மலர்க்கணையால் நாளெல்லாம்
  தோளெல்லா மைய வெய்யும்
மாரனார் தனியிலக்கை மனித்தனார்
  அழித்தனரே வரத்தி னாலே! (9)

கம்ப நாடர்.

---

## 3. வீரத்தாய்மார்.

கெடுக சிந்தை கடிதிவள் துணிவே
மூதின் மகளிர் ஆதல் தகுமே
மேனாள் உற்ற செருவிற் கிவள்தன்னை
யானை எறிந்து களத்தொழிந் தனனே;
நெருநல் உற்ற செருவிற் கிவள்கொழுநன்
பெருநிரை விலங்கி யாண்டுப்பட் டனனே;
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்துடீஇப்
பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி.
ஒருமகன் அல்ல(து) இல்லாள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே. (1)

ஒக்கூர் மாசாத்தியார்.

மாசாத்தியார் என்பது இவரது இயற்பெயர். ஒக்கூர் இவரது பிறப்பிடம். இவ்வூர் இராமநாதபுரம் ஜில்லாவில் சிவகங்கைக்குவடக்கே ஐந்துமைல் தூரத்திலுள்ளது. இவர் பெண்பாலர். கடைச்சங்க காலத்தினர். இவர் பாடல்கள் அகநானூற்றில் மூன்றும், குறுந்தொகையில் ஐந்தும் புறநானூற்றில் ஒன்றுமாக ஒன்பது பாடல்கள் கிடைத்திருக்கின்றன. மேற்காட்டிய இவரது பாடல் புறநானூற்றிலுள்ளது. இச்செய்யுளில் ஓர் வீரத்தாயின் வீரச்செயல் பாராட்டப்பெற்றிருப்பது வியப்பை விளைக்குந்தன்மையது.

நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்,
'படையழிந்து மாறினன்' என்று பலர்கூற,
மண்டமர்க்(கு) உடைந்தன னாயின் உண்டவென்
முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்

கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களம் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே. (2)

காக்கைபாடினியார் நச்செள்ளையார்.

இவரும் பெண்பாலரே. நச்செள்ளையார் என்பது இயற்பெயர். இவர் 'விருந்துவரக்கரைந்தது காக்கையதுபலியே' என ஒரு செய்யுளில் (குறுந்தொகை 210) காக்கையைப்பாடியதால் 'காக்கை பாடினியார்' என அழைக்கப்பட்டார். இவர் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்னும் சேர அரசன்மீது பத்துப்பாடல்களைப் பாடி (பதிற்-6-ம் பத்து) ஆபரணத்துக்காக ஒன்பது துலாம் பொன்னும் லட்சம் பொற்காசும் பரிசிலாகப் பெற்றவர். இவரது இப்புறப் பாடலால் பண்டைக்காலத்து நம் தமிழ்நாட்டுப் பெண்டிரின் வீரமும் கல்விச் சிறப்பும் இத்துணையனவென அறியக்கிடக்கின்ற மைகாண்க. இவரது காலம் கடைச்சங்ககாலம். இவரது பாடல் சங்கநூல்கள் பலவற்றிற் காணப்படுகின்றன. (புறம்-குறுந்-பதிற்)

## 4. வஞ்சினக்காஞ்சி.

அஃதாவது ஒரு அரசன் "என்னோடு பகைத்துப் போர் செய்யவரும் இவ்வரசனை வென்று தாழ்த்தேனாயின் இன்ன இன்ன தீச்செயல் புரிந்தவனாவேன்" எனச் சபதம் செய்து போர்க்குப் புறப்படுதல் இஃது ஓர் புறப்பொருள்துறை.

கீழ்வரும் பாட்டு, தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்னும் பாண்டியன் இளைஞனாய் அரசாண்டிருக்குங் காலத்தில் அவனோடு போர் செய்தற்குச் சேரன், சோழன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன்

என்னும் ஏழரசரும் படையெடுத்துவர. அப்போது அவர்களை வெல்லுதற்கு அப்பாண்டியன் எதிர்த்துச் சென்றகாலத்தில் வஞ் சினங்கூறிப் பாடியதாகும். இப்பாட்டினால் இவனுக்குப் புலவர் களால் மதிக்கப்படுதலி லிருந்த நாட்டமும், இவனது ஏனைய குணவிசேடங்களும் புலப்படும். இது புறநானூற்றிலுள்ளது.

நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்,
இளையன் இவனென உளையக் கூறிப்
படுமணி யிரட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையுந் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாமென்(று)
உறுதுப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொ(டு)
ஒருங்ககப் படேஎ னாயிற் பொருந்திய
என்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது
கொடியனெம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலே னாகுக;
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் நிலவரை;
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க் கீயா இன்மையா னுறவே. (1)

நெடுஞ்செழியன்.

---

# VII. வருணனைப் பகுதி,

## 1. பாண்டிநாடு.

அமுதுறழ் தமிழொண் முத்தம் ஐயசந் தனமெல் வாசம்
கமழ்குளிர் தென்றலென்று கரையரும் பொருள்படாமல்
இமிழ்கடல்வரைப்பெலாந்தோன்றெண்பொருள்படுநாடெள்ளித்
தமிழ்முதல் பிறக்குநாடாய்த் தயங்குமாற் பாண்டிநாடு. ()

சிவப்பிரகாசர்.

பொதியிலே விளைகின்றன சந்தனம் பொதியின்
நதியிலே விளைகின்றன முத்தமந் நதிசூழ்
பதியிலே விளைகின்றன தருமம் அப்பதியோர்
மதியிலே விளைகின்றன மறைமுதற் பத்தி. (2)

வெம்மையால் விளைவஃகினும் வேந்தர்கோல் கோடிச்
செம்மைமாறினும் வறுமைநோய்சிதைப்பினுஞ் சிவன்பாற்
பொய்ம்மை மாறிய பத்தியும் பொலிவுங் குன்றாவாய்த்
தம்மை மாறியும் புரிவது தரும மந்நாடு. (3)

பரஞ்சோதிமுனிவர்.

நந்தின் இளஞ்சினையும் புன்னைக் குவிமொட்டும்
பந்த ரிளங்கமுகின் பாளையும்—சிந்தித்
திகழ்முத்தம் போறறோன்றுஞ் செம்மற்றே, தென்னன்
நகைமுத்த வெண்குடையான் நாடு, (4)

முத்தொள்ளாயிரம்.

## 2. சேரநாடு.

அள்ளற் பழனத் தரக்காம்பல் வாயவிழ
வெள்ளந்தீப் பட்ட தெனவெரீஇப்—புள்ளினந்தம்
கைச்சிறகாற் பார்ப்பொடுக்கும் கவ்வை யுடைத்தரோ
நச்சிலைவேற் கோக்கோதை நாடு. (5)

முத்தொள்ளாயிரம்.

## 3. சோழநாடு.

காவ லுழவர் களத்தகத்துப் போரேறி
நாவலோஒ வென்றிசைக்கு நாளோதை—காவலன்றன்
கொல்யானை மேலிருந்து கூற்றிசைத்தாற் போலுமே
நல்யானைக் கோக்கிள்ளி நாடு. (6)

முத்தொள்ளாயிரம்.

[முத்தொள்ளாயிரமென்பது, சேர, சோழ, பாண்டியரென்னும் தமிழ்நாட்டு முடியுடை வேந்தர் மூவரையும் அறம், பொருள், இன்பம் பற்றிப் புகழ்ந்துரைக்கும் மூன்று தொள்ளாயிரம் (௨ாயிரத்தெழுநூறு) வெண்பாக்களா லாகியதொரு பழையநூல். இது அவ்வரசர்களுடைய நாடு, நகர், சேனை, போர்க்களம், வெற்றி, கொடை, புகழ் முதலியவற்றைச் சிறப்பித்துக் கூறும். இந்நூல் முழுதும் கிடைக்கவில்லை. புறத்திரட்டாசிரியராலும், உரையாசிரியர்களாலும் எடுத்தாண்ட பாட்டுக்கள் 105 கிடைத்திருக்கின்றன. ஆசிரியர் பெயர் தெரியவில்லை.]

## 4. கோசலநாடு.

(மருதவளம்.)

தண்டலை மயில்க ளாடத்
தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கண் முழவி னேங்கக்
குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை யெழினி காட்டத்
தேம்பிழி மகர யாழின்
வண்டுக ளினிது பாட
மருதம்வீற் றிருக்கு மாதோ. (7)

சேலுண்ட வொண்க ணாரிற்
றிரிகின்ற செங்கா லன்னம்
மாலுண்ட நளினப் பள்ளி
வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்று மேதிக்
கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத்
தேரைதா லாட்டும் பண்ணை. (8)

கம்பர்.

## 5. ஏமாங்கதநாடு.

காய்மாண்ட தெங்கின்
பழம்வீழக் கமுகின் நெற்றிப்
பூமாண்ட தீந்தேன்
றொடைகீறி வருக்கை போழ்ந்து

தேமாங் கனிசிதற
வாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென்
றிசையாற்றிசை போய துண்டே. (9)

திருத்தக்கதேவர்.

## 6. நிடதநாடு.

வள்ள வாய்ச்செழுங் கமலத்தில் வண்டுபாண் மிழற்றும்.
அள்ள லங்கருஞ் சேற்றிடை ஆமைகண் படுக்கும்.
பள்ள நீர்ச்செழும் பணைதொறும் பணிலமுத் துயிர்க்கும்
கள்ளுலாமலர்ப் பொதும்பரிற் களிமயி லகவும். (10)

பண்ணை வாய்த்தவழ் பணிலங்க ளுயிர்த்தவெண் முத்தும்,
கண்ணு டைக்கரும் பீன்றவெண் முத்தமுங் கமழும்
தண்ணந் தாமரை சொரிந்தவெண் முத்தமுந் தயங்கி
வெண்ணி லாக்கதிர் விரித்தலிற் குமுதம்வாய் விள்ளும். (11)

அதிவீரராமபாண்டியன்.

## 7. திணைமயக்கம்.

அலைக்காகம் மலைச்சாரற் பலாச்சுளையைக்
கவ்வியெழுந் தரக்கர் கோமான்,
சிலைத்தாச ரதிமனையைக் கொண்டகன்று
லெனவங்கம் சேரும் அந்நாள்
நிலைப்பான மதிளிலங்கை மிசைத்தாவும்
அநுமனைப்போல் நீள்வால் மந்தி
மலைப்பானின் றலைத்தோணி பாய்ந்துழக்கி
மீண்டெய்தும் வாழ்வு மங்கண். (12)

சுற்றெல்லாம் மலர்முல்லை தழைந்துபெருந்
　　தூறுசெய அதன்கீழ் எண்கு
பற்றிநுழைந் துறங்கநடு வளர்கொன்றை
　　மிசைக்கறிதாய்ப் படருந் தோற்றம்
உற்றரக்கன் வெள்ளிமலை எடுத்தநாள்
　　வெரீஇத் தழுவும் உமையா ளோடும்
கற்றைவார் சடைப்பெருமான் நின்றநிலை
　　காட்டுவதும் உண்டா லங்கண். (13)

சிவஞானமுனிவர்.

## 8. மதுரைமா நகர்.

உலக மொருநிறையாத் தானோர் நிறையாப்
புலவர் புலக்கோலால் தூக்க—உலகனைத்தும்
தான்வாட வாடாத தன்மைத்தே தென்னவன்
நான்மாடக் கூடல் நகர். (14)

மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையுஞ் சீரூர். பூவின்
இதழகத் தனைய தெருவம். இதழகத்(து)
அரும்பொகுட் டனைத்தே யண்ணல் கோயில்.
தாதி னனையர் தண்டமிழ்க் குடிகள்.
தாதுண், பறவை யனையர் பரிசில் வாழ்நர்.
பூவினுட் பிறந்தோன் நாவினுட் பிறந்த
நான்மறைக் கேள்வி நவில்குர லெடுப்ப
ஏம வின்றுயில் எழுத லல்லதை,
வாழிய வஞ்சியும் கோழியும் போலக்
கோழியின் எழாதெம் பேரூர் துயிலே. (15)

பரிபாடல்.

*பரிபாடலென்பது கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்த நல்லிசைப்புலவர்கள் அருளிச்செய்த எட்டுத்தொகையுள் ஐந்தாவது நூலாகும். சொற்சுவை பொருட்சுவைகளிற் சிறந்து பொருள்களின் இயற்கை அழகுகளை நன்கு தெரிவிக்கும் எழுபது பாடல் கொண்டது. மதுரை, வையையாறு, திருமருதந்துறை, திருப்பரங்குன்றம். திருமாலிருஞ்சோலை (அழகர்மலை) என்பவற்றின் பண்டைக்கால நிலைமைகளையும், அக்கால வழக்க வொழுக்கம் தெய்வ வழிபாடு முதலியவற்றையும் செவ்வனே தெரிவிப்பது. இந்நூற் பாடல்கள் பண்டைக்காலத்தில் பண்ணோடே பாடப்பட்டுவந்தன. பரிபாடல் தமிழ்ப்பாவகையில் ஒன்று. மேற்காட்டப்பட்டவை சிதைந்துபோன ஒரு பாடலின் உறுப்பாகும். இப்போது தொடர்ச்சியாக அகப்பட்டு அச்சிடப்பெற்றவை 20 பாடல்கள். எஞ்சியவை கிடைக்கவில்லை.

---

*திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத்
தொருபாட்டுக் காடுகாட் கொன்று - மருவினிய
வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப
செய்யபரி பாடற் றிறம்.

# VIII. பிரபந்தப்பகுதி.

## 1. அறப்பளீசுர சதகம்.

(ஒன்றற் கொன்று அழகுசெய்வன).

1. வாழ்மனை தனக்கழகு குலமங்கை.குலமங்கை
வாழ்வினுக் கழகு சிறுவர்.
வளர்சிறுவ ருக்கழகு கல்வி.கல் விக்கழகு
மாநிலம் துதிசெய் குணமாம்.

2. சூழ்குணம் அதற்கழகு பேரறிவு.பேரறிவு
தோன்றிடில் அதற்கழகுதான்
தூயதவ மேன்மையுப காரம்விர தம்பொறுமை
சொல்லரிய பெரியோர்களைத்

3. தாழ்தல்பணி விடைபுரிதல் சீலமே சங்கருணை
சாற்றுமிவை யாமென்பர்காண்;
சௌரிமல ரோன்அமரர் முனிவர்முச் சுடரெலாம்
சரணமெமை ரட்சியெனவே

4. ஆழ்கட லுதித்துவரு விடமுண்ட கண்டனே!
அண்ணலெம தருமைமதவேள்
அநுதினமும் மனதில்நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீ சுரதேவனே! (1)

அம்பலவாணக்கவிராயர்.

## 2. குமரேச சதகம்.

(பிதாக்கள்).

1. தவமதுசெய் தேபெற் றெடுத்தவன் முதற்பிதா
தனைவளர்த்தவன் ஒருபிதா,
தயையாக வித்தையைச் சாற்றினவன் ஒருபிதா
சார்ந்தசற் குருவொருபிதா,

2. அவம்அறுத் தாள்கின்ற அரசரொரு பிதாவல்ல
 ஆபத்து வேளைதன்னில்,
அஞ்சலென் றுற்றதுயர் தீர்த்துளோன் ஒருபிதா
 அன்புள(முன்)னோன் ஒருபிதா,

3. கவளமிடு மனைவியைப் பெற்றுளோன் ஒருபிதா
 கலிதவிர்த் தவனொருபிதா
காசினியில் இவரைநித் தம்பிதா என்றுளம்
 கருதுவது நீதியாகும்;

4. மவுலிதனில் மதியரவு புனைவிமலர் உதவுசிறு
 மதலையென வருகுருபரா!
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
 மலைமேவு குமரேசனே. (2

தருபாதநாசர்.

### 3 திருவேங்கட சதகம்.

(அரசர்க்குரிய தொழிலாளர் இலக்கணம்).

1. காரியா காரியம் கொற்றவர் தெரிந்திடக்
 கண்டுசொல் வோன்மந்திரி
காலமும் தன்பலமும் எண்ணியிகல் வென்றிடக்
 கருதுவான் தளகர்த்தனும்

2. சீரிய தனங்களொடு ராச்சியம் சகலமும்
 திட்டமிடு வோன்ப்ரதானி
செய்யவா சகதாட்டி அவதான வக்கணை
 சிறக்குமவ னேராயசன்

3. சூரியன் திசைமாறி னுந்தான் தொடுத்தவத்
 தொகைவிடான் கருணீகனும்
சொல்வண்மை சபைவண்மை பராசர் வண்மைதெரி
 சுமுகனே தானுபதி

4 மாரியது காத்தருளும் மணிமேக வண்ணனே
மணவாள நாராயணன்
மனதிலுறை அலர்மேலு மங்கைமண வாளனே
வரதவேங் கடராயனே. (3)

நாராயண பாரதி.

## 4. தண்டலையார் சதகம்.

(கற்புடைப் பெண்டிர் மகிமை.)

முக்கணர்தண் டலைநாட்டிற் கற்புடைமங்
கையர்மகிமை மொழியப் போமோ
ஒக்கும்எரி குளிரவைத்தாள் ஒருத்திவில்வே
டனைஎரித்தாள் ஒருத்தி மூவர்
பக்கமுற அமுதளித்தாள் ஒருத்திஎழு
பரிதடுத்தாள் ஒருத்தி பண்டு
கொக்கெனவே நினைந்தாயோ கொங்கணவா
என்றொருத்தி கூறி னாளே. (4)

(காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ளவேண்டும்.)

நேற்றுளார் இன்றிருக்கை நிச்சயமோ
ஆதலினால் நினைந்த போதே,
ஊற்றுள்ள பொருளுதவி அறந்தேடி
வைப்பதறி வுடைமை, யன்றோ?
கூற்றுள்ள மலையவரும் தண்டலையா
ரேசொன்னேன் குடபால் வீசுங்
காற்றுள்ள போதெவரும் தூற்றிக்கொள்
வதுநல்ல கருமந் தானே. (5)

படிக்காசுப்புலவர்.

## 5. மதுரைக்கலம்பகம்.

கூற்றிருக்கும் அடலாழிக் குரிசின்முத லோரிறைஞ்சக்
கொழுந்தேன் பில்கி
ஊற்றிருக்கும் தில்லைவனத் தசும்பிருக்கும் பசும்பொன்மன் றக்
தொருதா ளூன்றி
வண்டுபா டச்சுடர் மகுடமா டப்பிறைத்
துண்டமா டப்புலித் தோலுமா டப்பகி
ரண்டமா டக்குலைந் தகிலமா டக்கருங்
கொண்டலோ டுங்குழற் கோதையோடுங் கறைக்
கண்டனா டுந்திறங் காண்மினோ காண்மினோ. (6)

குமாரகுருபரர்.

## 6 மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்.

1. காலத்தொடுகற் பனைகடந்த
கருவூலத்துப் பழம்பாடற்
கலைமாச்செல்வர் தேடிவைத்த
கடவுண்மணியே யுயிராலை
2. வாலத்துணர்வு நீர்பாய்ச்சி
வளர்ப்பார்க் கொளிபூத் தருள்பழுத்த
மலர்க்கற்பகமே எழுதாச்சொன்
மழலைத்தும்பு பசுங்குதலைச்
3. சோலைக்கிளியே உயிர்த்துணையாம்
தோன்றாத்துணைக்கோர் துணையாகித்
துவாதசாந்தப் பெருவெளியில்
துரியங்கடந்த பரநாத
4. மூலத்தலத்து முளைத்தமுழு
முதலே முத்தந் தருகவே
முக்கட்சுடர்க்கு விருந்திடுமெம்
முதல்வீ முத்தந்தருகவே. (7)

1. தொடுக்குங் கடவுட் பழம்பாடற்
றொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழி னொழுகுநறுஞ்
சுவையே யகந்தைக் கிழங்கையகழ்ந்

2. தெடுக்குந் தொழும்பர் உளக்கோயிற்
கேற்றும் விளக்கே வளர்சிமய
இமயப்பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே எறிதரங்கம்

3. உடுக்கும் புவனங் கடந்துநின்ற
ஒருவன் திருவுள் ளத்திலழ
கொழுக வெழுதிப் பார்த்துவக்கும்
உயிரோ வியமே மதுகரம்வாய்

4. மடுக்குங் குழற்கா டேந்துமிள
வஞ்சிக்கொடியே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே. (8)

குமரகுருபரர்.

7. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்.

1. சொற்றரு பெரும்புலவர் கலைஅமுது கொளவிருந்
தோகைமேல் கொண்டருளினாய்
தோற்றிமுன் பொங்கிமலை போலவலை மோதும்அச்
சோதிவே லையுமுகந்தாய்,

2. குற்றமில் குணத்தைக் குறித்தஇர வலர்முகம்
கோடா தளித்தல் செய்தாய்,
கோகனக நாயகன் வரக்கூ விடும்குக்
குடம்கொடிய தாக வைத்தாய்,

3. உற்றிடும் இதழ்க்குமுதம் விண்டுதண் தேன்ஒழுக
 ஒளிநிலா நகைமுகிழ்த்தாய்,
உன்செய்கை எம்பிரான் தன்செய்கை போலுமால்
 உனையுமிவன் ஒவ்வாதிரான்

4. அற்பொதி களத்தவன் அளித்தகும ரேசனுடன்
 அம்புலீ, ஆடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
 அம்புலீ, ஆடவாவே. (9)

குமரகுருபரர்.

## 8. திருச்செந்தூர்க்கலம்பகம்.

1. கத்தும் தரங்கம் எடுத்தெறியக்
 கடுஞ்சூல் உளைந்து வலம்புரிகள்
கரையில் தவழ்ந்து வாலுகத்தில்
 கான்ற மணிக்கு விலையுண்டு

2. தத்தும் கரட விகடதட
 தந்திப் பிறைக்கூன் மருப்பில்விளை
தரளம் தனக்கு விலையுண்டு
 தழைத்துக் கழுத்து வளைந்தமணிக்

3. கொத்தும் சுமந்த பசுஞ்சாலிக்
 குளிர்முத் தினுக்கு விலையுண்டு
கொண்டல் தருநித் திலந்தனக்குங்
 கூறுந் தரமுண் டுன்கனிவாய்

4. முத்தம் தருக விலையில்லை
 முருகா! முத்தம் தருகவே
முத்தம் சொரியும் கடலலைவாய்
 முதல்வா முத்தந் தருகவே. (10)

பகழிக்கூத்தர்.

## 9. அழகர்கலம்பகம்.

(தவம்.)

தேறாது வனம்போய்யெள வனமும் போனீர்
சிறுகிழங்கைக் கொண்டுபெருங் கிழங்கைக்கொண்டீர்
ஏறாத பலஞ்சுவைத்தோர் பலமுங் காணீர்
இலைமேய்ந்தும் பேறிலையே இதுவோ யோகம்
மாறாது சருகுதின்று சருகு பட்டீர்
வாயுநுகர்ந் தீர்வாயும் மௌன மானீர்
ஆறாத தீயினிற்பீர் தீய ரேநும்
அருந்தவமே தவம்அழகர்க் காட்படீரே. (11)

வைக்குமிடத் தன்புவையா மாந்தர் காள்அம்
மறலிகதை யறியீரோ வருமே நாளை
தக்ககதை புகுமேநுங் குணமும் போமே
சாமும்போ மேயெடுத்த தனுவும் போமே
திக்கிலேவே றிக்கணமே சோலை வெற்பின்
சீதரசஞ் சீவிதனைத் தேடிக் கொள்ளும்
துக்கமறும் நமதேடைத் தூரப்பீர் யார்க்குந்
தோற்றிடீர் ஒருகாலுந் தோற்றி டீரே. (12)

கவிகுஞ்சரபாரதி.

## 10. திருவரங்கக்கலம்பகம்.

(ஊசல்.)

உருமாறிப் பலபிறப்பும் பிறந்துஞ் செத்தும்
ஊசலா டுவதடியே னொழியும் வண்ணம்
கருமாயத் தன்னெஞ்சைப் பலகை யாக்கிக்
கருணையெனும் பாசத்தைக் கயிறாப் பூட்டி

மருமாலைத் துளவசைய ஆடி ரூசல்
மணிமகரக் குழையசைய ஆடி ரூசல்
திருமாது புவிமாதோ டாடி ரூசல்
திருவரங்க ராசரே யாடி ரூசல் (13)

(மடக்கு.)

அரவி னடித் தானும் உரவிலொடித் தானு
மடவிகடந் தானும் புடவியிடந் தானுங்
குரவைபிணைத் தானும் பரவையணைத் தானுங்
கோசலைபெற் றானு வீசலையுற் றானும்
முரணையறுத் தானுங் கரணையொறுத் தானும்
முத்தியளித் தானு மத்திவிளித் தானும்
பரமபதத் தானுஞ் சரமவிதத் தானும்
பாயல்வடத் தானுங் கோயிலிடத் தானே. (14)

மண்டலமும் விண்டலமு நின்றவட குன்றமும
வளைந்த மலையுங் கடலுமூ
தண்டமு மகண்டமு மயின்றவர் துயின்றரு
ளரும்பதி விரும்பிவினவிற்
கொண்டல்குமு றுங்குட கிழிந்துமதகுந்தியகில்
கொண்டுநுரை மண்டி வருநீர்
தெண்டிரைதொ றுந்தரள முங்கனக முஞ்சிதறு
தென்றிரு வரங்க நகரே. (15)

பிள்ளைப்பெருமாளையங்கார்.

## IX. தனிப்பாடற் பகுதி.

அறமுரைத் தானும் புலவன்: முப் பாலின்
திறமுரைத்தானும் புலவன்:—குறுமுனி
தானும் புலவன்: தரணி பொறுக்குமோ
யானும் புலவ னெனில். (1)

(பாண்டியன் நீர் நல்ல புலவர் என்றபோது பாடியது.)

**பொய்யாமொழிப்புலவர்.**

நாட்டுக்குள் ஆட்டுக்கு நாலுகால் ஐயாநின்
ஆட்டுக் கிரண்டுகா லானாலும்—நாட்டமுள்ள
சீர்மேவு தில்லைச் சிவனேயிவ் வாட்டைவிட்டுப்
போமோசொல் லாயப் புலி. (2)

**காளமேகப்புலவர்.**

இம்பர்வா னெல்லை இராமனையே பாடி
என்கொணர்ந்தாய் பாணநீ என்றாள் பாணி.
வம்பதாங் களபமென்றேன்; பூசுமென்றாள்.
மாதங்க மென்றேன்; யாம் வாழ்ந்தோமென்றாள்.
பம்புசீர் வேழமென்றேன்; தின்னு மென்றாள்.
பகடென்றேன்; உழுமென்றாள் பழனந் தன்னைக்.
கம்பமா வென்றேன்; நற்களியா மென்றாள்.
கைம்மாவென் றேன்சும்மா கலங்கினாளே. (3)

**அந்தகக்கவி வீரராகவ முதலியார்.**

அரனவனிடத்திலே ஐங்கரன்வந்துதான்
ஐயவென் செவியை மிகவும்
அறுமுகன் கிள்ளினா னென்றே சிணுங்கிடவும்
அத்தன்வே லவனைநோக்கி

விரைவுடன் வினவவே அண்ணனென் சென்னியில்
　　விளங்குகண் எண்ணினனென
வெம்பிடும் பிள்ளையைப் பார்த்துநீ அப்படி
　　விகடமேன் செய்தாயென
மருவுமென் கைந்நீள முழமளந் தானென
　　மயிலவன் நகைத்துநிற்க
மலையரையன் உதவவரும் உமையவளை நோக்கிநின்
　　மைந்தரைப் பாராயெனக்
கருதரிய கடலாடை உலகுபல வண்டங்
　　கருப்பமாய்ப் பெற்றகன்னி
கணபதியை அருகழைத் தகமகிழ்வு கொண்டனள்
　　களிப்புடன் உமைக் காக்கவே. (4)

(ஒரு கலியாண வாழ்த்தாகப் பாடியது.)

சிவப்பிரகாசர்.

நாட்டிற் சிறந்த திருமலையா! நல்ல நாகரிகா
காட்டில் வனத்தில் திரிந்துழ லாமல் கலைத்தமிழ்தேர்
பாட்டிற் சிறந்த படிக்காசன் என்னுமொர் பைங்கிளியைக்
கூட்டில் அடைத்துவைத் தாயிரை தாவென்று கூப்பிடுதே.

(திருமலைத்தேவர் புலவர்பெருமையில் அழுக்காறுகொண்டு காவற்படுத்திவைத்திருந்தபோது புலவர் பாடியது)

படிக்காசுப்புலவர்.

## சீட்டுக் கவிதை.

மரபுதவி ராதவன் சோமசுந் தரகுரு
　　மலர்ப்பதம் பரவுதாசன்,
வண்டமிழ்ச் சரவணப் பெருமாள் கவிச்சக்ர
　　வர்த்திதேர்ந் தெழுதுநிருபம்,

வளர்காரை யம்பதியின் மேவுதுரை லக்ஷுமண
மந்த்ரியெதிர் கொண்டுகாண்க,
பாவாண ருக்குப காரிநீ யாகையால்
எமது-வல்லமையு மகிமையுங்கேள்,

கருணீகர் நால்வர்க்கு நாற்கவிதை சொல்ல,வாய்
கனவேலு மயிலுமென்னக்,
காலிலொரு கவிதையுயர் தோளிலொரு கவிதையிரு
கையிலொரு கவிதை யெழுதக்
கணக்கொரு புறஞ்சொல, இலக்கொரு புறஞ்சொலக்
காணாத திறைமறைவிலே
கனசூது சதுரங்க மொடுகுதிரை அடிசொலக்
கன்னெல்லு முதுகிலெண்ணப்,

பரிசுபெற் றப்புதுச் சேரியிற் சென்றினிய
பண்பரிற் சினையவாத்தி
பண்புள குமாரபா ரதிமதுர கவிவீர
பத்ரகவி கொண்டாடவே,
பாக்கியனு னந்நா தன்சபை யிலுஞ்செய்து
பல்லக்கு வரிசைபெற்றேன்;
பலகாவி யங்களும் தெரிவேன்; அளப்பரிய
பஞ்சலட் சணமுமறிவேன்,

அரசரில் உயர்ந்ததுரை யாரெனில் சேதுபதி
யாகுமவன் மணிவாயிலில்
அகத்திய முனிக்குமதி கங்கற்ற பேர்க
ளாயிரங் கவிவாணரும்

டவரிலொரு சிறுவன்யான்; பாடவறி யானென்
றகற்றிவிட் டார்களென்னை,
ஆதலால் பூமியில் சஞ்சரித் தேன்நின்
அகந்தனில் மகிழ்ந்தருள்வையே. (6)

அஷ்டாவதானி சரவணப்பெருமாள் கவிராயர்.

ஏரும் இரண்டுள தாய் இல்லத்தே வித்துளதாய்
நீரருகே சேர்ந்த நிலமுமாய்—ஊருக்குச்
சென்று வரவெளி தாய்ச் செய்வாரும் சொற்கேட்டால்
என்றும் உழவே இனிது. (7)

ஔவையார்.

சோழன் ஒரு பீதாம்பரத்தை விலை மதித்துக்கொண்டு தன்னை உபசரியாதிருந்தபோது பாடியது.

நூற்றுப்பத் தாயிரம் பொன்பெறினும் நூற்சீலை
நாற்றிங்கள் தன்னிற் கிழிந்துபோம்—மாற்றலரைப்
பொன்றப் புறங்கண்ட போர்வே லகளங்கா
என்றும் கிழியாதென் பாட்டு. (8)

ஔவையார்.

கல்லாத ஒருவனையான் கற்றாய் என்றேன்;
காடெறியு மவனைநா டாள்வாய் என்றேன்;
பொல்லாத ஒருவனையான் நல்லாய் என்றேன்;
போர்முகத்தை அறியானைப் புலியே றென்றேன்;
வல்லாரும் புயமென்றேன் சூம்பற் றோளை;
வழங்காத கையனையான் வள்ளால் என்றேன்;
இல்லாது சொன்னேனுக் கில்லை யென்றான்;
யானுமென்றன் குற்றத்தால் ஏகின்றேனே. (9)

இது ஒருவனைப்பாடி அவன் ஒன்றுமில்லை என்றபோது பாடியது.

ஔவையார்.

ஏகம்பவாணன்மீது பாணாற்றுப்படை.

தேருளைப்புரவி வாரணத்தொகுதி
திறைகள் கொண்டுவரு மன்ன!நின்
தேயமே துனது நாமமேது புகல்?
'செங்கையாழ் தடவு பாணகேள்:—
வாருமொத்தகுடி நீருநாமக
தேவனுறைநகர் காவலன்
வாணபூபதி மகிழ்ந்தளித்த வெகு
வரிசைபெற்றுவரு புலவன்யான்
நீரும் இப்பரிசு பெற்று மீளவர
லாகும் :ஏகும். அவன் முன்றில்வாய
நித்திலச்சிகர மாடமாளிகை
நெருங்குகோபுர மருங்கெலாம்
ஆருநிற்கும்உயர் வேம்பு நிற்கும்வளர்
பனையுநிற்கும் அதனருகிலே
அரசுநிற்கும்அர சைச்சுமந்தசில
அத்திநிற்கும் அடையாளமே. (10)

கம்பர்.

போற்றினும் போற்றுவர் பொருள் கொடாவிடில்
தூற்றினும் தூற்றுவர் சொன்ன சொற்களை
மாற்றினும் மாற்றுவர் வன்கணாளர்கள்
கூற்றினும் பாவலர் கொடிய ராவரே. (11)

என்று துலோத்துங்கன் சொல்லக்கேட்டுக் கோபங்கொண்டு,
போகும்போது

மன்னவனும் நீயோ வளநாடும் உன்னதோ
உன்னையறிந் தோதமிழை ஓதினேன்—என்னை
விரைந்தேற்றுக்கொள்ளாத வேந்துண்டோஉண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு. (12)

காதம் இருபத்து நான்கொழியக் காசினியை
ஓதக் கடல்கொண் டொளித்ததோ—மேதினியில்
கொல்லிமலைத் தேன்சொரியும் கொற்றவா நீமுனிந்தால்
இல்லையோ எங்கட் கிடம். (என்று கம்பர் பாடினார்) (13)

ஓரங்கல் பிரதாபருத்திரன்மீது பாடியது.

அவனிமுழு துண்டும் அயிரா வதத்துன்
பவனி தொழுவார் படுத்தும்—புவனி
உருத்திரா உன்னுடைய ஓரங்கல் நாட்டில்
குருத்திரா வாழைக் குழாம். (14)

கம்பர்.

நாராய் நாராய் செங்கால் நாராய்!
பழம்படு பனையின் கிழங்குபிளந் தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்!
நீயுநின் மனைவியும்
தென்றிசைக் குமரி ஆடி வடதிசைக்
காவிரி யாட எகுவீ ராயினெஞ்
சத்திமுற் றத்து வாவியுள் தங்கி
நனைசுவர்க் கூரைக் கனைகுரற் பல்லிப்
பாடுபார்த்திருக்குமெம் மனைவியைக்கண் "டெம்
கோமான் வழுதி கூடல் மன்றத்(து)
ஆடை யின்றி வாடையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்திக்

காலது கொண்டு மேலே தழீஇ
அலகுதிர்ந்தன பல்லின னாகிப்
பேழையுள் இருக்கும் பாம்பென உயிர்க்கும்
ஏழையாளனைக் கண்டனம்" எனுமே. (15)

இது சத்திமுற்றப்புலவர் மதுரைக்குப்போய்ப் பாண்டியனைக் காணச்செல்லப் பாண்டியன் வாசற்புலவர் வாசல்விடாமல் மறிக்க, அவர் ஊர் அம்பலத்தில் கிடந்தார் பாடியது.

சோழன் வரிசையளித்து விடுத்தபோது பாடியது.

இடுக்கட் புண்படு நிரப்புக் கொண்டுழன்
றிரக்கச் சென்றவின் றெனக்குச் சிங்களந்
திடுக்குற் றஞ்சும்வெஞ் சினத்துச் செம்பியன்
றிருக்கைப் பங்கயஞ் சிறக்கத் தந்தன;
படுக்கக் கம்பளம் பரக்கக் குங்குமம்
பதிக்கக் கங்கணம் பரிக்கக் குஞ்சரம்
கடுக்கக் குண்டலங் கலிக்கச்சங்கினங்
கவிக்குப் பஞ்சரங் கவிக்குத் தொங்கலே. (16)

ஓட்டக்கூத்தர்.

ஸ்ரீ

# குறிப்புரை.

## I. வணக்கப் பகுதி(எண் செய்யுளெண்)

### 1. கடவுள் வணக்கம்.

1. உளவாக்கல் - படைத்தல். நிலைபெறுத்தல்-காத்தல். நீக்கல் - அழித்தல். அலகுஇலா - அளவில்லாத.

### 2. நாமகள் வணக்கம்.

2. தவளத் தாமரை - வெண்டாமரை. (தவளம் - வடசொல்) தாது - மகரந்தப் பொடி. (வடசொல்) கோயிலவள் - சரஸ்வதி. தாமரையாகிய கோயிலென்க - இருபெயரொட்டு.

### 3. தமிழ்த் தெய்வ வணக்கம்.

1. நில மடந்தை - பூமி தேவி. வதனம் - முகம். பரத கண்டம் - பரதன் என்னும் அரசனால் ஆண்ட தேசம். பிறைநுதல் - பிறைச் சந்திரன் போன்ற நெற்றி. தெக்கணம் - தெற்கிலுள்ள நாடு. (தெக்ஷணம் - வடசொல்) திராவிடநல் திருநாடு - நல்ல அழகிய தமிழ்நாடு. அணங்கு - தெய்வப் பெண். திலகம் - பொட்டு. நில மடந்தையின் வதனம் போல்வது பரத கண்டம்; அவ்வதனத்தின் நுதல் போல்வது தெக்ஷணதேசம்; அந்நுதலிலிட்ட திலகம் போல்வது தமிழ்நாடு; அத்திலகத்தின் வாசனை போல்வது தமிழ்ப் பாஷை எனக் கருத்துக்கொள்க. (கடலாடை-உருவகம்.)

2. துடைக்கினும் - அழிப்பினும். பரம்பொருள் - கடவுள். உதரம் - வயிறு. சிதையா - கெடாத. (ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.) "பரம்பொருள் பல உலகங்களை ஈன்று காத்து அழித்தலாகிய காரியஞ்செய்யினும் நிர்விகாரமா யிருப்பதுபோல் நீ பல பாஷைகளைப் பெற்றும் உலக வழக்கு அழிந்து ஒழிந்து சிதையாமல் என்றும் மாறாத இளமைத் தன்மையோடே யிருக்

கின்றாய்; வடமொழியோ பல பாஷைகளைப் பெற்றதினால் தனது இளமைத்தன்மை குன்றி உலக வழக்கின்றி ஒழிந்து கெட்டது!'', என ஆரியத்தினும் தமிழ் உலக வழக்குடைய உயர்ச்சியுடைமை விளக்கியிருத்தல் காண்க.

3. பொருப்பு - பொதிய மலை. தென்னன் - பாண்டியன், பேதை - பெண்களின் குழவிப் பருவம். தமிழ் மொழியை ஓர் பேதையாகக் கூறியதற்கேற்ப அப் பருவத்திற்குரிய கிடத்தல், இருத்தல், தவழ்தல், நிற்றல், நடத்தல் என்னும் வினைகளை முறையே கூறியுள்ளமை காண்க. தமிழ் வளர்த்த அகஸ்திய முனிவரது இருப்பிடமாகையால் பொதிய மலையைத் தமிழ் பிறந்த இடமென்று கூறினார். இப்பாட்டில் தமிழ்ச்சங்க மிருந்தது, திருஞான சம்பந்தர் சமணரோடு அனல் வாதம் புனல் வாதம் செய்தது, திருமால் பன்றி உருக்கொண்டு பிரளய நீரில் மூழ்கியிருந்த பூமியைக் கொம்பில் தாங்கிவந்தது ஆகிய வரலாறு அடங்கியிருக்கின்றன. ஏனம் - பன்றி. மருப்பு - கொம்பு. மருங்கு - ஒக்கல். மருப்பில் பயின்ற பாவை - பூமிதேவி.

4. மறைமுதல் கிளந்த - வேதத்தை முதல் முதல் சொல்லிய. மதி முகிழ் - பிறைச் சந்திரன். வேணி-சடை. இறைவர் - சிவபெருமான். ஈண்டு இலக்கணம் என்றது 'இறையனாரகப் பொருள்' என்னும் அகப்பொருள் இலக்கணத்தை. உறழ்தரும் - ஒக்கும்; (உறழ் உவம உருபு இடைச்சொல்.)

## II. தமிழ்ப்பெருமை.

1. கண்ணுதல் பெருங்கடவுள் - நெற்றிக்கண்ணுடைய சிவபெருமான் கழகம் - தமிழ்ச்சங்கம். முன்னிரண்டடியும், சிவபெருமான் தமிழ்ச்சங்கத்தில் தாமும் ஒரு புலவராய்த் தமிழாராய்ந்ததைச் சுட்டியன. பசுந்தமிழ் - இனிய தமிழ்.

2. கன்னி - அழியாத் தன்மை. மறு புலம் - அன்னியநாடு. இப் பாட்டிற் கூறியுள்ள சிவபெருமான் பரவையாரிடம் தூது சென்றது, சுந்தரர் முதலை யுண்ட பிள்ளையை மீட்டது, சம்பந்தர் எலும்பைப்பெண்ணாக்கியது, அப்பரும் சம்பந்தரும் வேதாரணி

யத்தில் கோயிற் கதவு திறக்கவும் அடைக்கவும் பாடியது ஆகிய வரலாற்றைக் கேட்டுணர்க.

3. பாணினி - வட மொழியில் இலக்கணம் செய்த ஒரு முனிவர். குடமுனி - தமிழ் இலக்கணம் செய்த அகஸ்தியர். (குடத்தில் பிறந்தவர்) கொல் ஏற்றுப் பாகர் - சிவபெருமான். கொல் ஏறு - பகைவரைக் கொல்லும் தன்மையுடைய ரிஷபம். (வினைத்தொகை) ஏறு-நெடிற்றொடர்க் குற்றுகரம் வேற்றுமையில் இரட்டித்தது. கணித்து - அளவிட்டு.

4. ஓங்கல் - தமிழுக்குப் பொதிய மலை எனவும் சூரியனுக்கு உதயகிரி எனவும் பொருள்படும். (ஓங்கியது ஓங்கல்.) உயர்ந்தோர் - அந்தணர்; அறிவுடையோர். தனி ஆழி - ஒற்றைச் சக்கரம்; ஆகுபெயராய்த் தேரைக் குறித்தது. வெம்கதிர் - சூரியன்.

5. மேலானை, கீழானை; தொடை முரண். கூடல் - மதுரை. மேலானை, கீழானை வேண்டப் போய்க் கூடற்றமிழ் நாடிதி எனக் கூட்டுக.

6. போது - பூ. தாமம் - மாலை. (வடசொல்) தண் + தார் - தண்டார். தமிழை ஓர் மல்லிகை மாலையாக உருவகித்தார்.

7. தமரம் - பேரோசை. நீர் - கடல்; ஆகுபெயர். வழுதி - பாண்டியன். வேட்கை - ஆசை. கொழி தமிழ்-குற்றமறத் தேர்ந்த தமிழ். (வினைத்தொகை) பமரம் - வண்டு. யாழ்மிழற்ற - வீணையிசைபோல் இனிமையாய் ஒலிக்க. நறவு - தேன். பளிக்கு - பளிங்கு; மென்றொடர் வன்றொடராயிற்று. பால் நிலா முன்றில் - வெள்ளிய நிலா முற்றம்; இல் முன் என்றது, முன்றில் என முன்பின்னாக நின்றது; இலக்கணப் போலி. அம்மனை-பெண்களின் விளையாட்டு. ஐய நுண் நுகப்பு - அழகிய, சிறிய, இடை. அரா அலங்கல் - சர்ப்பமாலை. அமரர் நாடியர் - தேவலோகப் பெண்டிர்.

---

# III. அருட்பாப் பகுதி.

## 1. முதற் றிருவந்தாதி.

1. தகளி - அகல். ஆழி - சக்கரம். இடர் ஆழி - துன்பக் கடல்; (உருவகம்.) சொன் மாலை - பாமாலை.

2. நாமம், அரன் நாரணன் எனவும்; ஊர்தி, ஆன்விடை, புள் எனவும் இயைக்க. ஆன்விடை - ரிஷபம். புள் - கருடன். மறை - வேதம். வரை - கயிலாய மலை. நீர் - திருப்பாற் கடல்; சினை ஆகுபெயர். அழிப்பு - சம்ஹாரம். அளிப்பு - காத்தல். வேல்-சூலாயுதம். நேமி - சக்கரம். எரி - அக்கினி. கார் - மேகம்.

3. வலம்புரி - வலப்பக்கமாகச் சுரிந்திருக்கும் சங்கம், அமரில் - பாரத யுத்தத்தில், இக்கதை பாரதத்தில் காண்க.

4. குறள்உரு - குறுகிய வடிவம். (வாமனம்) இதில் திருமால் திருவிக்கிரம அவதாரமாய் உலகளந்தது கூறப்பெற்றுளது. செற்றார் - பகைவர். படி - பூமி. கடந்த - அளந்து கடந்த.

5. வரை - மந்தர மலை. அரவு - வாசுகி என்னும் பாம்பு.

6. எயில் - திரிபுரம். மார்பு - இரணியன் மார்பு. இடந்தான் - பிளந்தான். நீற்றான் - விபூதி பூசிய வெண்ணிறத்தான். கிழன்மணி - ஒளியுடைய கருமாணிக்கம்.

## 2. இரண்டாந் திருவந்தாதி.

1. இப்பாட்டில் ஒரு விளக்குக்கு வேண்டிய தகளி முதலியனவாகத் தமது அன்பு முதலியவற்றை உருவகப்படுத்தி யிருப்பது சுவை பயப்பது. இதனை முதற்றிருவந்தாதி முதற் செய்யுளாகிய ‘வையகந்தகளியா’ என்றதனோடு ஒப்பிடுக.

2. அருமையிற் கிடைத்தற்குரிய பகவானது கிருபையைப் பெரு முயற்சியாற் பெறலாமென்று கூறி, அதற்கு உதாரணமாக முதலை வாய்ப்பட்ட கஜேந்திரன் பெருமானை விடாப்பிடியாய் ஆதிமூல மென்று அழைத்து நின்று உய்ந்த வரலாறு கூறியது இப்பாட்டு. அரியது, எளிது - முரண்.

3. மத வேழம் - ஆண்யானை. பிடிக்கு - பெண்யானைக்கு. கண் - கணு. வாங்கி - ஒடித்தெடுத்து. 'பெண் யானைக்கு ஆண் யானை இள மூங்கிலை ஒடித்துப் பக்கத்தில் தொங்கும் தேன் கூட்டிலுள்ள தேனில் தோய்த்துக் கொடுக்கின்ற வேங்கடம்' என்று திருவேங்கடச் சிறப்புக் கூறப்பெற்றது. வான் கலந்த வண்ணன் - மேகவண்ணன். வரை - மலை; இருமடி ஆகுபெயர்.

4. அத்தியூரான் - காஞ்சிபுரத்திலுள்ள அத்தியூர் என்னும் ஸ்தலத்தில் எழுந்தருளி யிருப்பவன்; குறிப்பு வினையாலணையும் பெயர். புள்ளை ஊர்வான் - கருடப் பக்ஷியை வாகனமாகச் செலுத்துபவன். 'ஊரான், ஊர்வான்' - முரண்தொடை. துத்தி சேர் நாகம் - படப்புள்ளியை யுடைய ஆதிசேஷன் என்னும் பாம்பு. மறையாவான் - வேதத்தின் பொருளாவான். கடல் நஞ்சுண்டான் - சிவன். இறை - அவனுக்குத் தலைவன். இது விஷ்ணுவே எல்லாத் தெய்வங்கட்கும தலைவன் என்று விஷ்ணுவுக்குப் பரத்துவங் கூறியது.

## 3. திருமொழி.

### திருக்கோட்டியூர்ப் பதிகம்.

*திருக்கோட்டியூர் - பாண்டிய நாட்டில் மதுரைக்குக் கிழக்கே யுள்ள விஷ்ணு ஸ்தலம். இப்பதிகம் இத்தலத்திலுள்ளவர்களுடைய செல்வம், அறம், நற்குணம், நற் செய்கை முதலியவற்றை உரைத்து அத்திருப்பதியின் திருமாலின் பெருமையைக கூறுவது.*

1. நாவகாரியம் - நா + அகாரியம் - நாவால் சொல்ல ஒண்ணாத அஸத்ய முதலானவை. தேவ காரியம் - தெய்வ கைங்கரியம். மூவர் காரியம் - திரிமூர்த்திகளது முத்தொழில். பாவ காரிகள் - பாபிஷ்டர்.

2. குருக்கள் - ஆசாரியர். (கு - அஞ்ஞானத்தை, ரு - கெடுப்பவன். வடசொல்) அநுகூலராய் - பணிவிடை முதலியன செய்பவராய். செற்றம் - பொறாமை; கோபம். வண்மை - கொடைக்கை. சுற்றி - திரட்டிப் பிடித்து.

3. குருந்தம் ஒசித்தான் - குருந்த மரத்தை முறித்தவன். கண்ணன் ஒரு நாள் தடாகத்தில் கோபியர்கள் நீர் விளையாடும் போது அவர்கள் ஆடையை யெல்லாம் கவர்ந்து கரையிலிருந்த குருந்த மரத்தில் கட்டி வைத்திருந்து பின்னர் அப் பெண்கள் வருந்திக் கேட்க மரத்தை அடியோடு சாய்த்து அவற்றைக் கொடுத்தான். கடைக்கொண்டு - தாழ்தலை முன்னிட்டுக்கொண்டு.

4. கொம்பின் ஆர் பொழில் - மரக்கிளைகளால் அடர்ந்த சோலை. நம்பன் - நம்பத்தக்கவன். பிரான்தன் - பிரானுடைய சின்னங்கள் - அடையாளமாவோர்.

## 4. பெருமாள் திருமொழி.

### அழகிய மணவாளன் விஷயம்.

இருள் இரிய - இருள் கெட. இமைக்கும் - பிரகாசிக்கும். உச்சி - நெற்றி. இனம் துத்தி - கூட்டமானபடப் புள்ளி. பணம் - படம். அநந்தன் - ஆதிசேடன். பொன்னி - காவேரி. (பொன்னை மிகுதியாகக் கொழிப்பது). திரைக்கை - அலையாகியகை. (உருவகம்) அடிவருட - பாதத்தைத் தடவ. பள்ளி கொள்ளும் - நித்திரை செய்யும் கரு மணி - கரு மாணிக்கம்; (மரகதம்) கோமளம் – அழகு; (ஆகுபெயர்.) பெருமாளுக்கு.

1. தரு துயரம் - (நீ) தருகின்ற துன்பம், (வினைத்தொகை) தடாய் எல் - தடுக்காயானல். சரண் அல்லால் திருவடியல்லாமல். சரண் - புகலிடம். விரை குழுவு - வாசனை மிகுகின்ற. அரிசினம் - அரிந்து ஒழிக்கக்கூடிய கோபம். குழவியது, அது பகுதிப் பொருள் விகுதி. அருள் - (ஈண்டு) அன்பு. குழவி - இளமைப் பொருள் தரும் உரிச்சொல் 'அலைப்பினும் குழவி அன்னை என்றேடும்' என்றார் விளம்பி நாகனர். விற்றுவக்கோடு - மலைநாட்டுத் திருப்பதி.

2. மீன் நோக்கும் - (அயலிடங்களிலுள்ள) மீன்கள் (வந்து வசிப்பதற்கு) விரும்புகின்ற. என்பால் நோக்காயாகிலும் - நீ என்னிடம் அருள் நோக்கம் புரியாவிடினும். பற்று - ஆதரவு. தான் நோக்காது - தான் (குடிகளைப் பாதுகாக்க) நினையாமல். கோல் -

கட்டளை. (அரசன் ஆளுகையைக் கோல் என்பது மரபு) 'கோ னோக்கி வாழும் குடி' என்றார் விளம்பி நாகனார்.

3. வெம் கண் திண் களிறு அடர்த்தாய் - வெப்பம் (கோபம்) பொருந்திய கண்களையும் வலிமையையு முடைய குவலயா பீடம் என்னும் யானையைக் கொன்றவனே. உய்கேன் - பிழைபேன். (உய் பகுதி. க் எதிர்கால இடைநிலை. என் விகுதி.) எறி கடல்வாய் எங்கும் போய் எனக் கூட்டுக. எறி கடல் - அலைகளை எறிகிற கடல்; வினைத்தொகை. வங்கத்தின் கூம்பு - கப்பலின் பாய்மரம். அநாத ரக்ஷகன் நீயன்றி வேறொருவரு மிலர் என்றபடி. களிறடர்த்த கதை - கண்ணன் ஆயர்பாடியில் வளர்வதை அறிந்த கஞ்சன் கண்ணனை வரவழைத்துக் கொல்லக் கருதி வில் விழா என்ற விழாவை வியாசமாக வைத்து எல்லாத் தேசத்து அரசர்களையும் வரும்படி ஓலை போக்கி, நந்தகோபருடன் கண்ணனையும் அழைத்து வரச் செய்தான்: அங்ஙனமே அவர் வரும்போது கம்சனால் வாயிலில் நிறுத்தி வைத்திருந்த குவலயா பீடம் என்னும் யானை கண்ணனைப் பாயவரக் கண்ணன் அதன் தந்தத்தைப் பிடுங்கி அதனைக் குத்திக் கொன்றான்.

4. வான் - மேகம். (இடவாகு பெயர்) எத்தனையும் - எவ்வளவு மிகுதியாகவும். மறந்த காலத்தும் - பெய்யாது மறந்த காலத்தும். பைங்கூழ்கள் - பயிர்கள். மைத்து - (நீருண்டு) கறுத்து.

## காகுத்தன் தாலாட்டு.

5. மணி வயிறு - அழகிய வயிறு. வாய்த்தவன் - உதித்தவன். கோன் - இராவணன். கன்னி - அழியாமை. இராகவன் - இராமன்; இரகு வமிசத்தில் பிறந்தவன். (தத்திதம்)

6. படர் செல்வம் படர்ந்த (பெரிய) செல்வம். நம்பி - சிறந்தவன். ஆரா அன்பு - குறையாத அன்பு. இளையவன் - இலக்ஷ்மணன். சீர் - இலக்குமி. வரை மார்பு - மலை போல் திண்ணிய மார்பு. திருக்கண்ணபுரம் - தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள திருப்பதி. தாசரதி - தசரத புத்திரன்; இராமன்; தத்திதாந்த மொழி.

7. சுற்றம் - உறவினர். அற்றவர் - எல்லாம் இல்லாதவர்கள். (வினையாலணையும் பெயர்) மருந்து - தேவாமிர்தம். சிற்ற× அவ்வை - சிறிய தாயார்.(கைகேசி) அவை-இடைக்குறை விகாரம்.

## 5. திருமாலை

1. பச்சை மாமலை - பெரிய மரகதமலை. அச்சுதா - அழியாதவனே. அமரர் - தேவர்கள்; தேவாமிர்த முண்டு மரணமற்றவர்கள். ஆயர் - இடையர்கள்.

2. பதினையாண்டு (10+5=50) ஐம்பது வருஷம். இச்செய்யுட்கருத்தை,Compare the Psalms of David:- 'The days of our years are three score years and ten and if by reason of strength they be four score years, yet is their strength labour and sorrow. அது யௌவனம்.

3. இனம் - கூட்டம். முரலும் - ஆரவாரிக்கும். ஆலும்-நாட்டியம் செய்யும். கொண்டல் - மேகம்; (நீர்கொண்டது.) அணவும் - படியும். மிண்டர் - மூர்க்கர்.

4. மெய்யர் - பகவத் விஷயத்தைப் பற்றிய அறிவினர். புட்கொடி - கருடக்கொடி. உய்யப்போம் உணர்வினார் - உஜ்ஜீவிக்கும் உபாயத்தைத்தேடவேண்டுமென்னும் அறிவுண்டானவர்.

5. விதி - (அஞ்சலி பந்தம் முதலியன செய்யும்) நியதி. இறை, இறை - கொஞ்சங் கொஞ்சமாய். கரும்பு - கரும்புபோல் அடியார்க்கினிய பெருமான். கண்ணிணை - கண் இரண்டும்; களிக்கும் ஆறு (என்னென்பேன்)

6. நூக்க - தள்ளிக்கொண்டுவர. தரங்கம் - அலைகளையுடைய கடல்; ஆகுபெயர். சலம் இலா - குற்றமில்லாத. அனியத்தேன் - யாருமற்ற மனுஷ்யனை நான்.

## தேவாரம்.

### 6. திருஞான சம்பந்தர்.

1. தோடு - ஓலை; பெண்கள காதணி; ஓலையால் செய்யப்பட்டமையான் தோடெனப்பட்டது. காடு - சுடுகாடு. ஏடு உடைய மலரான் - இதழ்களையுடைய வெண்டாமரையி லிருக்கும் பிரமன். பீடு உடைய பிரமாபுரம் - பெருமையையுடைய சீகாழி. பெம்மான் - பெருமான். விடை ஏறி, மதி சூடி, பொடிபூசி உள்ளங் கவர் கள்வன் என்க. விடை-ரிஷபம். பொடி - சாம்பற் பொடி.

புலன் ஐந்தும் - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்தும், பொறி - மெய், வாய், கண், மூக்கு, செவிகள், புலன் ஐந்திலும் பொறி சென்று றுகராது கலங்கி என்க. உம்-முற்றும்மை. அறிவு-மன அறிவு. ஐ மேல் உந்தி-சிலேஷ்மம் மேலே தள்ளி. அலமந்தபோது-உயிர்சுழல்கின்ற சமயம் அலம்மருதல்-சுழலுதல். உரிச்சொல். (அலமா - பகுதி) முழவு அதிர - மத்தளம் ஒலிக்க. மந்தி - குரங்குகளின் பெண்பால் மரபுப்பெயர். முகில்-மேகம். நடம் ஆடும் மடவார்களை மின் என்றும் முழவை இடி என்றும் எண்ணிக்கொண்டு மந்திகள் சுழன்றுமரத்திலேறி,முகிலை நோக்குகின்றன என்க. அருள் செய்வான் அமரும் கோயில் திருவையாறு என முடிக்க. திரு + ஐயாறு - திருவையாறு. தஞ்சாவூர்த் தாலூகாவிலுள்ளது. (திருவாதி). குரங்குகள் தமக்கென்று உறைவிட மில்லாததினுல் மழைக்கு அஞ்சிவருந்தும். இப்பாடலில் தன்மைநவிற்சியும் மயக்க அணியும் காண்க.

3. ஊன்பாயும் உடைதலை - ஊன் ஒழுகுகின்ற உடைந்த கபாலம். ஊர் ஊரின் - ஊர்கள் தோறும். பலிக்கு உழல்வார்-பிச்சைக்காக வருந்தித் திரிவார். இது சிவபிரானது பிச்சாடனம் கூறியது.

4. காடு - சுடுகாடு. முடை ஓடு - செடி நாற்றமுடைய தலை ஓடுகள்; ஆமையோடுமாம். பயில்வீடு, காடு எனவும் கலன், முடை ஓடெனவும் ஊண், பலி எனவும் மாறுக. வேதியாது திருந்துபுதி

தேவூர் என்க. 1-2-ம் அடிகள் தேவூர்ச் சிறப்புக் கூறியது. மஞ்ஞை - மயில். அரி - வண்டு கோடல் - காந்தள்பூ. சேடு - அழகு. திருத்தேவூர்:-நாகபட்டினந் தாலூகாவிலுள்ள சிவஸ்தலம்.

5. தாளம் - முத்து. வலஞ்சுழிவாணன் - திருவலஞ் சுழியில் வாழ்பவன். வாணன், வாழ்நன்; மரூஉ. இத்தலம் கும்பகோணம் தாலூகாவிலுள்ளது. ஆதரித்து - பூசித்து. நெஞ்சமே, வலஞ்சுழிவாணனை வழிபடுதற்கு என்ன புண்ணியம் செய்தனை எனச் சுருங்க உரைத்துக்கொள்க.

6. முழவு - மத்தளவாத்தியம். வட்டணை - தாளம். நடமாடி - நடமாடும் சிவபெருமான். பட்டம்நுதல் - பட்டமணிந்த நெற்றியிலே. கட்டுமலர் - கட்டித் தொங்கவிட்ட மலரில். மட்டுமலி - தேன் நிறைந்த. பாவை - உமாதேவி. சட்டகலை - திருத்தமான சாஸ்திரங்கள். எட்டு மருவு எட்டு - (8 + 8) அறுபத்து நான்கு. தத்தை-கிளி. சட்டம்-செப்பமுணர்த்தி நிற்பதோர் இடைச்சொல். மூன்றாவது, நான்காவது அடிகளில் 'கிளிகள் அறுபத்து நான்கு கலைகளையும் தம் சொல்லாற் சொல்லிப் பழகும்படியான சண்பை நகர்' என்று சண்பை நகரத்துக் கல்விச் சிறப்புக் கூறியது. சண்பை - சீகாழி. முழவு கொட்ட என மாறுக.

7. மங்கையர்க்கரசி - பாண்டியன் தேவியின் இயற்பெயர். வளவர் கோன் - சோழன். பாவை, உவமையாகு பெயர். மானி-பெண். பங்கயச் செல்வி - திருமகள் போன்றவள். பங்கயம், தாமரை; பங்கஜம் என்ற வட சொற்றிரிபு. [பங்கம் - சேற்றில்-ஜம் - மூளைப்பது.] பாண்டிமாதேவி - பாண்டிய நாட்டுக் கோப்பெருந்தேவி. அம்கயற் கண்ணி - அழகிய மீன் போன்ற கண்களை யுடையவள். (மீனாக்ஷி) ஆலவாய் - மதுரை.

8. கனல் - மழு. பயிர் காட்டும் புயலான் - பயிர் முளைத்தற்குக் காரணமான மேகமாயுள்ளவன். 'நுதலானும்' என்பது முதலியவற்றைக் 'காட்டும் கொடியானே' என்பதனோடு முடித்துக் கொள்க. வெண்காடு-சுவேதாரணியம்; இது சீகாழித் தாலூகாவில் காவிரிப்பூம் பட்டினத்துக்கு மூன்று மைல் தூரத்திலுள்ளது.

## தேவாரம்.

### 7. திருநாவுக்கரசர்.

1. மாசு + இல் - குற்றமில்லாத. மாலை மதியம் - மாலைக்காலத்துச் சந்திரன். மூசு வண்டு அறை - மொய்க்கின்ற வண்டுகள் ஒலிக்கின்ற. பொய்கை - மானிடர் ஆக்காத நீர் நிலை. எந்தை - எம் தந்தை; மரூஉ முடிபு. இணை - இரண்டு. உம்மைகள், எண்ணுப் பொருளன.

2. மாமணி - மாணிக்கம். உறவு கோல் நட்டு - அன்பாகிய கோலை நட்டு. உணர்வு கயிற்றினால் - நல்லறிவாகிய கயிற்றினால். முறுக - முதிர. வாங்கி-இழுத்து. விறகிலே தீயும், பாலிலே நெய்யும் வெளிப்படையாய்த் தெரியாது அவற்றுள் பரந்து கிடப்பினும், அவற்றைக் கடைந்தால் தீயும் நெய்யும் திரண்டு வெளிப்பட்டுப் புலப்படுவது போல் கடவுள் காணப்படாத பொருளாய் யாண்டும் வியாபித்திருப்பினும் இடைவிடாத அன்பு கொண்டு மெய்யுணர்ச்சியால் ஆராய்ந்து பத்தி செய்வோர்க்கு முற்பட்டுத் தோன்றுமென்பது கருத்து.

3. வம் - (வம்மின்) வாருங்கள். எசற்றவர்கள் - இளைத்தவர்கள்; துக்கமடைந்தவர்கள். சாலவும் - மிகவும். வல்லிர்-இர், முன்னிலை விகுதி. ஏ-வினா.

4. காவிரி - கவேரன் மகள் காவிரி. தத்திதமொழி. காவிரி; காக்களை (சோலைகளை) விரிப்பதுமாம். கொங்கு - வாசனை; பூந்தாது. குமரித்துறை - குமரிக் கடற்றுறை. ஒங்கு - ஓங்கு; எதுகை நோக்கிக் குறுகியது. ஓதம் - குளிர்ச்சி.

5 பேர் ஆயிரம் - சகஸ்திர நாமம். பரவி - துதித்து. பெம்மான் - பெருமான்; விகாரம். வாராத செல்வம் - முத்தி. சிலை - மேருவில். போரானை - போரை யுடையவனை. ஆற்ற - மிகுதியாக.

6. நமன் - யமன். நடலை - வருத்தம். ஏமாப்போம் - இறுமாப்போம். குழை - குண்டலம். கோமாற்கு, விகாரம்.

கொய்ம்மலர், மகரம் விரித்தல் விகாரம். மீளா ஆள் - நீங்காத அடிமை. இப்பாடல் பல்லவர் கோன் கட்டளையைச் சமணர்கூறிய போது பாடியது.

7. சங்கநிதி பதுமநிதி - சங்கம் பதுமம் என்னும் எண்ணை யுடைய செல்வங்கள்; சங்கு வடிவாயநிதி, பதும (தாமரை) வடிவா ய நிதி என்பாரு முளர். இந்நிதிகள் குபேரனுக்குரியவை. ஏகாந் தர் - ஒருவனையே சேர்ந்த அடியார். அங்கம் - அவயவம். தொழு நோய் - குட்ட நோய். ஆ - பசு. சடைக்கரந்தார் - சடையில் மறைத்தார் - கண்டீர் - முன்னிலையசை. உம்மைகள் முறையே உயர்வும், இழிவும் பற்றியன. மாதேவற் கேகாந்தர் அல்லராகில் அவர் செல்வம் மதிப்பேமல்லேம் எனக் கூட்டுக.

8. பாற்ற - அடியோடு நீக்க. பரிசு - தன்மை. உள்கேன் - சிந்தியேன், அரவக்கச்சு - பாம்பாகிய கச்சை. புனிதா - பரிசுத் தனே. பொழில் - சோலை. ஆரூர் - திருவாரூர். போற்று - போற்றி, (உடன்பாட்டெச்சம்.)

# IV. நீதிப் பகுதி.

## 1 நாலடியார்.

குறள் வெண்பாக்களினு லாகிய நூலுக்குக் 'குறள்' எனப் பெய ரானாற்போல நாலடி வெண்பாக்களினாலாகிய இந்நூலுக்கு நாலடி எனப் பெயர் வழங்கிற்று. ஆர் சிறப்புப்பற்றிய விகுதி. நாலடி என்பது நான்காகிய அடிகளை யுடையதெனப் பொருள்பட்டு, பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய் வெண்பாக்களையும், பின்னர் அவை கருவியாகு பெயராய் அவற்றா லாகிய நூலையும் உணர்த்தின.

1. வடு இலா - குற்றமில்லாத. மன்னிய - பொருந்திய. மூன்றனுள் - (அறம், பொருள், இன்பம்) என்னும் மூன்றனுள்ளே. நடுவணது - நடுவிற் சொல்லப்பட்ட பொருளை. எய்த - அடைய. இருதலையும் எய்தும் - முன்னும் பின்னு முள்ள அறத்தையும், இன் பத்தையும் அடைவான். உலைப்பெய்து அடுவதுபோலுந் துயர்

(ஆமையை) உலையிலிட்டுக் காய்ச்சினால் அது அடையுந் துன்பம் போன்ற துன்பம். உலை - கொல்லனுலையுமாம் (மூன்று, இரு தலை, ஆகுபெயர்.) நடுவணது -குறிப்பு வினையா லணையும் பெயர். செல்வத்தின் இன்பமும், வறுமையின் துன்பமும் கூறியது, இது.

2. நன்னிலை - நல்ல நிலை. தலையாக -(பலரினும்) மேன்மையாக. நிலையினும், உம்மை உயர்வு சிறப்பு. மற்றை உம்மைகள் எண்ணுப் பொருளன. நிறுப்பான், எழுவாய்; தான், பயனிலை. உயர்வு தாழ்வுக்கு அவரவரது செய்கையே காரண மென்பதாம்.

3. பெருமுத்து + அரையர் - பெரிய முத்துக்களை யுடைய பாண்டிய அரசர். [பாண்டிய நாட்டில் முத்து மிகுதி.] அன்றி, பெரு + மு + தரையர் எனவும் பிரித்துப்பெரிய மூன்று நிலங்களுக் குரிய சேர சோழ பாண்டியர் எனவும் உரைக்கலாம். பெருமுத்தரையர் - ஒரு பிரபு என்பாரு முளர். கருனை - பொரியற்கறி. கயவர் - கீழ்மக்கள். ஆர்வர் - உண்பர். தாளாண்மை - முயற்சி. நீரும், உம் இழிவு சிறப்பும்மை. நனி - மிகுதிப் பொருள் குறிக்கும் உரிச் சொல்.

4. கடிப்பு - முரசு அடிக்கும் குறுந்தடி. கண் - வாத்தியத்தில் அடிக்கப்படும் இடம். காதம், யோசனை - நீட்டலளவை எண்; காதம், எழுநாழிகை வழி; காதம் நாலு கொண்டது யோசனை. முழங்கியது - முழங்கிய ஓசை; வினையா லணையும் பெயர். ஏ - தேற்றம். இச் செய்யுள் **மேன்மேலுயர்ச்சி அணி** கொடுப்பவரது புகழ் எங்கும் பரவு மென்பது கருத்து.

5. உடா அதும் - (நல்ல உடைகளை) உடுக்காதும். செற்றும் - வருத்தியும், உய்த்து ஈட்டும் - (தேனைக்) கொண்டுபோய்ச் சேர்க்கும். கரி - சாட்சி. இப் பாட்டின் உபமானமும், உபமேயமும் ஒருங்கே அமைந்து விளங்கும் "**ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்**" என்ற **ஔவையார்** வாக்கை ஈண்டுக் கருதுக. உடா அது - கெடா அத - கொடா அது என்ற அளபெடைகள் செய்யளிசை நிறைக்க வந்தன.

6. நீர் ஒழியப் பால் உண் குருகு - (பாலும் நீரும் கலந்திருந்தால்) நீர் நீங்கப் பாலை மாத்திரமே உண்கின்ற அன்னப்பறவை; அமைவு உடைய - சாரம் அமைந்த ஞான நூல்கள்; வினையாலணையும் பெயர். 'பானிறக் குருகினுய்ந்து' என்றார், சிந்தாமணியார்.

7. வைப்பு உழி - வைத்த இடம். (சங்கேதம்) கோள்படா - கொள்ளப்படா. கோள் - முதனிலை திரிந்த தொழிற் பெயர். வாய்த்து - (நன் மாணுக்கர்) கிடைத்து. செறின் - கோபித்தாலும். எச்சம் - எஞ்சி வைக்கும் பொருள். விச்சை - கல்வி; வித்தை. மற்று - அசை.

8. குஞ்சி அழகும் - மயிர் முடியின் அழகும். கொடும் தானை கோடு அழகும் - மடிப்புள்ள ஆடையினது கரையின் அழகும். கல்வியே தம்மனத்துக்கு இன்பந் தருவது என்பதாம். இச் செய்யுள் ஆண் கல்விக்கும் பெண் கல்விக்கும் பொது. இச்செய்யுளோடு "மயிர் வனப்பும்" என்னும் சிறு பஞ்சமூலச் செய்யுளையும் "இடைவனப்பு" என்னும் ஏலாதிச் செய்யுளையும் ஒப்பிடுக. கொடுமை - வளைவு. நல்லம் - தன்மைப் பன்மைக் குறிப்பு முற்று.

நண்பு ஒரீஇ - சிநேகத்தை விட்டு. கேண்மை - சிநேகம். மெய்யதா - உடம்பின் கண்ணதா யிருக்கையிலும். ஆ - ஆக வென்பதன் விகாரம்; உம்மை தொக்கது. ஒருவி, தழுவி என்பன விகாரப்பட்டு ஒரீஇ, தழீஇ என அளபெடுத்தன. வேண்டும், ஓர் வகை வியங்கோள்.

10. கலை - ஒலிக்கின்ற. தண்சேர்ப்ப - குளிர்ந்த துறையை யுடையவனே! (விளி) தின்றால் அற்று - தின்றாற் போலும்; விகாரம். தூர் - வேர். தகைத்து: தன்மையுடையது. ஈரம் - அன்பு. அரோ - ஈற்றசை. இச் செய்யுட் போலவே இந்நூல் 211-ம செய்யுள் கருத்தொத்திருக்கிறது.

11. இல்லம் - வீடு; மனைவியுமாம். கற்பு - கல்வின் தன்மை; பெண்டிர் கற்புமாம். புறங்கடை - வீட்டின் கடைப்புறம்; (வெளி) முன்பின்னாக நின்றது இலக்கணப் போலி. சோறும்

டும், இழிவு. இது, துணைவினை. தன் தகுதிக்கு மேற்பட்ட சிநேகம் பயனில்லை யென்பதாம்.

12. இறப்ப - மிகுதியாக; வரம்புகடக்க. தீய - தீங்குகள்; குறிப்பு வினைப்பெயர். தகுவது ஒன்று அன்றே - தகுதியான ஒருகாரியமன்றே. உருவ - அழகிய; குறிப்புப் பெயரெச்சம். 'ஒருவர் பொறை இருவர் நட்பு' என்பதன் கருத்து, ஒருத்தர் ஒருத்தரது பிழையைப் பொறுத்தலே இருவர் சிநேகமும் நிலைப்பதற்குக் காரணமென்பதாம். ஈற்றடி ஓர் பழமொழி சோங்கு, மலருக்கு ஆகுபெயர்.

13. செந் நெல் - ஓர் வகை நெல். ஊர ஊர்களையுடையவனே! (விளி) - 'மகனுரைக்கும் தந்தை நலத்தை' என்ற நான்மணிக்கடிகை அடியின் பகுதியை ஈண்டு நோக்குக. ஈற்றடி ஓர் பழமொழி. முளை - தொழிலாகுபெயர். ஆல் - ஞாபக உருபு.

14. சிதலை - கரையான்; செல் (சாதி ஒருமை) மதலை, தூண். வீழ் - விழுது கீழே இறங்கி வீழ்வது' வீழ்; கருத்தாப் பொருள் விகுதி புணர்ந்து கெட்டது. ஊன்றி ஆங்கு - ஊன்றினாற் போல; ஆங்கு, உவம உருபு. ஆலம், அம் சாரியை. குதலைமை - தளர்ச்சி. தந்தை செய்யுந் தொழிலுக்கு நேரும் தளர்ச்சியை மகன் தன் முயற்சியால் நீக்கவேண்டு மென்பது கருத்து. "நைந்தடியற்ற வாலம் நடுங்கி வீழ்கின்ற தென்று, வந்த வீழூன்றி வீழா வகை நிலை விளக்குமா போல், மைந்தர்கள் தமக்குள் நல்ல அறிவினால் மகிழ்ந்து சேர்ந்து, தந்தையைத் தளராவண்ணம் தாங்குவர் தவத்தி னென்றான்." என்ற ஒட்டக்கூத்தர் உத்தர காண்டச் செய்யுளும், " தூங்கு சிறை வாவலுறை தொன் மரங்களென்ன, ஓங்கு குல நையவதனுட் பிறந்த வீரர், தாங்கல் கடனாகும்" என்ற சீந்தாமணிச் செய்யுளும் இச் செய்யுளை அடியொற்றியவை; இச் செய்யுளனைத்தும். " முழு முதல் தொலைந்த கோளி ஆலத்துக், கொழு நிழல் நெடுஞ்சினை வீழ் பொறுத்தாங்குத், தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல் செல்லாது, நல்லிசை முதுகுடி நடுக்கறத் தழீஇ" என்ற புறம் 58-ம் செய்யுளைப் பின்பற்றி எழுந்தவை. இக் கருத்தையே " இடுக்கண் கால் கொன்றிட வீழும், அடுத்தூன்று

நல்லாளி லாத குடி'' என எதிர்மறை முகத்தான் வலியுறுத்தார் நாயனுரும். இச் செய்யுளின் கருத்தால் மதலை போல் (தூண் போல்) தகப்பனைத் தாங்குதற் குரியவன் மகன் என்பது கருதியே மகனுக்கு மதலை என ஓர் பெயர் வந்த தென்பது அறியப்படும். இதுகொண்டு ஈற்றடியின் பாடத்தை எங்ஙனம் மாற்றினல் பொருந்தும்?

## 2. திரிகடுகம்.

1. தாள் + ஆளன், தாளாளன் - முயற்சி யுடையவன். படா - ஈறு கெட்ட எதிர்மறை வினையெச்சம். விருந்து இருக்க - வந்த விருந்தினர் உண்ணுமலிருக்க. விருந்து - புதுமை; ஆகு பெயர்; புதியராய் வந்தார் மேல் நின்றது; அவர் பண்டு அறிவுண் மையிற் குறித்து வந்தாரும் அஃதின்மையிற் குறியாது வந்தாரு மென இருவகைப்படுவர். கோளாளன் - பிறர் அறிவித்த காரியங் களை மனதிற் கொள்ளுதலில் வல்லவன்.

2. பால் பற்றி - ஒரு பக்ஷத்தைப்பற்றி. தோல் வற்றி- உடம்பு வறுமையால் மெலிந்து. சாயினும் - கெட்டாலும். சான்று + ஆண்மை-எல்லாக் குணங்களும் நிறைந்து ஆளுந்தன்மை. தூஉயம் - தூய்மையின் மை விகுதி கெட்டது; அம், தன்மைப் பன்மை விகுதி. அளபெடை. இசை நிறைக்க வந்தது.

3. வள்ளன்மை - கொடைக்குணம். புணர்வின்கண் - பிறர் தன்னைச் சார்ந்தவிடத்து. தக்கது - அவர்க்குச் செய்யத்தக்கது. பொத்து - பொந்து; இது வலித்தல் விகாரம். காழ்த்த - வயிரம் பற்றிய; குறிப்புப் பெயரெச்சம்.

4. நட்பின் கொழுமுளை - சிநேகத்தின் செழித்த ஆரம்பம். செப்பம் - நடுவு நிலைமை. செப்பநெறி - செவ்வியவழி.

5 தன்னைப்பேணுங்கால் - தன்னைப் புகழுமிடத்து; திறன் வேறு கூறின் - இகழ்ந்தால். பொறையும் - பொறுத்தலும். காராண்மை - [கார் + ஆண்மை] மேகம் ஆளுதல் போல; கார் - பண்பாகுபெயர். ஊராண்மை - பிறரின் மேற்பட்டுச் செல்கின்ற ஆண்மை. செருக்கு - பெருமிதம்.

## 3. ஆசாரக்கோவை.

1. நன்றி - பிறர் செய்த உபகாரம். இன்னாத - பிற உயிர்க்குத் துன்பந்தரும் செய்கைகள்; வினையாலணையும் பெயர். (இன்னா - துன்பம்) ஒப்புரவு - உபகாரச் செய்கை. ஆற்ற - மிகுதியாக. நட்டல் - சிநேகம் செய்தல்; நள் - பகுதி. ஆசாரவித்து - ஆசாரத்துக்கு மூலகாரணம். இவை ஒழிந்த நீராடல் தீண்டாமை முதலியன ஆசாரமாகாவென்க.

2. வைகறையாமம் - அதிகாலை. வாய்வதின் ஒண்பொருள் - சிறந்த பொருள்; (வருவாய்க்குரிய காரியம்.) வாய்வதின் - பின்பு இராப் புலர்ந்தபோது; உண்மையாக வெனினுமாம் முந்தையோர் - முன்னையோர்.

3. ஒன்று, என்பது இரண்டும் ஆகுபெயர்; ஆடையைக் குறித்தன. அவை - சபை. விழுத்தக்கோர் - மேலோர்.

4. கிடத்தல் - படுத்தல். கோணம் - கோணதிசை. (மூலை) மீக்கோள் -மேற்போர்க்கும் ஆடை; போர்வை. உடல்கொடுத்து- உடலில் போர்த்தி.

5. காட்டு - தூரால்; (குப்பை) கலம் - பாத்திர பண்டம். கழீஇ - கழுவி; சொல்லிசை அளபெடை. ஆப்பிநீர் - சாணநீர், சிறுகாலை - அதிகாலை. நீர் சால்கரகம் - நீர் நிறம்பிய உலைப்பானை. பொலிய - விளங்க.

6. தம்முன் - தமக்கு முன் பிறந்த அண்ணன். குரவா - ஐம்பெருங் குரவர்:—தாய், தந்தை, தம்முன், அரசன் உபாத்தியாயன்.

7. கண் அமர்ந்து - கண்மூடி. துளங்காமை - (அசையாமல்.) நன்கு; இரீஇநன்கிரீஇ - நன்றாக இருந்து. நோக்கான், உரையான், முற்றெச்சம். உகா அமை - சிந்தாமல்; அளபெடை; உகு, பகுதி. ஆ, எதிர்மறை இடைநிலை, மை, விகுதி. உகாமை நன்கு உண்க என்க. பிறிது + யாதும் பிறிதி யாதும்; குற்றியலுகரம், யகரம் வர இகரமாயிற்று.

8. தலை - முதலில். கைப்பன, தித்திப்ப, ஒழிந்த, வினையாலணையும் பெயர்கள்; உணவுகளைக் குறித்தன. துய்க்க- உண்க.

9. நந்து எறும்பு-(முயற்சியால்)சிறந்து விளங்குகிற எறும்பு. தூக்கணம் புள் - தூக்கணங்குருவி. அப்பெற்றியாக - அத்தன்மையாக. ஆசாரம் - இல்வாழ்க்கையின் ஒழுக்கம்.

## 4. சிறுபஞ்சமூலம்.

1. சாம் -சாகும். வினையெச்ச விகாரம். கொடும் கரி - கொடுமையான பொய்ச்சாட்சி. நன்று உணர்வார் - விஷயங்களை ஐயந்திரிபு அறக் கற்றவர்கள். கல்லான் நாவும் சாம் - கல்வி அறிவில்லாதவன் நாச்சொல் வலிவுபெற்று நிலையாது: உம்மை எச்ச உம்மை. ஒன்றானும் கண்டுழி நாச்சாம் கடவான் - கடன் வேண்டி வந்தானொருவனைக்கண்டால்கடன் கொண்டவனுடைய நாவும் சாகும். இங்கு நாச்சாதலாவது: என்ன கூறுவதென்று ஒன்றுந் தோன்றாது நாக்குழறுதல். கடவான் நாச்சாம் எனக்கூட்டுக. உண்டுழி - ஒருவனுதவி பெற்றவிடத்து. உணர்ந்து - மற்றவன் செய்த உதவியை நினைத்து. குடிப்பிறந்தான் நாச்சாம்-குடிப்பிறந்தானது நா (இவ்வுதவி செய்தான் விஷயத்தில் தீமை சொல்லமாட்டாது) சாகும். சாதலாவது உதவி செய்தானை எக்காலத்தும் பழிப்பதற்கு நா எழும்பாமை.

2. பூதர் - பூதபைசாசங்கள். மூன் - மூப்பு வருவதற்கு முன். ஆதர் - பேதையர்; அறிவில்லாதவர். இருகால் எருது - இரண்டு காலையுடைய காளை. அதாவது: வடிவில் மனிதரேனும் அறிவில் மிருகமாம்.

3. வான்குருவி - தூக்கணங்குருவி. கூடு - அது செய்யுங் கூடு. அரக்கு - பேரெறும்புகளால் செய்யப்படும் அரக்கு. வால் உலண்டு-வாலிய புழுக்களால் நூற்ற நூல். (பட்டு) கோல்தருதல்- (வேறொரு புழுவால்) கோல்களில்செய்த கூடு. புரிந்து - விரும்பி. புரிந்தியார்க்கும், குற்றியலுகரம் யகரம்வர இகரமாயிற்று. பரீஇ - பரிந்து என்பது விகாரப்பட்டு அளபெடுத்தது. வாய்ப்பன என்னார் - குறைவுபடாமல் செய்யக்கூடியவை என்று சொல்லார். ஓரோ ஒன்று - ஓரோவொரு செய்கை.

5. வருவாய் - வரும்படி. வீழ்ந்து - விரும்பித்தழுவி. வெருவாமை (தீயகுணத்துக்கு) அஞ்சாமல். விருந்தோம்பி - வந்தார்க்கு விருந்து செய்தலைக்காத்து. தெய்வதையும் - தேவதை. எஞ்ஞான்றும - எப்போதும். தேற்ற வழிபாடு - தெளிந்த உளத்தோடு செய்யும் வணக்கம். சிறப்பு - சிறந்த குணம்.

6. வார்சான்ற கூந்தல்! - நீண்ட கூந்தலை யுடையவளே; மகடூஉ முன்னிலை. கூந்தல், கூந்தலையுடையவளுக்கு ஆகுபெயர். சோழன் முடிசூட்டில் ஔவையார் 'வரம்புயர' என்று வாழ்த்தி விட்டுச் சும்மாவிருக்கக் கேட்ட பிறர் 'இது அரசனைவாழ்த்தியது எவ்வாற்றானாகும்' எனவினவ அதற்கவர் "வரம்புயர நீருயரும்; நீருயர நெல்லுயரும்; நெல்லுயரக் குடியுயரும்; குடியுயரக் கோன் உயரும்" என உரைத்தவற்றோடு இச் செய்யுளை ஒப்பிடுக.

---

## 5. அறநெறிச்சாரம்.

1. செம்மை ஒன்றின்மை - பக்ஷபாத மின்மை. திறம்பா - வேறு படாத. ஆன்ற - உயர்ந்த; இதில் சால் என்னும் உரிச்சொல்லின் விகாரமாகிய ஆல் பகுதி.

2. ஈட்டிய - தேடிய. ஒண்பொருள் - சிறந்த பொருள் இல் ஒழியும் - வீட்டிலேயே தன்னை விட்டுப் பிரியும். காட்டுவாய் - இடு காட்டில். கலுழ்ந்து - அழுது. எரியின் - தீயில். ஈர்ங்குன்ற நாட - குளிர்ந்த மலைநாடனே! தெரியின் - ஆராயின். இச் செய்யுளோடு.

"அத்தமும் வாழ்வும் அகத்துமட்டே; விழி அம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட்டே; விம்மி விம்மி இரு
கைத்தலம் மேல்வைத் தழும்மைந் தருஞ்சுடு காடுமட்டே;
பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே."

என்ற பட்டினத்தார் பாடலை ஒப்பிடுக.

3. எரு + அட்டி = எருவட்டி - எருவைச் சொரிந்து (அட்டி; அட்டுபகுதி) பைங்கூழ் - பயிர். சிறுகாலே - இளம்பருவத்திலேயே. நிலம் ஆ - ஆகவென்பதன் விகாரம். இச்செய்யுளிலுள்ள ரூபகம் (Metaphor)போற்றத்தக்கது.

4. காரணம் - ஏதுக்கள். நல்லாய்! - பெண்ணே. மூழை - அகப்பை. அறன் - அறம்; மகரனகரப்போலி. (ஈற்றடி பழமொழி)

5. காய்தல் - வெறுத்தல். உவத்தல் - (விரும்பி) மகிழ்தல். அகற்றி - (இவற்றை) விட்டு; (நடுநிலைமையோடு) கண்ணதே ஏ, பிரி நிலை. உம், எச்சவும்மை.

6. உள்ளி - கருதி. செயிர் - பகை. கடிந்து - நீக்கி. கொண்டிருக்கற் பாற்று - கொண்டிருத்தல் தகுதி.

7. எள்ளி - இகழ்ந்து. இன்னாச் சொல் - துன்பந் தரும் (கடுஞ்) சொல். அவித்து - (அக்கொடுமையை)த்தணித்து. பிறிது எனினும் - வேறு நன்மை செய்வதாயினும். தவம் வேண்டா - தவம் அவசியமின்று. பொறுமையே தவத்தின் பயனை அளிக்கும் என்பது கருத்து.

8. அலர் கதிர் ஞாயிறு + ஐ - (எங்கும்) பரந்த கிரணங்களையுடைய சூரியனை. கைக்குடை - சிறு குடை; (கை-சிறுமை) (உம்-இழிவு சிறப்பு) காக்கும் - மறைக்கும். அச்சு + ஆணி - அச்சு - உருள் கோத்த அச்சுமரம். ஆணி - கடையாணி. (Linch-Pin) சொல் - முக்கியமானசொல் - இச் செய்யுளோடு.

> "முற்றும் உணர்ந்தவரில்லை; முழுவதூஉம்
> கற்றன மென்று களியற்க;—சிற்றுளியால்,
> கல்லுந் தகரும்; தகரா கனங்குழாய்!
> கொல்லுலைக் கூடத்தினால்,"

என்ற **நீதிநெறி விளக்கச்** செய்யுளை ஒப்பிடுக. சில, பல வினையாலணையும் பெயர். அலர் கதிர், வினைத்தொகை. ஞாயிறு என்னும் உயிர்த்தொடர்க் குற்றியலுகரம் வேற்றுமையில் ஞாயிற்றை என இரட்டித்தது.

9. இருவரும்; உம், முற்றும்மை. மனையான் - இடப்பெயர். உய்ப்பின் அல்லால் - செலுத்தினாலன்றி. வான் சகடம் - பெருமை பொருந்திய வண்டி. தெற்றிற்று - தடைப்பட்டு.

## 6. வள்ளுவர் நேரிசை.

1. சாயா - (எவ்வாற்றானும்) அழியாத. இரணியன் - இரணிய கசிபு என்னும் அசுர ராசன். இரணியம் - பொன்; பொன்னிற மானவன்) சேய் - அவன் புத்திரன். (பிரகலாதன்) நீந்துவர் என்பதற்கு 'இறைவனடி சேர்ந்தவர்' என்னும் எழுவாய் வருவிக்க. பிறவியைக் கடலென்று ரூபகம் செய்ததற் கேற்ப அடியைத் தெப்பமென்க. நீந்துவர்; நீந்தார் முரண். கதை:—இரணிய கசிபு செல்வத்தாலும் வரத்தின் வலியாலும் செருக்குற்றுத் தானே கடவுளெனத் தன் பெயரையே யாவரையும் உபாசிக்கக் கட்டளையிட்டான். அவன் வயிற்றிற் றோன்றிய பிரகலாதன், அக்கட்டளையை மீறி 'ஹரி ஓம்' என்னும் விஷ்ணு நாமத்தையே உச்சரித்தான். அதற்கு அவனை இரணியன் பலவாறு கொல்ல முயன்றும் முடியாது பிரகலாதனை நோக்கி, 'எங்கு முளன் என்று உன்னால் கூறப்படும் விஷ்ணு இத்தூணிலு மிருப்பானோ'? வென வினவ அவன் "அவர் தூணிலும் இருப்பார் துரும்பிலும் இருப்பார்" எனக்கூற இரணியன் தூணைக்காலாலுதைத்தான். பகவான் நரசிம்ம ரூபியாய் அத்தூணினின்று வெளிப்பட்டு, இரணியனை மாய்த்துப் பக்தியிற் சிறந்த பிரகலாதனுக்கு நித்திய வாழ்வீந்தார்.

2. மழை பெய்ய இந்திரன்பாற் பெட்டான் என மாற்றுக. பெட்டான்-விரும்பினான்; பெட்பு, பகுதி. பொருநை-தாமிரபரணி நதி. வையை-வைகை நதி; இவற்றையுடையவன் பாண்டியன் உய்ய-தழைக்க. அமையாது எனின் -(உலகம் வாழ) முடியாதென்றால். வான்-மழை; ஆகுபெயர். ஒழுக்கு - அம்மழை இடையறாது வீழ்தல்.

கதை:—மதுரையை ஆண்ட உக்கிரபாண்டியன் தனது நாடு மழையின்றி வருந்திய காலத்து இந்திரனிடம் சென்று மழை வேண்டிப் பெற்றான். விரிவைத் திருவிளையாடற் புராணம் முதலியவற்றுள் காண்க.

3. கோன் ஆக - இந்திரனாக. சசி - இந்திராணி. சென்றோன் - நகுஷன் என்னும் அரசன். குறுகாமே - அவளிடம் செல்லாமலே. மால் நாகம் - பெரிய (மலைப்) பாம்பு. ஆறு - குறையாத. குண ...குன்று - நற்குண மலை. (சலியாமையும் பெருமையும் பற்றிக் குணத்தைக் குன்றென்றார்.) வெகுளி - கோபம். கனம் - க்ஷணப்பொழுது. (கண்ணிமைப் பொழுது) நின்றார் - நின்ற முனிவர்கள். காத்தல் - தடுத்தல்.

கதை:—சந்திர வம்சத்து நகுஷனென்பான் நூறு அசுவமேத யாகங்கள் புரிந்து இந்திர பதவியை யடைந்து வழக்கப்படி அகஸ்தியர் முதலிய சப்த ரிஷிகள் பல்லக்குத் தாங்கச் சென்றவன் இந்திராணியை விரைந்து காண வேண்டுமென்னும் காம இச்சையால் முனிவர்களை விரைந்து செல்லுங்களென்னும் பொருள்பட "ஸர்ப்ப ஸர்ப்ப" என்றான். அகஸ்திய முனிவர் முனிந்து "நீ ஸர்ப்ப ஸர்ப்ப என்றமையால் ஸர்ப்பமாகக் கடவை" எனச் சபித்தார். உடனே அவன் மலைப்பாம்பாய் வீழ்ந்தான். விரிவை மகாபாரத முதலியவற்றுள் காண்க.

4. காலால் - (செருப்புப் பூண்டிருந்த) காலால். வாலிது - பரிசுத்தமானது. சாலும் - சிறந்ததாகும். மாசு - (தீயன சிந்திக்கும்) குற்றம். இலன் ஆதல் - இல்லாதவனாகுக. அனைத்து அறன் - அவ்வளவே தருமம் என்பது. பிற - ஏனைய சொல்லளவிலும் வேஷ மாத்திரத்திலும் வெளிப்படுத்தும் அறங்கள். ஆகுல நீர. ஆடம்பரத் தன்மை யுடையனவாம். நீர - நீர்மை என்னும் பண்படிக்குறிப்பு முற்று. கண்ணப்பர் உடுப்பூரில் வேடர் குலத்தில் நாகன் என்பானுக்குப் புத்திரனாய்ப் பிறந்து திண்ணன் என்னும் பிள்ளைப் பெயர் பூண்டிருந்தவர். வேட்டைக்குச் சென்றிருந்தவர் காளத்திமலையில் குடுமித்தேவரைத் தரிசித்து ஆறு நாளில் கண்ணையே பிடுங்கிச் சுவாமி கண்ணில் அப்பும் அதியற்புத பக்தி வைராக்கிய முற்று முத்தியடைந்தவர். இவர் வரலாற்றைப் பெரிய புராணத்துட் பரக்கக்காணலாம்.

5. கோசிகன்பால் - விசுவாமித்திர முனிவர் பின்னே. உன்னுங்கால் - ஆராயுமிடத்து. மன்னன் - தசரதன். இயல்பு -

அந் நிலைக்குரிய இலக்கணம். மூவர் - பிரமசாரி, வானப்பிரஸ்தன், சந்யாசி ஆகிய மூவர்கள். நல் ஆறு-அவரது ஒழுக்க வழிகளில்.

கதை —அரக்கியான தாடகை என்பாள் நல்லோர்க்குப் பல விதத்திலும் தீமை புரிந்துகொண்டு திரிந்தவள், விஸ்வாமித்திரர் செய்த வேள்விக்கும இடையூறு செய்தனள். அம்முனிவர் தசரதரிடம் சென்று தாடகையாலுற்ற தமது குறையைக் கூறி அவளைக் கொன்றொழிப்பதற்கு ராமனைத் தன்னுடன் அனுப்புமாறு வேண்டினர். முதலில் புத்திர வாஞ்சையால் தசரதன் சம்மதியாது பின்னர் வசிஷ்டர் கூறிய உறுதி மொழியால் தேறி ஸ்ரீ ராமனை முனிவருடன் விடுத்தனன் என்பது ராமாயணம்.

6. மூவர் - பிர்மா, விட்டுணு, சிவன். நாவன்மை - சொல் வலிமை: நா, கருவியாகுபெயர். மழை மூவர் தடுப்ப என மாற்றுக - உம், உயர்வு. தொழா அள் - வணங்காளாகி; முற்றெச்சம்; உயிரளபெடை. கொழுநன் - இரண்டாம் வேற்றுமை விகாரம். கற்புடைய பெண்டிர்க்குத் தெய்வந்தானும் ஏவல் செய்யுமென்பது கருத்து. கதை:—அநசூயை தன்னைச் சோதிக்க வந்த மும்மூர்த்திகளையும் கற்பு மகிமையால் குழந்தைகளாக்கியும் தனது நாயகன் அத்திரியின் கட்டளைப்படி ஐம்பத்து நான்கு வருடம் மழையின்றி வருந்திய பிராணிகட்குக் கங்கை யாற்றைக்கொணர்ந்தும் மூவர் தடுக்கவும் மழை பெய்வித்தும் பிராணிகளை உய்வித்தனள் என்பது.

7. தீ நிரயம் - கொடிய நரகம். 'இறந்தாரும் பகீரதனால் வானிற் சிறந்தார்' எனக்கூட்டுக. இறந்தார் - சகரர்கள். வானம் - சுவர்க்கம். எழுபிறப்பு - தேவர், மானுடர், விலங்கு, ஊர்வன, நீர்வாழ்வன, பறப்பன, தாவரம். தீயவை - துன்பங்கள். பழிபிறங்கா - குற்றமில்லாத. பண்பு - நற்குணங்கள்.

கதை:—சகர சக்கரவர்த்தி செய்த அஸ்வமேதயாகக் குதிரையைப் பொறாமையால் இந்திரன் பாதாளத்தில் கபில முனிவர் ஆச்சிரமத்தில் கட்டிவிட்டான். சக்கரவர்த்தியின் புதல்வர் 60000 பேர்களும் பாதாளத்தில் புகுந்து கபிலரே குதிரையைக் கட்டியவ

ரென யுத்தந் தொடங்கவும் முனிவர் அவர்களைச் சபித்தெரித்துச் சாம்பராக்கினர். பின்னர் இவர் வழி வந்த பகீரதன் இச்செய்தியை அறிந்து சிவபிரானை வேண்டித் தவம்புரிந்து ஆகாய கங்கையைப் பெற்றுப் பாதளத்தில் கொண்டுபோய் முன்னோரது எலும்புச் சாம்பரில் நனைத்து அவர்களைச் சுவர்க்கம் புகுவித்தான் என்பது. நற் புத்திரன் ஒருவனால் குலத்தவர் பலருக்கு நன்மை யுண்டாகு மென்பது கருத்து.

8. தேரார் - அறியாதவர்களும். சிதைந்த களன் - இறந்த போர்க்களம். வாரா - வந்து. சூரன் பெண் - சூரசேனனது மகள்; குந்தி. தாழ் - தாழ்க்கோல். ஆர்வலர் - அன்புடையார் புன்க(ண்)ணீர் - அற்பமாகிய கண்ணீர். பூசல்தரும் - (அன்பை யாவரு மறிய) வெளிப்படுத்தும். உம்மைகள் முறையே இழிவும் உயர்வும் பற்றியன. கன்னன் இறந்த பிறகு குந்தி யுத்தகளத்தில் அவனை வாரியெடுத்து அழுது மடிமீது வைத்துப் பாலூட்டித் தன்னைத் தாயென்று வெளிப்படுத்திய வரலாறு பிரசித்தம்.

9. வித்து - வயலில் விதைத்திருந்த முளை நெல். அரித்திட்டு - கையால் அரித்துச் சேர்த்து. விருந்து - சிவபிரானாகிய விருந்தினரை. மாறர் - இளையான்குடி மாற நாயனார். இல் இருந்து. ஓம்பி - (மனைவியோடு) வீட்டிலிருந்து (பொருளைப்) பாதுகாத்து. விருந்து - விருந்தினர்; ஆகுபெயர். வேளாண்மை - உபகாரம்.

கதை:—இந் நாயனாரது விருந்தோம்பல் அறத்தை உலகத்தார்க்கு வெளிபபடுத்த ஒரு நாள் மழை பெய்யும் நள்ளிரவில் சிவபெருமான் விருந்தினராய் அவர் அகத்துக்கு வர, வறுமை மேலிட்டிருந்த மாறர் வயலில் விதைத்த நெல் முளையை வாரி வந்து மனைவியிடம் கொடுத்துப் பாகம் பண்ணி விருந்தினராகிய சிவபெருமானை உண்பித்தார் என்பது. விரிவைப் பெரிய புராணத்துட் காண்க.

10. நீடு - நீண்ட காலம். அதிகன் - அதிகமான் என்னும் வள்ளல். வாடாது - (உடல்) தளராது. சாவா மருந்து - தேவாமிர்தம். வேண்டற்பாற்றன்று - விரும்புந் தன்மைத்தன்று.

கதை:-உண்டோரை நீடு வாழச்செய்யும் அரிய கருநெல்லிக் கனியை ஒரு மலைமிசைப் பெற்ற அதிகமான் அதனைத் தானுண்ணாது அதிதியாய் வந்த ஔவை யென்னும் புலவர்க்குக் கொடுத்து அவரை நெடுங்காலம் வாழச்செய்தான் என்பது.

11- அராவான் - நாககன்னிகை வயிற்றில் அர்ச்சுனனுக்குப் பிறந்தவன். மன்பால் - துரியோதனனிடம். களப்பலி - யுத்தந் தொடங்குமுன் யுத்தகளத்தில், காளி தேவிக்கு நரபலி செய்தல்; அகன் அமர்ந்து - மனமகிழ்ந்து. முகன் அமர்ந்து - இன்முகத்தோடு.

கதை:—அராவான், துரியோதனன் பாரத யுத்தந் தொடங்குமுன் களப்பலியாக வேண்டுமென்று வேண்டியதற்கு "அதுவரை இவ்வுடல் நிலைத்திருப்பின் அப்படியே ஆவேன்" என மனமகிழ்ந்து அராவான் உடன்பட்ட செய்தி பிரசித்தம்.

## V. சரிதைப்பகுதி.

### 1. நைடதம்.

1. பொலன சிறை - பொன் வடிவாகிய சிறகுகள். பவளக் கடிகை - பவளத்துண்டு. பொற்பு - அழகு. எழில்பகரும் முன்னூலோர் - க்ஷாமுத்திரிகா சாஸ்திரிகள். எழில் அளவு - அழகின் அளவு. (எழுவது எழில்; உரிச்சொல்) மேற்கோள் - உதாரணம். ஈண்டு "அகத்தின் அழகு முகத்தில் தெரியும்" என்னும் பழமொழியை நினைக்க.

2. காதல் அம் கடல்-ஆசையாகிய அழகிய கடல் (உருவகம்) அயன் பிரமன். போதரும் - வந்த. (போதரு பகுதி) புணையது ஆதி - தெப்பம் ஆவாய்' (அது பகுதிப்பொருள் விகுதி, ஆதி - விகாரம்) புலம்புகொண்டு - துன்பங்கொண்டு. இனைவது - வருந்துவது. தவிர்ப்பான் - நீக்கும்பொருட்டு. உரைத்தஆ - சொல்லியபடி. (ஆ-ஆறு என்பதன் விகாரம்) தோம் அறு - குற்றமற்ற. ஆதரம் - அன்பு. மடந்தை - தமயந்தி.

3. போதரும் நெறி - போகின்ற வழி. புல்லி - சேர்ந்து. அளியனை - எளியேனை. மறவேல் - மறந்துவிடாதே. (எதிர்மறை வியங்கோள்முற்று) ஆய் இழை - ஆராய்ந்தெடுத்த ஆபரணங்களை யணிந்த தமயந்தி. (வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை) அருண்முகம் - அருளோடு கூடிய உடன்பாட்டுச் சொல். (முகம் ஆகுபெயராய்ச் சொல்லை உணர்த்திற்று) திங்களின் - சந்திரனைப்போல. சுதை நீற்று - சுண்ணாம்பு பூசிய. தாது அவிழ் தாமம் - மகரந்தம் உதிரும் மாலைகள். தனியும் - ஒருவரும் உடனில்லாமையும்.

4. கட்புலன் - கண்ணின் ஒளி. கதுவாது - பற்றப்படாது. காண்வர - காண. வெள்ளிடை - வெளியிடம். விசும்பில் - ஆகாயத்தில். பொன் உரைத்தால் எனப்போகி - பொன்னை உரைத்தாற் போல் (தனது வடிவம் தோன்றாது நிறம் மாத்திரம் ஒரே தாரையாய்த் தோன்ற விரைந்து) போய். நுட்பம் ஆய்குநர்— காலநுட்பத்தை ஆராய்கிறவர்கள். நொடிவரை - கையை நொடித்தற்குவேண்டும்பொழுது; ஒருமாத்திரை. வட்கி - வெட்கி; நாணி; சவிகெட - ஒளிகெட. குண்டினபுரம் - தமயந்தி உறையும் நகரம்.

5. நிலாமணி - சந்திரகாந்தக்கல். ஆலவாலம் - பாத்திகள். அவிர்மதி - விளங்குகின்ற சந்திரன். புனல்கால - நீரைச் சொரிய. வாய்ந்த - வளர்ந்த. (சந்திரகிரணம் மேலே படும்போது சந்திரகாந்தக்கல் நீர்காலும் என்ப) மணி நாண்மலர் - முத்துப் போலும் புதியமலர்

6. தாரகை நாப்பண் - நட்சத்திரங்களின் நடுவில். மாதர் நோக்கு - அழகிய கண்பார்வை. தாரகைகள், மடந்தையர்க்கும், திங்கள் தமயந்திக்கும் உவமை.

7. மாசு ஒழிந்த - களங்கம் நீங்கிய. ஊர் - ஊர்கோள்; பரிவேஷம். (சந்திரனைச் சுற்றித் தோன்றும் வட்டம்) கோதை - தமயந்தி; (ஆகுபெயர்)

8. 'கடவுளொண்பூ' ஆகையால் 'தெய்வத்தாமரை' யெனப்பட்டது. போது - பூ. உறைசெல்வி - இலக்குமி. கொவ்வை- கோவைக்கனி. (ஆகுபெயர்) அயிராணி - இந்திராணி. நவ்வி

நோக்கி - மான்போலும் கண்களையுடையவள். இணை - ஒப்பு. எவ்வம் - குற்றம். வியந்தது - தமயந்தியைப் புகழ்ந்தது.

9. கவர்வான் - பிடித்தற்கு. துவர்வாய் - பவளம் போன்ற வாய். மயில் - மயில்போன்ற தமயந்தி; உவமை ஆகுபெயர். நவை தீர்-பிடிக்கக்கூடுமென்கிற இகழ்ச்சிநீங்கிய. (தீர்;வினைத்தொகை.)

10. புளினத்தடம் - மணற்குன்று; மணல் மேட்டையுடைய குளமெனினும் (புள் + இனம்) பறவைக் கூட்டங்களையுடைய தடாகம் எனினும் பொருந்தும். மேவிய - தங்க. (கைம்மலர் - உருவகம், மகரம், விரித்தல் விகாரம்) நளினம் - தாமரை; பூவுக்கு ஆகுபெயர். தன - தன்னுடைய; அ, ஆறனுருபு.

11. மேகலை - ஓர் ஆபரணம். தகையா - தடுத்து; (தகைந்து) துனி - கோபம். ஓகாரம், எதிர்மறை.

12. செய்யப்பட்ட வயல்களில் முளைத்த. கமலத்தில்-தாமரைப்பூவில் வாழும். பட்டது பட்டது, விரைவுபற்றிய அடுக்கு. மைப்பட்ட - மேகத்தை அளாவிய. மாதவி - குருக்கத்திச் செடி. பொய்ப்பட்ட மருங்கினன் - இருந்தும் காணமுடியாதபடி சிறுத்திருத்தலால் இடையில்லை என்று சொல்லத்தக்கவள். "இட்டிடையிருக்குந் தன்மை......தொட்ட எற்குணரலாம் மற்றுண்டெனுஞ் சொல்லுமில்லை" என்றார் கம்பரும்.

13. கலுழ் - கலங்குகின்ற. தூ - பரிசுத்தம்; (மைவிகுதியும் யகரவொற்றும் கெட்டது; 'பண்புப் பெயர்.) வேர் - வேர்வைநீர். மடம் தாழ் - அழகு தங்கிய. வழங்கியது - சொல்லிற்று.

14. விண் - ஆகாயத்திலும். இயங்கும் - சஞ்சரிக்கிற. மேவர - அடைய. பேதமை - அறியாமை.

15. பேதை நீர்மை - அறியாமைக்குணம் பெட்புறின் - விரும்பினல். ஏதம் - குற்றம். சரதம் - உண்மை. அஞர் - துன்பம். உன்திறத்தின் - உன் விஷயத்தில்.

16. பளிங்கு - கண்ணாடி. துன்னிய - நெருங்கியிருக்கிற. (மற்று-அசை) அதில்-கண்ணாடியில். துளங்க - நடுங்கும்படியாக.

பிழைத்தேன் என்று - குற்றம் செய்தேனென்று. சொற்றது - சொல்லியது.

17. வேண்டல் - விரும்பிய பொருளை. (ஆகுபெயர்) செய்வல் - செய்வேன். சேண் - ஆகாயம் இச்செய்யுள் **எடுத்துக்காட்டுவமை.** "நீ எனக்குக் கண் களிப்பைத் தருவதன்றி விசேடமாகச் செய்யக் கிடந்தது ஒன்றுமில்லை" என்றாள்.

18. மனத்தது - மனத்திலுள்ள பொருள்; (வினையாலணையும் பெயர்) தழைய - பெருக. தகைமைத்தாம் - தகுதியுடையதாம். எழுபுவி - எழு தீவுகள். இருவிசும்பில் - பெரிய வானுலகத்தில். தருவின் - கற்பகத்தருவினுடைய. கொழுநனை - செழுமையான அரும்பை. (மலரும் பருவத்து அரும்பு) நல்குதி என்று - (கொண்டு வந்து) கொடுவென்று. இவ்வடிகளில், தருவின் - கற்பகத்தருப்போலும். நறு - நல்ல. கொழுநனை - கணவனை என மறைவாக மற்றொருபொருளும் தோன்றத் தமயந்தி கூறியதாகச் சிலேடை அமைந்திருத்தல் காண்க.

19. மறைப்பொருள் - இரகசியப்பொருள். மறை - வேதம்.

20. புரி - கட்டமைந்த. மாடகம் - முறுக்காணி; (யாழுறுப்பு) யாழ் இசை கேட்டு - வீணையின் இசைபோன்ற என் சொல்லைக் கேட்டு - (இவள்) கேட்டு. உருகினள் - மனங்குழைந்தவளாகி. அன்பால் - அன்பினால். வேட்கையுற்றனள் என்று - (இன்னும் அச்சொல்லையே கேட்க) ஆசையுடையவளானாள் என்று. அறிகில்லாய் - அறிகின்றாயில்லை. இவ்வடிகளில் யாழ் இசை கேட்டு - யாழ் இசை போன்ற சொல்லைக்கேட்டு. உருகி - மனமிளகி. நளன்பால் - நளனிடத்து. வேட்கை உற்றனள் - ஆசைமிகுந்தாள் என்று அறியமாட்டாயா என்று தமயந்தி மறுபொருளும் தோன்றக்கூறியதாகச் சிலேடை அமைந்திருத்தலையும் நோக்குக. ஆய்தூவி - அழகிய இறகு. தெருமரல் - மனச்சுழற்சி. செப்புமாறு - (வெளிப்படையாய்ச்) சொல்லும் விதம். (எவன்-வினாவினைக் குறிப்பு)

21. என்றதுவும்; உரைத்ததும்:—சிலேடையாக மறைத்துக் கூறியதையும், பலகலை - தருக்கம்; வியாகரணம்,

22. விரை உயிர்க்கும் - வாசனையை வீசுகின்ற. வெய்யவன் - சூரியன். சேதாம்பல் — (செம்மை + ஆம்பல்) செவ்வல்லி. மரு - வாசனை. ஓ, வினாவோடு எதிர்மறை. கொல், அசை. உரை - புகழ். தாமரை மலர்க்குச் சூரியனும், அல்லிமலர்க்குச் சந்திரனும் நாயகராவதுபோல் எனக்கு நளன் நாயகன் என்றவாறு.

23. அணியல்-மாலை; (அணியப்படுவது.) வேள் - மன்மதன்; வேட்கையை உண்டாக்குபவன். மன்றல் அம் தார் - அழகிய மணமாலை. வேல் × தாதை = வேற்றாதை; வேலேந்திய தந்தை. என்னுரை - (என்னைக்குறித்துச் சொல்லும்) உனது சொல்லை.

24. செயிர் அறு - குற்றமற்ற. மயர்வு அற - மயக்கம் நீங்க. அயர்வு - மனச்சோர்வு. ஓதிமம் - அன்னம். கைம்மாறு - பிரதியுபகாரம். இதனால் தமயந்தி நளனைத் தனது உயிரினும் மீப்பட மதித்தமை கூறியது.

25. செம்மாநது - இறுமாந்து. செப்புவல் - சொல்லுவேன்; (அல் தன்மை யொருமை விகுதி) தெவ் × மாறு = தெம்மாறு — பகைமை நீங்குதற்குக் காரணமாகிய (நன்-சூ-236)

26. வேலை - சமயம். (வடசொல்) அமயம் - சமயம் என்ற வடசொற்றிரிபு. தேர்ச்சி-ஆலோசனை (ஆகுபெயர்) உரைத்தன - வினையாலணையும் பெயர். அறிதி, இ முன்னிலை விகுதி.

27. செறித்த - அடக்கிய. பொறி செறித்தலாவது - அரசர் ரகசியம் பேசுங்கால் தான் செவிகொடாமை கண்ணாற் பாராமை அரசன் விரும்பியதை நுகரக் கருதாமை முதலியன. பொருந்தலர் - சேராதவர்; பகைவர்; (வினையாலணையும் பெயர்; பொருந்து × அல் × அர்—அல் எதிர்மறை யிடைநிலை) செறிதருமாறு - மிகும்படி. அருவினைவாங்கு - அரிய காரியங்களைத்தழுவிய. ஒறுத்திடுவர் - தண்டிப்பர். அமயம் அறுதிபெற அறிந்து எனக் கூட்டுக.

28. உளத்தன - மனத்திலுள்ள குணங்கள்; (வினையாலணையும்பெயர்) தெளித்து - ஐயமறத் தெளிந்து; (தெளிந்து என்பது எதுகை நோக்கி வலித்தல் விகாரமாயிற்று) இற்றுரும் - இத்தன்

மைத்தாகும். (குறிப்புவினைமுற்று) அவி - உச்சிக்கொண்டையு மாம் - " அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங், கடுத்தது காட்டுமுகம்" "குறிப்பிற் குறிப்புணர்வாரை உறுப்பினுள் யாது கொடுத்துங் கொளல்" என்பன காண்க.

2. திருந்தார் - பகைவர்; என்றும் நன்னெறிப்படாதவர். (வினையாலணையும்பெயர்) மௌலி - கிரீடம், வடசொல். உரிஞ்சி - தோய்ந்து. வருந்தேல் வருந்தேல் - அடுக்குத்தொடர்; ஆற்றுதற் பொருளில் வந்தது. முருந்து ஏர் முறு வல் - மயிலிறகின் அடியை ஒத்த பற்களையுடைய தமயந்தி; (உவமத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித் தொகை.) முகம், ஈண்டு உடன்பாட்டுச் சொல்லை உணர்த்திற்று. அருந்தா வமுதம் - முன் உண்டறியாத தேவாமிர்தம்.

## 2. நளவெண்பா.

1. 'மங்கை சுயம்வரநாள் ஏழென்று வேந்தர்மேல் தூதோட விட்டு அறைகென்றியம்பினான் எனக் கூட்டுக.

வார்முரசம் - பெரிய முரசம்; வாரால் இறுக்கிய முரசம் என்றுமாம். கமுகின் கூந்தல் - கமுக மரங்களின் மடல்கள். கொழுந்து - அலைஉச்சி.

2. செந்து - மகரந்தப்பொடி. செய்யாள் - இலக்குமி. கந்து - யானை கட்டும் தூண். அரசர் விஷ்ணு அம்சமாதலால் 'செய்யாள் வளர்மார்பன்' என்றார். தலைவாய்க்கடை என்பது கடைத்தலை வாய் என நின்றது; இலக்கணப்போலி. தார்மார்பன் என இயையும். கோவேந்தன் - பீமராஜன். கிளை - கூட்டம்.

3. கோதை - கூந்தல், மாலையுமாம்; தமயந்திக்கு ஆகுபெயர். ஏதம் - குற்றம். காட்சியர் அறிவுடையோர். நளனது அரமனை வாசலை 'அடையாத வாயில்' என விசேடித்ததால் நளன் பகைவரச்சம் சிறிதும் இல்லாதவனென்பதும் காண்டற்கெளியன் என்பதும் பெறப்படும். காட்சி - தொழிற்பெயர். காண் - பகுதி,

சி விகுதி, ணகரம் டகரமானது விகாரம். வாயில் - இல்வாய் இலக்கணப்போலி.

4. விறல் - வலி. நாகம் - மலை; வடசொல். (அசைவற்றது) ஆர் -யார்; மரூஉ. (ஆல் - அசை) வேள் இலக்கணையாய் வச்சிராயுதத்தைக் குறித்தது. முற்காலத்தில் மலைகள் சிறகுகளை யுடையனவாய்ப் பறந்து வீழ்ந்து உலகை வருத்த அவற்றின் சிறகுகளை இந்திரன் வச்சிராயுதத்தால் வெட்டினுன் என்பது புராணகதை.

5. விரை - வாசனை. தாமம் - மாலை; (வடசொல்) சயம்வரம்—சுயம்வரம்; விகாரம். புரந்தரற்கு-இந்திரனுக்கு. சொல்;(ஆகுபெயர்) தவத்தோர்மன், நான்காம்வேற்றுமைத்தொகை. தவம் - தபஸ்.

6. மால்வரை - பெரிய மலைகள். கோல்வளை - அழகிய வளையலணிந்த தமயந்தி. (அன்மொழித்தொகை) கோல் - கோலம், அம், கடைக்குறை.

7. பைந்தெரியல் - பசுமையாகியமாலை;-தெரியல் காரணப்பெயர், பாவை-தமயந்தி; (உவமையாகுபெயர்) வருவானை-நளனை.

8. விண்ணவர் கோன். - இந்திரன். கோன் என்பதில் - ன் சாரியை. நேர்ந்தான் - உடன்பட்டான்.

9. தோகை - மயில்; மயில் போன்ற தமயந்தி (உவமை ஆகுபெயர்) ஆகம் - மார்பு; (இங்கே) மனம். கோது - சாரமற்ற பொருள். நளன் அதனுக உடன்பட்டமையால் தமயந்திமீது கொண்டிருந்த காதலை நீக்கினுன் என்பது கருத்து.

10. பாவில் - நெசவு பாவில். குழல் - அதனுள்ளே இரு பக்கத்தும் மாறிமாறிச் செலுத்தப்படும் கருவி. உழலும் - வருந்தும்- போலும் - ஒப்பில் போலி.

11. தலைநின்றேன்-சிறப்பாகப்பெற்றுநின்றேன் (ஒருசொல் நீர்மைத்து) அத்திருநகர் - அந்தக் குண்டினபுரி. காமநீராழி - ஆசைக்கடல்; (உருவகம்) ஆவது - குறிப்புவினையாலணையும் பெயர். அடக்கும் ஆறு (பெருகாமல்) அடக்கும் விதத்தை (அறிந்து)

12. கன்னிமாடம் - கலியாணமாகாத இளம்பெண்கள் வசிக்கும் அந்தப்புரத்தில் ஓரிடம். விஞ்சை - மாயவித்தை யாவனோ= ஓ - அசை. மற்றை இரண்டும் ஐயம். உள்ள + ஆ - உள்ளா ஆறு - று கெட்டது விகாரம் ஊசற்குழை ஊசலாடும் காதணி. வாள்நீர் வெள்ளம், என மாற்றுக. வாள் - வாளாயுதம் போன்ற கண்.

13. தொடை - மாலை; தொடுக்கப்படுவது; தொடு - பகுதி. ஐ - செயப்படுபொருள் விகுதி. இகழாது சூட்டுவாய் எனக் கூட்டுக. 'தொடையிற்றேன் தும்பிக்கே ஊட்டுவான்' என்று நளனைச் சிறப்பித்ததினால் அவனது பரோபகார குணம் விளங்கும்.

14. இயம்மரம் - வாத்தியங்களும் ஊதுகுழல்களும்; (உம்மைத்தொகை) மரம் கருவியாகுபெயர். வளை சங்கு (வளைந்திருப்பது) வயம் - வெற்றி - மரு. மருவு என்பதன் விகாரம்; (வினைத்தொகை) நினைகென்றாள் - வியங்கோள் ஈறு தொகுத்தல்.

15. போது - செந்தாமரை மலர் போன்ற. அரிக்கண் - செவ்வரிபடர்ந்த கண். (அரி - ரேகை.) மாதர் - கண்டாரால் விரும்பப்படும் அழகு. ஆதரித்தார் - விரும்பியவர்கள். இந்திரனுக்கு மாலை சூட்டவேண்டுமென்று கேட்ட நளன் ஒருகால் வாராது இருந்துவிடுவானோ என்ற ஐயத்தால் 'நீயும் எழுந்தருள்க' எனத்தனியே எடுத்துக் கூறினாள்.

16. திருமகள் - இலக்குமிபோன்ற தமயந்தி. திரு, அழகுமாம். நளனும் - உம், இசை நிறை; ஏனைய எண்ணுப் பொருளன. வன்மொழி - உடன்படாத கடின வார்த்தை.

17. அங்கி - நெருப்பு (அக்கினி) அமுதம் - உணவு. சங்கை அற - சந்தேகமின்றி. ஆகண்டலன் - இந்திரன். தருமன் - யமன். [வடசொற்கள்.] மற்றோன் - அக்கினிதேவன். இவ்வரமீந்த வரலாறு நைடதத்தில் சிறிது வேறுபட விரித்துக் கூறப்பெற்றுளது. பெற்றாய் - பெறுவாய்; துணிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாகக் கூறப்பெற்றது.

18. வயம் மருவுகின்ற மனம் - (தமயந்தி) வசமான மனம். சயம்வரம் - சுயம்வரம்; (திரிபு) கண்டதோர் சார்பு - ஏற்படுத்திய ஓரிடம். சார்பு தொழிலாகுபெயர்.

19. வையம் - பூமி. பொய்கை - மானிடர் ஆக்கா நீர்நிலை. கழி - சமுத்திரத்தில் கலக்கும் உப்பாறுகள். புள் - நீர்ப்பறவைகள். அன்றில் - நிலத்திலும் நீரிலும் வசிக்கும் ஓர் பறவை; இது ஆணும் பெண்ணும் சிறிது பிரியினும் பொறாது வருந்து மியல்புள்ளது; பகலில் இரைதேடுங்கால் அணுகப் பிரிந்திருக்கும். இராக்காலத்தில் கழுத்தோடுகழுத்தைப் பின்னிக்கொண்டு இரண்டும் ஒன்றென்னும்படி துயிலும். இதுபற்றியே அஸ்தமான காலத்தில் அதன் தன்மையை விளக்க "அன்றில் துணையிழப்ப, என்றார். துணை இழப்ப - இரண்டென்னும் தன்மை நீங்க; (அதாவது ஒன்றாக) செவ்வாய - சிவந்த வாயையுடைய; வாய குறிப்புப் பெயரெச்சம் வெற்பு - அஸ்தமனகிரி. இழப்ப என்ற செயவெனச்சம் நான்கும் காரணப் பொருளன.

20. பூசுரர் - பூமி தேவர்கள்; அந்தணர்கள் "ஒருகோடி பூதேவர்" என்றார் வில்லியும். பூங்குமுதம் - அழகிய ஆம்பற்பூ. காசினி - பூமியிலுள்ளவர்கள்; இடவாகுபெயர். முன்னிரண்டடியிலும் புணர்நிலை அணிகாண்க. தாமரை கண்விழித்தல்:- மலர்தல். கோதை - மாலையையுடைய தமயந்தி. புலர்ந்தது - விடிந்தது. அன்று - என்ற மென்றொடர்க் குற்றுகரம் அற்றை என வன்றொடராய் ஐகாரச் சாரியை பெற்றது. (நன்-சூ-184, 185)

21. முற்றியபின் - கழிந்தபின்; முடிந்தபின். விரை - வாசனை. வால்வளை - வெண்மையான சங்கு. கலந்து - சேர்ந்தொலிக்க வந்தார் என இயைக்க.

22. மன்றல் அம்தார் - வாசனைபொருந்திய அழகிய மாலை. குதட்டிய - மென்றும் மெல்லாமலும் உதப்பித்தள்ளிய. கார்நீலம் - கரிய நீலோற்பலப் பூக்கள். குறு விழி - கண்ணிற் கருவிழி. சிறு விழி - கடைக்கண்பார்வை; நுட்பமான பார்வை. நோற்றிருந்த - தவஞ் செய்திருந்த; நோல் பகுதி. சேய் - நளன்.

23. சித்திலத்தின் பைந்தோடு - முத்துப் பதித்த காதணி. நீலமணித்தோடாக - நீலரத்தினம் பதித்த தோடாக. சித்தம் வண்டின் மருங்கேவர, என இயைக்க. கேழ் - நிறம். தமயந்தியின் மை

நீட்டிய கண்களின் பிரகாசம் பக்கத்திலுள்ள காதணிகளிற் படுத லால் முத்துத்தோடு நீலரத்தினத்தோடாகத் தோன்றிற்று.

24. இயல் அணங்கு - அழகிய தெய்வப்பெண்போன்ற தோழி. இன்ன பரிசு என்று - இப்படிப்பட்ட தன்மையென்று. கொடிக்கு - தமயந்திக்கு; உவமையாகுபெயர்.

25. பூ வரைந்த குழல் - மலர் சூட்டிய கூந்தல். உளம் ஊசல் போல் அலையப் பெற்றாளென்க.

26. பூணுக்கழகளிக்கும் பொற்றொடி என்பதன் கருத்து. இயற்கை அழகுவாய்ந்த தமயந்தியின் உறுப்புகளைச் சேர்ந்த ஆபரணங்கள் அவ்வுறுப்புகட்கு அழகுசெய்ய இயலாது அவ்வுறுப் புகளின் அழகால் தாம் விளக்கமுறும் என்பதாம், "பொன்னழ கைத் தாமே புதைப்பார்போல்...மலரும் சூட்டினார்." என இவ் வாசிரியரும் "அணிகளைந்தழகுசெய்யும் அணங்கனாள்" எனப் பிறரும் கூறியவை காண்க. நாண் உக்கு - வெட்கம் கெட்டு

27. மரபு - குலம். கடிமாலை - சுயம்வரமாலை. விதியின் மன். னவன் - விதிக்கடவுள். (பிரமன்)

28. தேவர்களாயின், கண்ணிமையாது; கால் பூமியில் படி யாது; மாலை வாடாது, இவை உண்மையால் நளனைப் பிரித்தறிந் தாள். தாமரை நன்னுதல் அன்னாள் - இலக்குமியை நிகர்த்தவள்.

29. வன்மாலை - வலிய மயக்கத்தை. பொன் - இலக்குமி போன்ற தமயந்தி; ஆகுபெயர். அரசர் வன்மாலை சூட நளன் பொன்மாலை சூடினான் எனச்சமத்காரந்தோன்றக்கூறியது காண்க.

30. வெளுத்தது, வெட்கத்தாலென்க. ஒண் தாரை - ஒள்ளிய கூர்மை; கோமாலை வேல் - சிறந்த மாலையணிந்த வேலாயுதம்; கோ - சிரணமுமாம். குலமாலை - குலத்துக்குமாலை போன்றவள், இப்பாட்டில் சொற்பொருட்பின்வருநிலையணி காண்க.

31. மல்லல்மறுகு - (பல) வளங்களையுடைய தெரு. மட நாகு - இளமையான பசு. மழவிடை - இளங்காளை. செம்மாந்து - இறுமாந்து. மறுகில் புறப்பட்டான் எனக்கூட்டுக.

## 3. குசேலோபாக்கியானம்.

1. பூ+கதிர் - அழகிய கிரணங்களையுடைய சூரியன். பொற்ற புண்டரீகம் - அழகிய தாமரை. (வடசொல்) தீம்+கதிர் - இனிய கிரணங்களையுடைய சந்திரன் (ஆகுபெயர்) மை - மேகம். மஞ்ஞை - மயில்.

2. புனிறு+இளங்கன்று=மிக இளையகன்று. புனிற்றிளங் கன்று - மிகைச்சொல்; புனிறு - ஈன்றணிமை. ஒருவன் - ஒரு அன்பன். அறல்நசையுடையான்-நீர்வேட்கையுடையான். சேக்கை- சயனம்.

3. மிடியன் - தரித்திரன். சேமவைப்பு - புதைத்து வைத்த பொருள்; தொழிலாகு பெயர். பரிந்து-வருந்தி. சரிந்தபற்றினன்- அகப்பற்றுப் புறப்பற்று நீங்கியவன்; பற்றுச்சரிந்தவன் என்பது வடசொன்னடைபற்றி இங்ஙனம் வந்தது

4. எண் - தியானிக்கப்படுகிற. அனைக்கு - அன்னைக்கு, லோகமாதாவாகிய லெக்ஷ்மி தேவிக்கு. அனை, இடைக்குறை விகாரம். வலம், இடம் - வலக்கை, இடக்கை, (ஆகுபெயர்) கண்ணனை - கள்+நனை - தேன் பொருந்திய அரும்புகளையுடைய, துளவம் தாமம் - துளசிமாலை. கண்ணனை - கண்ணபிரானை. நாலாம் அடியில் மடக்கு என்னும் சொல்லணி காண்க.

5. கொடு - கொண்டு; விகாரம். நீத்தம் - வெள்ளம்; நீந்தப் படுவது; காரணப்பெயர். நீத்து - விட்டெழுந்து.

6. திலகம் - பொட்டு, மெய்ப்புளகம் - உடல் மயிர்சிலிர்த் தல். கூர்ந்த - மிக்க. (கூர் - பகுதி) உலகம், இட ஆகுபெயர். வாய்மை-சொல்.

7. வனம் - துளசிமாலை. முகமன் - உபசாரமொழிகள். வெருவுஇல் திருநாமம் - (பிறவித் துன்பத்தாலுளதாகும்) அச்சம் இல்லாதிருத்தற்கு (ஏதுவாகிய) திருநாமம். ஐந்தும் - ஐந்து இந்தி ரியங்களும்; (தொகைக்குறிப்பு.) பொலிகடதீபம் - விளங்குகின்ற குடத்திலிட்ட விளக்கு அசைவற்றிருந்தான் என்பது கருத்து.

8. பளிதம் - கருப்பூரம். ஏர் - அழகு. அண்ணல் - கண்ணன்; பண்பாகுபெயர். பவஞ்சம் - ப்ரபஞ்சம் என்னும் வடசொல் விகாரம். கஞ்சம்தார் - தாமரைப் பூமாலை. (கம் - ஜலத்தில் ஜம் - பிறப்பது) (தாமரைமலர் மாலை அந்தணர்க்குரியது.)

9. பூன்றதயை-பூரணகிருபை.

10. அறம் மறம் - புண்ணியபாவம். பாத்து - பகுத்தறிந்து. (மரூஉச்சொல்) வீயினும் - இறந்தாலும். (வீ - பகுதி) மேதையோர் - அறிவுடையோர். (மேதா வடசொல்) முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்னும் நான்கு பகுப்பையுடைய உலகம்; நானிலம்.

11. உம் - இழிவு சிறப்பு. ஓ - எதிர்மறை. அரிது அரிது, அடுக்குத் தொடர். ஏ, ஓ. இகழ்வின் குற்றத்தைக் காட்டும் இடைச்சொற்கள். எண்மை - சுலபம் (பண்புப்பெயர்) "பரீஇ உயிர் செகுக்கும் பாம்பொடும் இன்னா, மரீஇப் பின்னைப் பிரிவு" "பிரிவு செய்தா லரிதேகொள்க பேயொடு மென்னும் பெற்றி" என்னும் ஆன்றோர் வாக்குகளை ஈண்டு ஒப்பு நோக்குக.

12. இடித்துரைப்பார் - வற்புறுத்திக் கூறுவார்கள். இமையவர் - தேவர்கள். (கண்ணிமையாத விசேஷமுடையவர்) இருள் உலகம் - நரகலோகம்; இவ்வுலகமுமாம். அமைய - நன்றாக. அந்தோ-இரக்கப்பொருள் குறிக்கும் இடைச்சொல். க்ஷமை - பொறுமை; க்ஷமை என்னும் வடசொல் திரிபு. காண், முன்னிலை அசை. "நகுதற்பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண், மேற்சென்றிடித்தற் பொருட்டு" என்றார் திருவள்ளுவர்.

13. கூடுதற்கு..........படுநட்பு - சேரவொண்ணாத துர்ஜனர்உறவு. ஒன்றே - ஏ, பிரிநிலை உம் — எச்சவும்மை; சிறப்பும்மையுமாம். "பெரியவர் கேண்மை பிறைபோல" என்ற நாலடியாரையும், "நிறைநீர நீரவர்கேண்மை" என்ற திருக்குறளையும் இதனோடு ஒப்பிடுக.

14. வித்து ஆகும் - காரணமாகும், (தோறும் - காலப்பன்மைகுறிக்கும் இடைச்சொல்) (ஆல் அசை) "இம்மை அடக்கத்தை"

"கலைகடற்றன்சேர்ப்ப" என்ற முகற்குறிப்பு நாலடிச்செய்யுட்களின் கருத்தோடு இதனை ஒப்பிடுக. திக்கு - இடவாகுபெயர், (உம் முற்றும்மை) ஆயிற்றே - ஏ வினா.

15. மனைக்கிழத்தி - மனைக்குரியவள்; (மனையாள்) கிழத்தி என்பதில் கிழமை பகுதி. உஞற்றுவளே - செய்வாளா?. ஏகாரங்கள் வினா. "மனைத்தக்க மாண்புடையளாகி" "தற்காத்துத் தற்கொண்டாற் பேணி" என்ற திருக்குறள்களைப் பின்பற்றியது இச்செய்யுள்.

16. பைங்குதலை - இனிய மழலைச்சொல். (மழலை - நிரம்பா மென்மொழி) செயல்:ஈண்டுக் கல்விபயிற்றல். சிங்கல்அற - குறைவில்லாதபடி. (சிங்கு - பகுதி; தொழிற்பெயர்)

17. நானம் - ஸ்நானம். சந்தி - சந்தியாவந்தனம். மானம் - பெருமை. ஏகாரங்கள் வினா.

18. நீர் ஆர் - நற்குணம் மிகுந்த. நென்னல் - நேற்று; நெருநல், நெருநை, என்பவற்றின் மரூஉ. இருவேம் - எம், தனமைப் பன்மை விகுதி.

19. ஙள்ளார் நட்புச்செய்யாத பகைவர்; (வினையாலணையும் பெயர்,) அண்மை - சமீபம். விள்ளார்கள் - பிரியாதவர்கள்; சிநேகர், சேய்மை - தூரம். உள் ஆதவன் - (யாவராலும்) கருதப்படுகிற சூரியன். (ஆதப வடசொல்) நெருஞ்சி - ஓர்வகைப்பூண்டு; இது சூரியகிரணத்துக்கெதிரே மலரும் இயற்கையுடையது; இதனை "........பாழூர் நெருஞ்சிப் பசலைவான்பூ, ஏர்தருசுடரின் எதிர்கொண்டாஅங்கு" என்ற புறநானூற்று 155-ம் செய்யுளடிகளால் நன்குணரலாம். இப்பூண்டின் இவ்வியற்கையைக் குறுந்தொகை 315. அகம் 336. சீவகசிந்தாமணி 461 செய்யுட்களும் உணர்த்தும். இச்செய்யுள் எடுத்துக் காட்டுவமையணி.

20. அதிகமழை - அதிவிருஷ்டி, மழையின்மை - அநாவிருஷ்டி. விட்டில் - வெட்டுக்கிளி; பயிர்களை அழிப்பது. விருகம் - மிருகம். நாட்டுக்கு வரும் கேடுகளை "மிக்கபெயலோடு பெய

வின்மை எவி விட்டில் கிளி யக்கணரசண்மையோ டாறு" என்ப தால் அறிக.

21. பந்தனை - ஆசையாகிய கட்டு; பாசம். (Tie, Bond) பக்கணம் - பக்ஷணம். க்ஷகாரத்துக்குத் தமிழில் ககரம் வந்தது.

22. வாளா - சும்மா. எற்கு - எனக்கு; விகாரம். ஓகாரங்கள் எதிர்மறை - சொல் அசை.

23. அளித்தி - கொடு. மலர்த்தி - விரித்து. காடி - புளிங்காடி நீர்.

24. மலிதரும் - நிறைந்த. போகட்டு - போட்டு. மாது -ஓ; அசைகள். பெருமானுக்கு அன்போடு சமர்ப்பிக்கப்படுவது எதுவேயாயினும் இனிது.

25. சுவைத்து - சுவையையுடையது. அளை - தயிர்; வெண்ணெய்.

26. முட்டை - பக்குவமாய் விரியாது அரிசியாய் நிற்கும் அவல்; தவிடுமாம். குளம் - வெல்லம்; சர்க்கரை. அவல் பெரும்பாலும் குழந்தைகள் உணவு என்பது தோன்ற 'கொன்னும் வாய் செறிப்பின்' என்றார்.

27. கிளர்ந்திருப்பது - சொல்லியிருப்பது. எட்டு - எடு, இதழ்; தன்னொற்று இரட்டித்தது தொங்கல்; தொங்குவது காரணப்பெயர்.

## 4. தேம்பாவணி.

### (இயேசுநாதர் பிறப்பு.)

1. சாதியினால் நிகர்க்கரியதாள் - செண்பகமலரால் நிகர்க்காத பாதம். தகுதி ந(ல்)லாள் - மரியம்மை. வீதியினால் - வழி நடந்து. வெஃகி - விரும்பி. வெயில்மிடைந்த ஓதி - ஒளிமிக்க (தெளிந்த) ஞானம். உயர்ந்தோன் - சூசை. ஒதுங்கும் தன்மைத்து- ஒதுங்கியிருக்கும்படியான. உறையுள் - ஒரு மனையில் சிறிது (இடத்தை) அவர். முகத்தில்-மலர்ந்த முகத்தோடு. உறவோர் - உறவின்முறையாரை. துருவினன் - தேடினன்.

2. எஞ்சா - குறையாத. காஞ்சிரங்காய் - எட்டிப்பழம். விஞ்சு எஞ்சா - மிகுதிகுறையாத. (மிக்க) வினை - துன்பத்தை. காரணம், காரியமாயிற்று. மஞ்சுஎஞ்சா - வடிவுகுறையாத. வறியர் - தரித்திரர். நெஞ்சுஎஞ்சாத்திரு - நற்குணச்செல்வம்.

3. நவை - பாவம். தான் - ஆண்டவன் விதி - கட்டளை. எழ - பிறக்க. பூஉயர்த்தோன் - பூங்கொடியோன். (சூசை) அரற்றி - அழுது.

4. வரைபகிர்உறுப்பு - மலையிற் பிளந்த உறுப்புப்போல். பெயரியகல் - பேர்ந்தகல். துன்இடம்-தங்குமிடம். மயரியஇடம்-வருத்தம் பொருந்தின இடம். முழை - குகை. அரோ - அசை.

5. கலங்கெழு - கலங்கி எழுந்த (கடல்) விகாரம். மனுமிடை - மனிதர் நெருங்கி. புழுங்கலாயினும் - வசிக்க இடமில்லையாயினும். வெறுத்த - எல்லாரும் வெறுத்த.

6. இலயை மூன்றினும் - பிள்ளையைப் பெறுமுன்னும் பெறும்போதும், பெற்றபின்னும்(முக்காலத்தும்.) இழிவில்கன்னி அழியாதகன்னி. இத்தன்மை பிறபெண்டிர்க்கு அருமையாகலின் "உலகமூன்றினும் உவமை நீக்கிய" என்றார். அலகு இல் - அளவில்லாத. மூன்றினுள் - கர்த்தாவாகிய மூன்றாட்களில் அவர்கள் - பிதா - மகன் - பரிசுத்த ஆவி (The Holy Ghost) எனப் படுவர். முச்சுடரினும் - சூரியசந்திர அக்கினியினும். திறப்ப — விளங்க.

7. வாய்ப்படா - வாசலைத்திறவாமல். பளிங்கின்வாய்நுழைகதிர்போய் - பளிங்கினிடத்தில் நுழைந்த கதிர் புறப்பட்டுப் போய். படா ஒளிபடரும் போன்று - படாத காந்தியை விரித்ததுபோல. கன்னிநூக்கிலாது - கன்னியை அழியாமலும் (நூக்குதல் அழித்தல்) அ + மலன் — குற்றமற்றவன்; கர்த்தர்.

8. வைகல் - நாள்; (தேதி) ஐ + ஐந்து - இருபத்தைந்து. ஆதிநாள் - ஞாயிற்றுக்கிழமை. ஆதிநாதன் - இயேசுவை. நல்கினாள் - பெற்றாள்.

9. பாய்ந்தவான் தரு - வானிற் பாய்ந்த மரங்கள். பருவம்-பழுக்குங்காலம். ஈய்ந்த - தந்த. (ஈ பகுதி. ய் விரித்தல்) கனியொடு (மலர்களைப்) பூத்தலும் என்க. வேய்ந்த நாயகன் - மனிதனாய்த் தோன்றின கடவுள். நன்றியால். - நன்மையால் சிரித்தது போலத் தோன்றும் - (மரங்கள் பூத்துத் தோன்றுவது நாயகன் விளைத்த) நன்மையால் மகிழ்ந்து சிரித்ததுபோ லிருந்தது.

10. சொக்கு - அழகு; வடிவு. அளா உரு - (அளாவு) கலந்த உருவம். (விகாரம்) மிக்கயேல் ஒடு காபிரியேல் - Michael and Gabriel தேவதூதர்.

11. பொதிர்...மணம்போல் - தான் குறைபடாமல் பூமுகை வாசனை விட்டதுபோல். மகவு - பிள்ளை; (உரிச்சொல்) ஈன்றனள் - (கன்னியழியாமல்) பெற்றனள். சேயோடு - குமரன் கண்களோடு கண்கள் கலந்தகால் - தனது கண்கள் கலந்து பார்த்த போது. வெம்சுடர்காண் - சூரியனைக்கண்ட. முழுஇந்துஎன-பூரணசந்திரன்போல; இன்பமுகத்தோடு விளங்கினாள் என்க.

12. காந்தள் - கார்த்திகைப்பூ; செங்காந்தள். ஏந்த - ஏந்திய; உயர்ந்த. நீவி - தடவி. ஆய்ந்தநூல்கடந்த ஆர் உணவு - ஆராய்ந்தடைந்த கல்விகளைக் கடந்த ஞானம். கடந்த + ஆர் - உணர்வு கடந்தார்; உணர்வு-தொகுத்தல்.

13. தெருள் - தெளிவு. திரை - கடல். (ஆகுபெயர்) உண்டி-உண்களை. பொழிந்தனன்-தருகின்ற நாதன், மருள் சுரந்த வடுக்கெட - மயக்கத்தால் வந்த பாவங்களை நீக்குதற்கு. அருள்சுரந்த முது-அன்பு நிறைந்த பால். தாய்தர நுங்கினான் - (தாய்கொடுக்க) உண்டான்.

14. இந்துநேர் - பிறையைஒத்த. மீன்கண் - விண்மீன் போன்ற கண். இணைடநேர்முகம்-தாமரைமலரை ஒத்தமுகம். நீர்மையால் - தன்மையால். கந்தம்நேர் நளிர்தாது நேர் உடல் - வாசனை பொருந்திய குளிர்ந்த மகரந்தத்தையுடைய (மலரை) ஒத்த உடம்பு. நாதன் - தேவகுமாரன். கன்னி - கன்னித்தாயின், அம்புயச்சந்த நேரிய கையால் - சிறந்த கைத்தாமரையின் மேல்

தாம நேரியமுத்து என - ஒளிவிட்டமுத்தின் சாயலாக. சூசை தேர நோக்கினன் என்க. சிந்து - இன்பக்கடல். மூழ்கு-மூழ்கி. தேற - உண்மை தெளிய. (தாமரை முத்துப் பிறக்கும் இடங்களில் ஒன்று.)

15. நோக்கில் நீட்டலும் - கண்ணில் ஒற்றி. நீர் - கண்ணீர். நாண்மலர் - புதியமலர்போன்ற - கழல் - திருவடி (ஆகுபெயர்) சென்னி - சிரசு சித்தம் முற்றலும் - மனம் ஓங்கி.

16. அரும்பும் தென்காலே - வீசுகின்ற தென்றல் காற்றே! அரும்புதி - வீசு. துளித்த - துளியாய். நானத்தேன் - வாசனைத் தேன். அரும்பு - வீசு. விளித்த - அழைத்த. நாகு மாங்குயில் காள் - இளங்குயில்காள் (நாகு இளமைப்பெயர்) தேன்பாவை - தேன்போன்ற இசைப்பாட்டை. நான்களிய - நான்களிகூர. அன்பு துயிலா - அன்பு குறையாமல்.

17. கண்பட்டு - கண்மூடி. கருணாகரன் - கிருபைக்கு இடமானவன். உளையும் - வருந்தும். பொருவா - பிறங்காத. மண்பட்டு - பூவுலகத்தைச்சூழ்ந்து. மருள் - மயங்குகின்ற. எண்பட்டு - எண்ணமுடியாது மேம்பட்டு.

18. வான்தோய் - வான்வீட்டிலுள்ள. நயங்கள் - இன்பங்கள் - நீத்து - தீர்த்து. சேண்மேல் - வான்மேல். நான்தோய் உணர்வின் - நான் ஆராய்ந்த உணர்வின். நாளென்றாக - என்னைப் போலாக. உடல் கொண்டஅன்பின் - அன்பின் தன்மையைக் (கண்டுகொள்ள) உணர்விட்டு எனக்கு - உணர்வினை எனக்குத்தந்து.

19. நூல்வாய்ப் புகழ்மேல் - நூலின்படியே சொன்ன புகழ்ச்சியின்மேல். மருந்தின் கனிவாய் - மருந்தினுங்கனிவாய் நீ. வேல்வாய் - வேல்முதற் பல கருவிகளால். குருதிபாய்ந்து இறப்பவோ - திருஇரத்தத்தைச்சிந்தி இறக்கவோ. மெய்கொண்டாய் - இவ்வுடலைக்கொண்டாய். கால்வாய் இலைப்போல் தியங்கிய - காற்றிற்பட்ட இலைகளாடின தன்மையில் சுழன்ற.

20. ஆழ்ந்தன்று ஆழ்ந்தான் - அமிழ்ந்தி முழுகினான். இறையோன் - கர்த்தர். குன்றாத் தயைக்கடல் - குறையாத கிரு பாசாகரம். சிறிது ஓர்கால் - சிறிதுநேரம்.

21. துறந்தாய் - அகற்றினாய். துகள்பூட்டிய - (நாங்கள் செய்த) பாவமானது அடைத்த. வீட்டு உயர் வாயில் - மோட்ச வாசலை. திறன்செய்து - வல்லமையும் தயையுங் கொண்டு; இவற்றை யாவரும் அறிய இரங்கிச்செய்யாயோ என்க.

22. துஞ்சும்தன்மைத்து - தூங்கின தன்மையைக் காட்டி; விஞ்சும் தன்மைத்து வளன் ஓங்க - மிகவும் [சூசை] மனதிலோங்க, விழிவிழித்தான் - தன்திருவிழியை விழித்தான். ஒருவன் சிறுமை யைக்கொண்ட தன்மைக்கு உதவியைச் செய்யும் கர்த்தா, இங்கே பிறந்தமைந்த செய்தியை உலகத்தார்க்கு உணர்த்த அஞ்சி எதிரே வணங்கி நின்றவராகிய வானவர்க்கு வாக்கினால் உரையாமல் அதனை உணர்த்த மனத்துள்நின்று ஏவினான் என்பது பின்னி ரண்டடியின் பொருள்.

# VI. பல்துறைப் பகுதி.

## 1. அரசியல்.

### (தசரதன்.)

1. எவர்க்கும் அன்னான் அன்பில் தாய் ஒக்கும், நலம் பயப் பில் தவம் ஒக்கும் என்று இயைக்க. ஏனையவற்றையும் இவ்வாறே இயைக்க. ஒரு - ஒப்பற்ற. நோய்ஒக்கும் என்னின் மருந்து ஒக்கும். (தண்டஞ்செய்தலால்) நோயை ஒப்பானாயின் (தண்ணளி செய்த லால்) மருந்தையும் ஒப்பான். அரசர்க்குரிய அளியும் தெறலும் உடையான் என்பது கருத்து. நுணங்கு கேள்வி - நுண்ணியகல்வி.

2. இரப்பார்கடலை ஈதலாகிய புணையால் கடந்தான் என்க. ஒழிந்தவைகளுக்கும் இவ்வாறே கொள்க. அளக்கர், வேலை, பௌவம், என்பன கடல் என்னும் ஒருபொருளன. திருவிற் றொடர் - செல்வத்தால் தொடரப்படுகின்ற. போகம் - இன்ப

3. எய்யென எழுபகை - விரைய எழுகின்ற பகைவர். எய் - ஒலிக் குறிப்புமாம். மொய் - வலி; போருமாம். முழவு - மத்தளம். ஓம்பும் - காக்கின்ற. செய் என (விளைந்துள்ள) வயலினைப்போல. வறிஞன் விளைவினை ஆவலோடும் அவதானத்தோடும் காப்பது போல வையகமுழுதும் காப்பான் என்க. (செல்வன் அதனை அவ்வாறு காப்பதில்லை) "வறிஞனொரு செய்யாளன் அச்செய்விளையக் காக்குமது போல" என்றார் சிவப்பிரகாசரும்.

4. வண்கை - கொடைக்கை. கலி - வறுமை. வைவேல் - கூரியவேல். தெவ்வர் - பகைவர். தேர்த்தொகை - தேர்த்திரள். கலைக்கு இடனாய் - கலைகளுக்கு உறைவிடமாய். கடிமார்பன் - நோக்கிய கண்களை வேறுசெல்லாது பிணிக்கும் புதிய மார்பன். கடிமார்பன் கலைக்கிடனாய்க் கலிமாற்றித் தேர்த் தொகை மாற்றினான் எனக்கூட்டுக.

5. கோதை, நித்திலம்=மலர்மாலையும் முத்துமாலையும்; உம்மைத்தொகை. குடை - குடையால் ஒப்ப - (எல்லார்க்கும்) ஒரு தன்மையாக. நிழற்றலால் - நிழல் செய்தலால் தங்கிய - வாழ வேண்டி; (செய்யிய வென்னும் வினையெச்சம்) காதலால் - (சச்சந்தன் மேல்வைத்த,) அன்பினால். "குடிதழீஇக் கோலோச்சுமாநில மன்னன், அடிதழீஇ நிற்கு முலகு" என்றார் திருவள்ளுவர். இவ்விரண்டு செய்யுளாலும் சச்சந்தனது அளியும், (கிருபை) அழகும், கொடையும், வீரமும், கல்வியும், முறைசெய்தலும் கூறினார்.

6. தருமன் - தருமதேவதை. தண்ணளியால் - உலகை நிழற்றலாகிய தண்ணளியால், தருமன் என்க. ஈகையால் - கலிமாற்றின ஈகையால். வருணன் என்க. கூற்று - யமன். அருமையால் - கலைக்கிடமாகிய அருமையால். வாமன் - அருகன். கணை ஐந்து - பூவாளி ஐந்து. திருமகன் - காமன். மன்னன் - சச்சந்தன்.

7. ஏனமன்னர் - மற்ற (பகை) அரசர். செற்ற - அழித்த. வேல் + தானை = வேற்றானை. தானைமன்னரில் - படையுடைய (சச்சந்தன் மரபிலுள்ள) மன்னர்களுள். இமில் ஏறு - இமிலுடைய காளை. தேனை - தேன் ஐ-ஐ அசை. தேன் இன்சொல்லுக் குவமை. வானம் - சுவர்க்கம்.

(நளன்)

8. தளைஅவிழ் - (மொட்டா யிருக்கிற) கட்டு அலர்ந்த-களைகண் - புகல்; ஆதாரம். (இது ஒரு சொல்; துன்பத்தைக் களை யும் இடம் எனப் பொருள் கூறலுமாகும்) நாமவேல் - (பகை வருக்கு) அச்சம் (தரும்) வேல். நாம் உரிச்சொல்)

9. ஒன்னலர் - பகைவர்; (ஒன்றலர் என்றதின் மரூஉ; வினை யாலணையும் பெயர்) உரிஞ்சு - தேய்க்கும். கல்+நவில் - கல் லென்று சொல்லத்தக்க.

10. திங்கள்அயகவிகை - அழகிய சந்திர வட்டக்குடை. திகிரி- (ஆக்ஞா) சக்கரம். மங்குலின் - பிரதியுபகாரம் வேண் டாத) மேகம்போல்.

11. அருள் - பிறர் துன்பம் நீக்கக்கருதும் இரக்கம். உறை யுள் - உறைவிடம்; வாசஸ்தானம். அறத்தின்வேலி - அறமாகிய (பயிருக்கு) வேலி. கல்விக்கடல் - வித்யாசாகரம். எரி - அக் கினி; ஒளி. அலங்கல் - மாலை. இவைகள் உருவகம்.

## 2. கையறுநிலை.

கையறுநிலை துன்பத்தால் செயலற்றதன்மை.

விபீஷணன் புலம்பல்.

1 சனகி - சானகி; சனகன் மகள். (தத்திதாந்தம்) உண் ணக்கொல்லும் நஞ்சினும் பார்க்கக் கொல்லும் நஞ்சு பெரிதாக லின், சனகியை நஞ்சாக்கிப் 'பெருநஞ்சு' என்றார். இராவணன் அழிவிற்கு அவன் சானகியைக் கண்டு கொண்ட காதலே கார ணம் என்பதனை இங்ஙனம் கூறினார்.

2. ஒருவன் மேல் - இராமபிரான்மீது. உயிர்ஆசை - உயி ரிடத்துப்போல ஆசைவைத்துள்ள. ஆசைக்கரி இரிய - திக்கஜங் கள் (பயந்து) ஓட. புருவம் பேர்த்தோய் - (கோபித்துப்) புரு வம் நெரித்தவனே. (கோபத்தால் புருவம் மேலேறல் இயல்பு) 'பேராசை பேர்ந்தாசை' மடக்கு.

3. மன்றல் - வாசனை. மலரான் - பிரமன். வடிமழுவாள் படையான் - கூரியமழுவாயுதமுடைய சிவன். ஈந்த வரங்கள் என மாறுக. ஒன்ற(ல்)லாதன - பல. அவன்நாடு - பரமபதம்.

4. வீரநாடு - வீரசுவர்க்கம். விரிஞ்சன் - பிரமன். பேர - பெரிய. பிஞ்ஞகன் - சிவன். புரம் - சிவலோகம். ஆர் + அண்ணு = ஆரணு! மாரனூர் - காமன். ஈற்றடி இராவணனது மன்மதோபாலம்பனம், சந்திரோபாலம்பனங்களைக் குறித்தது.

5. கொல்லாத மைத்துனன் - கொல்லக்கூடாத மைத்துனன். (சூர்ப்பணகையின் கணவன்) இதழ்அதுக்கும் - (வைரத்தால்) உதடுகடிக்கும். பாவி - சூர்ப்பணகை. நல்லாரும் தீயாரும் துறக்கத்தார் நரகத்தார் எல்லாரும் நம்மோடு பகைஞர் எனப்பிரித்துக் கூட்டுக. எளியை - தனியை.

6. போர்மகள் - வீரலக்குமி. பணையிறுத்த - தந்தத்தை ஒடித்த. பணைத்த - பருத்துயர்ந்த.

7. வெள்எருக்கு அம்சடை முடியான்-வெள்ளெருக்குமாலை அணிந்த அழகிய சடைமுடியுடைய சிவன். வெற்பு - கயிலாயமாலை. உடலில் சிறிதும் இடமின்றி இராமபாணம் பாய்ந்திருப்பதைக்கண்டு உயிரைத் தேடியோ காதலைத்தேடியோ அது தடவிப் பார்த்தது' என விகற்பித்து வினவினள்.

8. காந்தையர் - பெண்கள். பணி - கட்டளை. புரந்தரனூர் - இந்திரன். இவை அனைத்தும் சேர்ந்து தேவர் பகைவனை இராவணனுக்கு அழிவைத் தந்து தேவர்கள் தவப்பேரின்பமாய்ப் பரிணமித்ததென்பது கருத்து.

9. அன்னூர் ஆர், என மாறுக. கண் - கணு. வேழவில்- கரும்புவில். இலக்கு - அம்பெய்யுங்குறி; ஆகுபெயர். மனித்தனூர் - மனிதர். [இராமலக்ஷ்மணர் விரித்தல்.]

## 3. வீரத்தாய்மார்.

1. இவள் என்றது, அலங்கரித்து மகனைப் போர்க்கனுப்பும் தாயை. மூதுஇல் மகளிர் - பழைய மறக்குடியின் மகளிர்; கற்றோன்றி மண்டோன்றாக் காலத்துத் தோன்றிய குடியாகலின் 'மூதில்' எனப்பட்டது. இவள் தன்னை - இவள் தலைவன். நெருநல் - நேற்று. செரு - யுத்தம். பெருநிரை - பெரியபசுக்கூட்டம். விலங்கி - தடுத்துமீட்டு. ஆண்டுப்பட்டனன் - அங்கு இறந்தனன்.

செருப்பறை - யுத்தமுரசு. வெளிது - வெள்ளாடை. (குறிப்பு வினைப்பெயர்) உடீஇ - உடுத்து. பாறுமயிர் - விரிந்துகிடந்த மயிர். நீவி - தடவி. விடும் - அனுப்புவாள்; (செய்யுமென்முற்று.)

2. அழிந்து மாறினன் - இறந்தான். உடைந்தனன் - தோற்றனன். சினைஇ - கோபித்து. பெயரா - பெயர்த்து; (உடன்பாட்டெச்சம்) செங்களம் - (உதிரத்தால்) சிவந்தபோர்க்களம். காணூஉ - கண்டு உடனே. (செய்யூஉஎன் வாய்பாட்டெச்சம்) படுமகன் - இறந்த மகன். "ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச் சான்றோ னெனக்கேட்ட தாய்" என்ற திருக்குறளை ஈண்டுக்கருதுக.

## 4. வஞ்சினக்காஞ்சி.

நகுதக்கனரே - நம்மாற் சிரிக்கத்தக்கவரே. (ஏ - பிரிநிலை) நாடுமிக்கூறுநர் - இவன் நாட்டைச் சிறப்பித்துக் கூறுவர். இளையன் - சிறுவன், (இவை தன்னைப்பகைவர் இழித்துக் கூறியனவாகப் பாண்டியன் சொன்னது) உளைய - வெறுக்கும்படி. படுமணி - ஒலிக்குமணி. இரட்டும் - ஒன்றோடொன்று மாறி ஒலிக்கும். பா அடி - பரந்த அடிகளையும்; பணைத்தாள் யானை - பெரிய கால்களையும் உடைய யானை. உறு துப்பு அஞ்சாது - மிக்க வலிக்குப் பயப்படாது. உடல் சினம் - மாறுபடும் கோபம். செருக்கி - பெருகி. சிறுசொல் - புன்மொழி. அருஞ்சமம் - அரிய போரில். (பகைவரது முரசத்தை யுத்தத்தில் கைப்பற்றுதல் வீரச்சிறப்பு) என்நிழல் வாழ்நர் - எனது (குடை) நிழலில் வாழ்கின்ற குடிகள். செல் நிழல் - வேறு சென்றடைதற்குரிய நிழல். (ஆதாரம்) கேள்வி - நூல் அறிவு. மாங்குடிமருதன் - இப்பாண்டியன் அவைக்களத்திருந்த நல்லிசைப்புலவர்; இவன் மீது 'மதுரைக்காஞ்சி' என்னும் பாட்டை இயற்றியவர். நிலைஇய - நிலைபெற்ற. நிலவரைபாடாதுவரைக - என்நாட்டெல்லையைப்பாடாமல் நீக்கட்டும். புரப்போர் புன்கண்கூர - என்னால் காத்தற்குரிய சுற்றத்தார் வருத்தமிக. இரப்போர்க்கு ஈயா இன்மை - யாசகர்கட்குக் கொடாத வறுமையை. யான் உற - நான் அடைவேனாக.

வேந்தரைத் தாக்கி அகப்படேனாயின், கோலேனாகுக; இன்மையானுற; என் நிலவரைபுலவர் பாடாது வரைக; என மாறிக் கூட்டி முடித்துக்கொள்க.

# VII. வருணனைப்பகுதி.

## 1. பாண்டிநாடு.

1. அமுது உறழ் - அமிர்தத்தை ஒத்த. ஐய - நுகர்தற்கினிய. கரை அரும் பொருள் - அளவற்ற பொருள்கள். படாமல்: உண்டாகாமல். இமிழ் கடல் வரைப்பு - ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த உலகம். எண் (மை) பொருள் - எளிதாய்க் கிடைக்கும் பொருள். எள்ளி - இகழ்ந்து. தமிழ்ச்சங்க மிருந்த பெருமையால், "தமிழ்முதல் பிறக்கும் நாடு" என்று சிறப்பித்தார். தயங்கும் - விளங்கும். தமிழும் முத்தும் சந்தனமும்தென்றலும் பாண்டியநாட்டுக்குச் சிறப்பாக உரியவை என்றவாறு. "........இவனே, நெல்லும் நீரும் எல்லார்க்கும் எளியவென, வரைய சாந்தமும் திரைய முத்தமும், இமிழ்குரல்முரசம் மூன்றுடனாளும், தமிழ் கெழுகூடல் தண்கோல்வேந்தே" என்ற புறநானூற்று 58-ம் பாடற்பகுதியைப்பின்பற்றி எழுந்ததாகும்; இது.

2. பொதிஇல் - பொதிகை மலை; தேவரெல்லாம் கூடிப் பொதிதற்கு இடமானது. நதி - தாம்பிரபருணி.

3. வெம்மை - மழைபெய்யா வெம்மை. விளைவு - தானியாதிகள்; ஆகுபெயர். அஃகினும் - குறைந்தாலும். கோல் - செங்கோல். கொடி - வளைந்து; (கொடுங்கோலாய்) செம்மை-நீதிநெறி. சிதைப்பினும் - வருத்தினாலும். தம்மை மாறியும் - தங்களை விற்றும்; தருமம் அந்நாடு புரிவது, எனக்கூட்டுக.

4. நந்து - சங்கு - இன், சாரியை. குவிமொட்டு - மலரா அரும்பு; குவி வினைத்தொகை. பந்தல் பந்தர்;லகரத்துக்கு,ரகரம் போலி. செம்மற்று - சிறப்புடையது; குறிப்புவினைமுற்று. நகை - பிரகாசம். பாண்டியநாடு செம்மற்று எனக்கூட்டுக.

## 2. சேரநாடு.

5. அள்ளல் பழனம் - சேற்றையுடைய வயல்கள். பார்ப்பு ஒடுக்கும் - குஞ்சுகளை அணைக்கும்; (பார்ப்பு மரபுப்பெயர்) கவ்வை- துன்பத்தாலுண்டாகும் பேரொலி; அரோ, அசை. நச்சு - நஞ்சு; விகாரம். இலைவேல் - இலைவடிவினதான வேலாயுதம் கோதை- சேரன். இச்செய்யுள் மயக்கவணி.

## 3. சோழநாடு.

6. போர் - கதிர்ப்போர்; (குவியல்) நாவல் - கடாவிடுவோர் சொல்லும் சொல். (ஓ - அளபெடை) ஓதை - ஓசை: வடசொல் விகாரம். கிள்ளி - சோழன்.

## 4. கோசலநாடு.

7. தண்டலை - சோலை; குவளை - நீலோற்பலப்பூ. திரை- (தடாகத்தின்) அலை. எழினி - திரைச்சீலை. தேம்பிழி - தேன் போல் இசையை வெளிப்படுத்துகின்ற. மகரயாழ் - யாழ்விசேடம். மருதம் - மருதநிலமாகிய அரசன். மாது, ஓ - அசைகள்.

8. சேல்உண்ட -கெண்டை மீனை வென்ற. மால் — பெருமை. நளினப்பள்ளி — தாமரைச்சயனம். மழலைப்பிள்ளை -அன்னக் குஞ்சுகள். மேதி -எருமை உள்ளி - நினைந்து. அன்னக் குஞ்சுகள் பாலுண்டு துயிலத் தவளைகள் தாலாட்டுகின்றன. பண்ணை - மருத நிலம்.

## 5. ஏமாங்கதநாடு.

9. தெங்கின் பழம் - தேங்காய். வீழ - வீழ்தலால்; காரண காரியப் பொருளில் வந்த வினையெச்சம். நெற்றி - உச்சி. தொடை- பாளை. வருக்கை - பலாப்பழம்; ஆகுபெயர். போழ்ந்து - பிளந்து. இசையால் - கீர்த்தியால். திசைபோயது - திசையிலுள்ளவர்களெல்லாம் அறியப்படுவது. பழம் விழுதலாலே கீறிப்போழ்ந்து சிதறிச் சிந்தும் ஏமாங்கதமென்று பெயர் கூறப்பட்டு இசையாலே திசை போயதோர் நாடுஉண்டு என்க. கீறி முதலிய எச்சங்கள் தன்வினை. வீழ, அப்பழம் எனக்கூறி இவ்வெச்சங்களைப் பிறவினை ருளாக்குவதும் பொருந்தும்.

## 6. நிடதநாடு.

10. வள்ளம் - கிண்ணம். பாண் - பாட்டு. மிழற்றும் - பாடும். கண்படுக்கும் - நித்திரைசெய்யும்; ஒரு சொன்னீர்மைத்து. பணிலம் - சங்கு. உயிர்க்கும் - பெறும். பொதும்பர் - சோலை. அகவும் - கூவும் ; ஆடும்.

11. கண் - கணு. தயங்கி - (கலந்து) விளங்கி. விள் ளும் - மலரும். குமுதம் - ஆம்பல்பூ; இது சந்திர கிரணத்தால் மலர்வது.

## 7. திணைமயக்கம்.

12. அஃதாவது இரண்டு நிலங்கள் அணுகவிருப்பதால் அந் நிலப்பொருள்கள் ஒன்றோடொன்று கலத்தல். அலைக்காகம் - கடற்கரைக்காகம். அரக்கர் கோமான் - அரக்கர் தலைவன்; இரா வணன். சிலை - வில். தாசரதி - இராமன். மனை - சீதாபிராட்டி (இடவாகுபெயர்) வங்கம் - கப்பல். மந்தி - குரங்கு. நெய்தலும் (கடலும், குறிஞ்சியும் (மலையும்) மயங்கியது. குரங்கும் பலாப்பழ மும் மலைக்குரியன. காக்கையும் கப்பலும் கடலுக்குரியவை.

13. ததைந்து - நெருங்கி. தூறுசெய்ய - புதராகவிருக்க. எண்கு - கரடி. கறிதாய் - (மலையிலுள்ள) மிளகுக் கொடிகள் தாவி. அரக்கன் - இராவணன். வெள்ளிமலை - கைலாய மலை. வெரீஇ - பயந்து. (சொல்லிசை யளபெடை) கற் றை - தொகுதியான. வார் — நீண்ட. சடைப்பெருமான் - சடை யுடைய சிவபெருமான். அங்கண் - அவ்விடத்தில். முல்லைத்தூறு கயிலாய மலைக்கும் கொன்றை சிவபெருமானுக்கும் மிளகுக்கொடி உமாதேவிக்கும் கரடி இராவணனுக்கும் உவமை. முல்லையும் (காடும்) குறிஞ்சியும் (மலையும்) மயங்கியது; முல்லையும் கொன்றை யும் முல்லை நிலத்துக்குரியவை; மிளகும் கரடியும் குறிஞ்சி நிலத் துக்குரியவை.

## 8. மதுரைமாநகர்.

14. நிறை - நிறுக்கும் பொருள். புலம்கோல் - அறிவாகிய துலாக்கோல். தூக்க - நிறுக்க. வாட - (நிறை) குறைய. தென்

னவன் - பாண்டியன். நான்மாடக்கூடல் நகர் - நான்கு மாடங்கள் கூடிய மதுரை நகர். (நான்கு மாடங்கள் கன்னி, கரியமால், காளி, ஆலவாய் என்னும் கோயில்கள்) இப்பாடலின் சொல்லும் பொருளும், "உலகு மழிசையு முள்ளுணர்ந்து தம்மிற், புலவர் புகழ்க் கோலாற்றூங்க, - உலகுதனை, வைத்தெடுத்த பக்கத்து மாசீர் மழிசையே, வைத்தெடுத்த பக்கம் வலிது, என்று திருச்சந்த விருத்தத்தில் வந்துள்ளமை காண்க: (திருவால நகா. க.) (திருவிளை தலவி-20) (காஞ்சி திருநக-க) என்பவற்றையும் நோக்குக.

15. மாயோன் - திருமால். கொப்பூழ்......பூவோடு - உந்தியங் கமலத்தோடு. சீர் ஊர் புரையும் - சிறந்த ஊர் (மதுரை) ஒக்கும். பூவின் - அத்தாமரைப்பூவின். இதழகத்து - இதழ்களை, அனைய - ஒத்த. தெருவம் - தெருக்கள்: இதழகத்து - இதழ் நடுவிலுள்ள. அரும்பொகுட்டு அனைய - சிறந்த கொட்டையை ஒத்த. அண்ணல்கோயில் - அரசன் அரண்மனை: தாதின் அனையர் — (பூவின்) மகரந்தப் பொடிகளை ஒத்தனர்; தண்தமிழ்க்குடிகள் - இனிய தமிழ்க்குடிமக்கள்: தாது உண்பறவை அனையர் - அம்மகரந்தங்களை உண்ணும் வண்டுகளை ஒத்தனர்; பரிசில்மாக்கள் - பரிசிற் பொருள்களால் வாழும் மக்கள்: (பாணர் புலவர் முதலியோர்) பூவினுள் பிறந்தோன் - பிரமன்; (அவன் நாவிற்பிறந்த நான்குவேதத்தை என்க) நவில் குரல் எடுப்ப - ஓதுகின்ற ஓசை மிக்கொலிக்க. ஏம இன்துயில் - (சரீரத்திற்குப்) பாதுகாவலாகிய நித்திரையினின்றும். (எழுதல் அல்லதை என்க: ஐ சாரியை) வாழிய - அசை. வஞ்சி - (சேரனது) கருவூர்நகரம். கோழி - (சோழனது) உறையூர். கோழியின் - கோழிக்குரலால்: (நித்திரை) எழாதென்க. (உம்மைகள் எண்ணுப்பொருள்) பேரூர் நவல்குரலெடுப்பத் துயிலெழுதலல்லது துயில் கோழியின் எழாதென்றுகூட்டுக. பேரூர் - மக்களுக்கு இடவாகுபெயர். இதனால் இந்நகரத்து வேத வழக்கு மிகுதி கூறினார். இச்செய்யுளில் இரண்டாம் அடியில் மதுரை நகரத்தை விஷ்ணுவின் உந்திக்கமலத்தோடு ஒப்பிட்டு மூன்றும் அடிமுதல் ஆறும் அடிவரை அவ்வொப்புமையை விரித்துணர்த்தியிருத்தலை நோக்க. வண்டு பறவைச்சாதியாகலின் 'பறவை, என்றார். 'அறுகாற் சிறுபறவை' என்றார் பிறரும்.

*இப்பாடலின் கருத்து.*

*"கோதிலாதசெஞ்சூட்டை வாரணங்கூவ*
*ஓதஞாலத்து மற்றைய தலத்துளார் விழிப்பர்*
*ஈதலேற்றலோடறு தொழிலிரு பிறப்பாளர்*
*வேதநாதத்தின் விழிப்பதவ் வியனகர்மாக்கள்"*

*என ஆப்பனூர்ப் புராணத்தில் பயின்றுள்ளமை காண்க.*

## VIII. பிரபந்தப்பகுதி.

### 1. அறப்பளீசுர சதகம்.

1. *சீலம் - ஒழுக்கம். சௌரி - திருமால். மலரோன் - பிரமன். முச்சுடர் - சந்திரன், சூரியன், அக்கினி.*

### 2. குமரேச சதகம்.

2. *பிதா - தந்தை. அவம் - துன்பம். மவுலி - சடாமகுடம். விமலர் - குற்றமற்றவர்; சிவபெருமான். (மலம் - குற்றம் வி - நீங்கியவர்) மதலை - பிள்ளை.*

### 3. திருவேங்கட சதகம்.

3. *அகாரியம் - காரியமல்லாதது. காலம் - தம் அரசர்க்காகும் காலம். இகல் - பகைவர்கள்; ஆகுபெயர். தளம்கர்த்தன் - சேனாபதி. வாசகதாட்டி - மிடுக்குடைய வசன நடை. ராயசன் - எழுத்தாளன். (writter) கருணீகன் - கணக்கன். வண்மை - தன்மை. தானாபதி - பிரதிநிதி. மாரி - (ஆயர்களை வருத்த இந்திரன் பெய்வித்த) கல் மழை. அலர்மேலு மங்கை - லக்ஷ்மி.*

### 4. தண்டலையார் சதகம்.

4. *எரி - (அனுமான் வாலில் இராவணன் கொழுவிய) அக்கினி. குளிரவைத்தாள் - சீதை: (தன்னை விரும்பிய) வேடனை எரித்தாள் - தமயந்தி: எழு பரி - சூரியன் குதிரைகள். தடுத்தாள் - சாவித்திரி. கொக்கனவே........கூறினள் - திருவள்ளுவர் மனைவி வாசுகி: கொங்கணர் - ஒரு சித்தர்.*

5. *கூற்று - யமன். குடபால் - மேற்குத்திசை.*

## 5. மதுரைக்கலம்பகம்.

6. கூற்று - யமன்; (ஈண்டுக் கொலைத்தொழில்) அடல் ஆழிக்குரிசில்-வலிய சக்கராயுதமுடைய திருமால். பில்கி - கசிந்து. தில்லை வனம் - சிதம்பரம். அசும்பிருக்கும் பசும்பொன் - கிள்ளி எடுக்கும் தன்மையுள்ள பொன். மன்றம் - அம்பலம். பகிர்அண்டம் - புறஅண்டம். கருங்கொண்டல் - உமாதேவி. கறைக்கண்டன் - நீலகண்டன்.

## 6. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்.

7. கருவூலம் - பொக்கிஷம். உயிர் ஆலவாலம் - உயிராகிய பாத்தி. உணர்வு நீர் - நல் ஞானமாகிய தண்ணீர். எழுதாச்சொல் மழலை - வேதமாகிய மழலைமொழி. தோன்றாத் துணை - சோமசுந்தரக் கடவுள். முக்கட்சுடர் - திரி நேத்திரம்.

8. நறை - தேன். துறை - பொருள்களை நுகர்தற்குச் செல்லும் வழி. அகந்தை - அஞ்ஞானம். அகழ்ந்து - தோண்டி. தொழும்பர் - அடியார்கள். இமயப்பொருப்பு - இமயமலை. பிடி - பெண்யானை. தரங்கம் - அலை; (கடல்) உடுக்கும் - (ஆடையாக) உடுக்கும். ஒருவன்-சிவபெருமான். உயிர் ஓவியம் - உயிர்போல் அரிய சித்திரம். மதுகரம்-வண்டுகள், (தேனைச்சேகரிப்பது) வாய்மடுக்கும்-உண்ணும் மலயத்துவசன்-ஓர் பாண்டியன்; மலயமலையைக் கொடியில் எழுதியவன்; இவனுக்கு மகளாய் உமாதேவி தடாதகைப் பிராட்டியென அவதரித்தாள்.

## 7. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்.

9. (1) பெரும்புலவர் - தேவர்கள்; சங்கப்புலவர்கள் கலை அமுது - சந்திரகலையாகிய அமுது; சாஸ்திரங்களின் சுவையாகிய அமுது. கொளவிருந்தோகை - (கொளவிருந்து ஒகை) கொள்ளவிருந்திடுதலாகிய உவகை;(கொள இரும் தொகை) கொள்ளப்பெரிய மயில். தோற்றி.. உகந்தாய்-உதித்து முன்பெருகி மலைபோல அலை மோதுகின்ற அந்த அக்கினியையுடைய கடலையும் உகந்தாய் (மற்றொரு பொருள்) வெளிப்பட்டுச் சீறிக் கிரௌஞ்சகிரியைப்போலக் கடலையுந் தாக்கிய ஒளிபொருந்திய வேலாயுதத்தை உகந்தாய்; (விரும்பினாய்)

(2) இரவலர் - (இரவு + அலர்) இரவில் மலரும் அல்லி முதலிய பூக்கள்; யாசகர்கள். கோகனக நாயகன் - தாமரை நாயகனாகிய சூரியன். குக்குடம் - கோழியை. கொடியதாகவைத்தாய் - (சூரியனை அழைத்தலின்) கொடுமை செய்வதாக வைத்தாய்; துகிற்கொடியாக வைத்தாய்.

(3) இதழ்க்குமுதம் - பூவிதழையுடைய ஆம்பல்; வாயாகிய ஆம்பல். ஒளிநிலா நகைமுகிழ்த்தல் - ஒளியையுடைய நிலாவின் சந்திரிகையைப் பரப்புதல்; ஒளிபெற்ற புன்முறுவல் அரும்புதல். இவை சந்திரனுக்கும் குமரக்கடவுளுக்கும் சிலேடை. அற்பொதிகளம் - விஷம்பொதிந்த கழுத்து. அம்புலி - சந்திரன்.

## 8. திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்.

10. கத்தும்தரங்கம் - ஒலிக்கும்கடல். சூல் - கருப்பம். வாலுகம் - மணல்மேடு. கான்ற - ஈன்ற. மணி - முத்து. தத்தும் - மதம்பெருகும். கரடம் - கன்னம். மருப்பு - கொம்பு. சாலி - நெற்பயிர். தாம் - தகுதியானவிலை. அலைவாய் - திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்.)

## 9. அழகர்கலம்பகம்.

11. கிழங்கை - கிழங்குகளை. கிழம் - கிழப்பருவம். பலம்-பழம். பலம் - பயன். இலை - தழைகள். பேறு இ(ல்)லை- நன்மையில்லை. சருகு - காய்ந்த இலை. சருகு - தேகவாட்டம். வாயு - காற்று. வாயும்மௌனம் - வாயும்பேசாமை. தீ - யாகத்தீ. தீயரே - (வேள்வித்) தீக்களையுடையவரே; கெட்டவர்களே. அருந்தவம் எது அவம் - அரியதபஸ் என்னபயன்வீண். இதில் ஆட்படீர் பட்டால் அருந்தவமே தவம் (உண்மைத்தவமாகும்.) எனவும் பொருள் தோன்றும். இச்செய்யுள் மடக்கு என்னும் சொல்லணி.

12. மறலி - யமன். கதை - வரலாறு. கதை - தண்டாயுதம். சாமும் - மூச்சும். தனுவும் - உடம்பும். திக்கு - ஆதாரம். சீதாசஞ்சீவி - லக்ஷ்மிகாந்தனாகிய உயிரை மீண்டளிக்கும்மூலிகை. நமன் - யமன். தோற்றிடீர் - தோல்வியடையீர். தோற்றிடீர் - பிறக்கமாட்டீர்கள். இரண்டாமடியில் யமன் கதைக்கு எதிரே

உங்களது குணத்தொனியும் அம்பும் வில்லும் வலியழிந்து கெடும் என்றும் தொனிக்குமாறு சொற்கள் அமைந்திருத்தலை நோக்குக. (குணம் - வில்தொனி. சரம் - அம்பு. தனு - வில்).

## 10. திருவரங்கக் கலம்பகம்.

(ஊசல்)

13. உருமாறி - உருவம் மாறிமாறி. ஊசல் ஆடுவது - ஊஞ்சல் போல் அலைவதனை. கருமாயத்து என்னெஞ்சை - மிக்கவஞ்சனையையுடைய என்மனத்தை. பலகை - ஊஞ்சற் பலகை,

14. அரவு - காளியன் என்னும் பாம்பு. உரவில் - வலிய (சிவனது) வில். அடவி - காடு. புடவி - பூமி. இடந்தான் - கோட்டிற்குத்தியெடுத்தவன். குரவை - எழுவர் கைகோத்தாடும் கூத்து. பிணைத்தான் - கைகோத்துஆடினவன். பரவை அணைத்தான் - கடலை அடைத்தவன். (பரவை; பரந்தது) அலை - பாற்கடல். முரன் - ஓர் அசுரன். கரன் — ஓர் அரக்கன். அத்தி — கஜேந்திரன் என்னும் யானை (ஹஸ்தி) பரமபதம் - வைகுண்டம் சரமவிதத்தான் — சரமோபாயத்தைத் (பிரபத்தியைத்) தன்னை அடையும் வழியாகவுடையவன். பாயல்வடத்தான் - சயனமாக ஆலிலையைக் கொண்டவன். (வடம் ஆலமரம்) இலைக்குஆகுபெயர். கோயில் இடத்தான் - திருவரங்கத்தை இடமாகவுடைய பெருமாள்.

15. வடகுன்றம் - மேருமலை. மூதுஅண்டம் - பழைய அண்டங்கள். (முதுமை + அண்டம் = மைகெட்டு ஆதி நீண்டது) அயின்றவர் — (பிரளயகாலத்தில்) உண்டவர். குடகு - குடகுமலை; சையகிரி. இழிந்து — வழிந்துபெருகி. இப்பாட்டில் பிராசமும் ஓசையும், இனிமை பயப்பது.

# IX. தனிப்பாடற் பகுதி.

1. முப்பால் — அறத்துப்பால், பொருட்பால் காமத்துப்பால் களையுடையதிருக்குறள் திறம் — அவற்றின் வகை. உரைத்தான் - திருவள்ளுவர். குறுமுனி - குறுகிய அகத்தியமுனி.

2. (இரண்டாம்அடி) ஆட்டுக்கு – ஆடலுக்கு ஆட்டை ஆடலை; (ஆட்டுக்குட்டியை.) புலி – வியாக்கிரபாத முனிவர் வம்பு – புதுமை; வாசனை.

3. களபம் – யானைக் கன்று; கலவைச்சந்தனம். மாதங் கம் - யானை; பொன். வேழம் - யானை; கரும்பு. பகடு – யானை; எருமை. கம்பமா – கம்பத்தில் கட்டும் யானை; கம்பரிசியின்மா. கைம்மா - யானை. பாணன், யானைக் குரிய பல பெயர் களை மாற்றிச்சொல்லப் பாணி, அதற்கு வேறு பொருள் செய்த தாகப் புலவர் கூறியது நகைச்சுவை பயப்பது.

4. ஐங்கரன் - விநாயகர். சிணுங்குதல் - அழுதல். இதில் குழந்தைகளியல்பும் ஓர் குடும்ப இயல்பும் புலப்படுத்தி யிருப்பது இன்பமூட்டுவன. உமைக் காக்க – உங்களைக் காக்க.

5. நாகரீகம் - கண்ணோட்டம்; தாட்சண்ணியம்; சதுரப் படுமாம்.

6. மரபு - பெரியோர் வழக்கு: சோமசுந்தரகுரு - சோம சுந்தரம்பிள்ளை; இராமநாதபுரத்திற்பிறந்த புலவர். பாவாணர் - பா டலால் வாழ்பவர்; புலவர். கருணீகர் – கணக்கர். 2-ம் அடி யில் அஷ்டாவதானம் செய்யும் முறை கூறப்பெற்றுள்ளது இலக்கு - இலக்கம் கல்+நெல் கன்னெல். அனந்தநாதன் – புதுச் சேரியிலிருந்த யாதவப்பிரபு ஆனந்தரங்கம்பிள்ளை யென்பார் சேதுபதி - சேது காவலர்: இராமநாதபுர அரசர். நால்திங்கள் நான்கு மாதம். பற்றலர் - பகைவர். புறம் - முதுகு. அகளங் கன் - சோழர் பெயர் (குற்றமற்றவர்).

8. பொன்ற – அழிய. புறம் - முதுகு. திங்கள் - மாதம்

பாணாற்றுப்படை.

ஒரு வள்ளலிடம் சென்று பொருள்பெற்றுவரும்பாணன், எதிர்பட் டபாணன் ஒருவனை அவ்வள்ளலிடம் அதுபெறுமாறு வழிப்படுத் துதல். பாண்+ஆறு+படை. ஆறு - வழியில். படை - படுத்துதல்.

10. உளை - பிடரிமயிர். வாரணத்தொகுதி - யானையினது கூட்டம். யானையும் குதிரையும் பொருளும் கொண்டு வருதலால் வரும் பாணனை எதிர்ப்பட்டவன் மன்னனென்று கருதி விளித்